# பசவ புராணம்

தெலுங்கு மூலம் :

பாலகுறிக்கி சோமநாதர்



எஸ்.ஜெயப்பிரகாஷ்
எம்.சத்தியவதி
வி.ச.ஈஸ்வரி

# பசவ புராணம்

தெலுங்கு மூலம்

**பாலகுறிக்கி சோமநாதர்**

தமிழில்

**எஸ். ஜெயப்பிரகாஷ்**

**எம். ஸத்தியவதி**

**வி.ச. ஈஸ்வரி**

ஸ்ரீ திவ்யா பப்ளிகேஷன்ஸ்
67-B, கம்பர் தெரு
நாகமலை, மதுரை - 625 019

# உள்ளுரை

## அத்தியாயம் - III



## அத்தியாயம் - IV

## அத்தியாயம் - V



## அத்தியாயம் - VI

## அத்தியாயம் - VII





# அணிந்துரை

*முனைவர் ஆ. ஆனந்தராசன்*
*பேராசிரியர் (ஓய்வு),*
*சைவ சித்தாந்தத் துறை,*
*மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.*

சமயச் சடங்குகளுக்கு முதன்மை தராமல் மெய்யுணர்வுக்கும்; பக்திக்கும் முதன்மை தரும் சைவப் பிரிவு வீர சைவம் ஆகும்.

இது பன்னிரண்டாம் நூற்றாண்டில் கன்னட மாநிலத்தில் பசவரால் புத்துணர்ச்சியும் மறுமலர்ச்சியும் பெற்றது.

பம்பாய்க்கு அருகில் உள்ள கலியாணபுரத்தை பன்னிரண்டாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் ஆண்டு வந்த விச்சலன் என்னும் மன்னவன் காலத்தவராகிய வசவர் இந்நெறியை, இறைவனின் அவதாரமாகக் கொள்ளப்படும் அல்லம தேவர்பால் கேட்டுணர்ந்து பரப்பினார். வசவரை நந்தி தேவரின் அவதாரம் எனக் கொள்வர்.

உண்மை, அறிவு, இன்பம் (சத்து, சித்து, ஆனந்தம்) ஆகியவற்றைத் தன் உண்மையியல்பாக உடைய பரப்பிரம்மம் ஆகிய சிவம் சக்தியோடு கூடியுள்ளது. சூரியனுக்கும் அதன் ஒளியாற்றலுக்கும் வேறுபாடு இல்லாதது போலச் சிவத்திற்கும். சக்திக்கும் வேறுபாடு இல்லை. அச்சிவமே தன் சத்தியால் உலகமாகவும் உயிர்களாகவும் உருவெடுத்துள்ளது. எனவே எல்லாம் சிவம் என்பது இச்சமயத்தின் கொள்கை.

தலம் என்ற சொல் பரசிவ பிரம்மத்தைக் குறிக்கும். எல்லாம் தோன்றுவதற்கும் ஒடுங்குவதற்கும் மூலமாக உள்ளது என்பது அச்சொல்லின் பொருளாகும்.

பரம்பொருளே இலிங்கமாகவும், அங்கமாகவும் இரண்டு தலங்களாகப் பிரிகிறது. அவற்றுள் இலிங்கத் தலம் வழிபாட்டிற்குரியது, அங்கத் தலம் வழிபாட்டைச் செய்வது. இலிங்கம்

என்பது வழிபடப்படும் முதல்வன் அங்கம் என்பது முதல்வனை நோக்கிச் செல்லும் சீவனைக் குறிக்கும்.

சீவன் அஞ்ஞானத்தில் தன்னைப் பரம்பொருளின் வேறுபட்ட ஒரு தனிமுதலாகக் கருதுகிறது. இப் பேதவுணர்வே பிறப்பிற்குக் காரணம் எனவும். அப்பேதவுணர்வே வீட்டிற்குக் காரணம் எனவும் கூறப்படுகின்றன. முத்தி நிலையில் நீரோடு நீர் சேர்ந்தாற் போலச் சிவத்தோடு சீவன் சேர்ந்து ஒன்றும் எனக் கொள்ளப்படுகிறது.

இவ் வீரசைவ நெறி இருபத்தெட்டுச் சிவாகமங்களையும். அல்லமப் பிரபு. பசவண்ணர், சென்ன பசவண்ணர், சித்த ராமர் முதலியோர் வாக்குகளையும். சிவயோகி சிவாசாரியர், நீலகண்ட சிவாசாரியர் மக்கேய மயிதேவர் முதலியோர் நூல்களையும் பிரமாணமாகக் கொண்டுள்ளது.

தமிழ்நாட்டில் சைவ மக்களின் வழிபாட்டிற்குரிய அறுபத்து மூன்று நாயன்மார்களையும் வீர சைவம் ஏற்றுப் போற்றுகிறது; காலத்தால் முற்பட்டவர் என்ற பொருளில் அவர்களைப் 'புராதனர்' எனக் குறிப்பிடுகிறது; கன்னட நாட்டில் பின்னாளில் வாழ்ந்த அடியார்களை 'நூதன புராதனர்' எனக் குறிப்பிடுகிறது. பசவரும் அவரது சீடர்களும் இவர்களுள் இடம்பெறுவர். இவர்கள் சுருக்கமும் எளிமையும் வாய்ந்த தங்கள் வசனங்களால் வீரசைவக் கொள்கையைப் பரவச் செய்தனர்.

சைவத்திற் போலவே வீர சைவத்திலும் அடியார் வழிபாடு முதன்மை பெறுகிறது. பசவண்ணரின் வாக்கு ஒன்று பின்வருமாறு:

"பெருஞ் செல்வர்கள்

ஆலயம் எடுப்பர் பிரானுக்கு;

என்ன செய்வேன்?

ஏழை நான்;

எனது கால்களே தூண்கள்;

எனது உடம்பே ஆலயம்;

எனது தலையே கோயிலின் பொன்மாடம்;

கூடல சங்கமப் பெருமானே,

அசையாமல் நிற்பவை அழிந்து வீழும்;

இயங்குபவை என்றும் நிற்கும் அன்றோ?"

கட்டப்பெற்று நிற்பவை ஒரு காலத்தில் அழிந்துபோகலாம். ஆனால் இயங்குகின்ற சங்கமர் ஆகிய அடியார்களுக்கு என்றும் அழிவில்லை என்ற கருத்தை இவ்வசனத்தில் காணலாம்.

தமிழ்நாட்டில் வாழ்ந்த சைவ நாயனாராகிய திருமூலரே முதன் முதலில் அடியவர்களை இயங்கும் கோயில் என்று குறிப்பிட்டவர். இயங்கும் கோயில் ஆகிய அடியாருக்கு ஒரு பொருளை நல்கினால் அது இயங்காக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனைப் போய்ச்சேரும் என்ற பொருள்பட, 'நடமாடக் கோயில் நம்பற்கொன்று ஈயின் படமாடக் கோயில் பகவற்கது ஆமே'.

எனக் கூறியுள்ளார்.

பெரிய புராணத்தில் வரும் அடியார்கள் சாதி, குலம், பிறப்பினால் வேறுபட்டவர்கள்; ஆயினும் அவ் வேறுபாடுகளையெல்லாம் பொங்கியெழும் பக்தி வெள்ளத்தில் மூழ்கடித்தவர்கள். சுந்தர மூர்த்திகள் காலத்தில் வாழ்ந்த சிவனடியார்கள் திருவாரூர் திருக்கோயிலில் உள்ள தேவாசிரிய மண்டபத்தில் கூடியிருந்ததாக அறிகிறோம், அத்தேவாசிரிய மண்டபத்தைப் போலவே கன்னட நாட்டில் பசவரின் அனுபவ மண்டபம் விளங்கியது எனலாம். அவ்வனுபவ மண்டபம் ஆண், பெண் என்ற வேறுபாடின்றி சாதி, சமய பேதமின்றி எல்லோரும் தத்துவ உரையாடல்களிலும் விவாதங்களிலும் பங்குகொள்ள வாய்ப்பினையளித்தது.

பெரியபுராணம் கன்னடத்தில் கி.பி. 1200 அளவில் அரிகரர் என்பவரால் மொழிபெயர்க்கப்பட்டது. நூலின் பெயர் சிவானந்த ரகலே என்பது. புராதனரகலே என்ற மற்றொரு பெயரும் அதற்கு உண்டு.

பெல்காம் மாவட்டத்தில் அர்ச்சன வதம் என்ற இடத்தில் உறள பசவ தேவர் என்பாரின் கல்வெட்டுக் கண்டறியப்பட்டுள்ளது. அதன் காலம் கி.பி.1260 ஆகும். அதில்,

1) உறள பசவ தேவன் ஆகிய நான் அறுபத்து மூன்று நாயன்மார்களின் மலரடிகளை வணங்கித் துதிப்பவன்.

2) "வீரசைவ சமயம் ஒளிபெறுதற்குக் காரணமாய் இருந்த எனது முன்னோராகிய பசவரும் அந் நாயன்மார்களை வணங்கிப் போற்றியவர் ஆவார்" என்ற செய்திகள் பொறிக்கப்பட்டுள்ளன.

வீர சைவம் பற்றி நூல் எழுதிய அறிஞர் பலரும் பெரிய புராண அடியார்களுக்கும் வீரசைவ அடியார்களுக்கும் இடையேயிருந்த நெருக்கத்தினை மறவாமல் குறித்துள்ளனர்.

**S.C.நந்திமத்** என்ற அறிஞர் பின்வருமாறு எழுதுகிறார்.

"பசவருக்குப் பின்னே வந்த வீர சைவ அனுபூதிமான்களாகிய வசன எழுத்தாளர்கள் தங்கள் கொள்கைக்கும் தமிழ்ச் சைவ அடியார்களின் கொள்கைக்கும் இடையே எந்தவித வேற்றுமையும் கண்டிலர் என்றே சொல்லத் தோன்றுகிறது. கன்னட வீர சைவ இலக்கியங்கள் தமிழ்ச் சைவ நாயன்மார் பற்றிய குறிப்புக்களை மிகுதியாகக் கொண்டுள்ளன. பசவ புராணத்தின் பெரும்பகுதி சைவ நாயன்மார்களின் வரலாற்றைக் கூறுவதாக அமைகிறது. இந் நாயன்மார்களின் கதை கன்னட வசன எழுத்தாளர்களை மிகுதியும் ஆட்கொண்டிருக்க வேண்டும். அவர்கள் வசனங்களில் திருஞான சம்பந்தர், மாணிக்க வாசகர் ஆகியோர் பாடல்களின் தாக்கமும், சாயலும் தெளிவாகக் காணமுடிகிறது. சிவபெருமானிடத்தில் வைத்த ஆழ்ந்த பக்தி என்ற ஒன்று வேறுபாடுகளை நீக்கி இவ்விரு சாரானையும் ஒன்றுபடுத்தியது எனலாம்."

(A Handbook of Vira Saivism, P. &)

வீர சைவம் ஓர் இயக்கமாக வலுப்பெற்று அண்டை மாநிலமான தெலுங்கு தேசத்திலும் தமிழ் நாட்டின் பகுதிகளிலும் பரவியது.

வீர சைவம் தமிழ்நாட்டில் பரவிக் காலூன்றியது 16-ஆம் நூற்றாண்டில் ஆகும். இக்காலப் பகுதியில் ரேவண சித்தர் என்ற பெருங்கவிஞர் வாழ்ந்தார். அவர் சிவஞான தீபம் என்ற நூலை இயற்றினார். அது சைவ சித்தாந்தக் கோட்பாடுகளை விளக்கிக் கூறுகிற நூலாகும். அந்நூலின் கடைசியில் உள்ள நான்கு செய்யுட்கள் வீர சைவத்தைப் பற்றிக் கூறுகின்றன. சிவலிங்க தாரணமும், ஏகலிங்க நிட்டையும் இங்கே விளக்கப்பட்டுள்ளன.

தமிழ் நாட்டில் வீரசைவ நெறியைத் தழுவி நடந்த பிற பெரியோர்கள் மயிலம் சிவஞான பாலய தேசிகர், பேரூர் சாந்தலிங்க சுவாமிகள், துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் முதலியோர் ஆவர். சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றியுள்ள சோண சைல மாலை, நால்வர் நான்மணி மாலை முதலிய பிரபந்தங்கள் சைவ சித்தாந்த நெறியைப் பின்பற்றி அமைந்தவை. அவர் மொழிபெயர்த்துக் கூறிய பிரபுலிங்க லீலை என்னும் நூல் வீர சைவநெறி பற்றியதாக உள்ளது.

தமிழ் நாட்டிற் போலவே ஆந்திர நாட்டிலும் வீரசைவம் பற்றிய தெலுங்கு இலக்கியங்கள் பல தோன்றின. அவற்றுள் காலத்தால் பழைமையானது பசவபுராணம் ஆகும். பால்குறிக்கி சோமநாதர் என்ற பெருங்கவிஞரால் இயற்றப்பெற்றது. அது, சமஸ்கிருத மொழிக்கலப்பு இல்லாத, தூய்மையான தெலுங்கு மொழி நடையில் இறையடியார்களைப் பற்றியும், வீர சைவத்தின் சிறப்பைப் பற்றியும் கூறுவதற்கு முகிழ்த்த நூல் என்று இந்த மொழி பெயர்ப்பாசிரியர்கள் நூல் அறிமுகத்தில் சுட்டியுள்ளனர்.

இந்நூல் தமிழ்நாட்டிலும், தெலுங்கு, கன்னட தேயங்களிலும் வாழ்ந்த சைவ அடியார்களின் கதைகளைக் கூற எழுந்ததாயினும் அவ்வடியார்களுள் வசவண்ணரின் வாழ்க்கை வரலாற்றை முதன்மையாக எடுத்துக்கொண்டு கூறுவதால் வசவபுராணம் எனப்பெயர் பெற்றது என நூற்பெயருக்குக் காரணம் காட்டியுள்ளார்கள்.

இப்புராணத்தில் கூறப்பட்டுள்ள சிவபக்தர்களின் கதைகளை முப்பெரும் பிரிவுகளாகப் பகுத்துக்கொண்டு நோக்கலாம் என்று

கூறுகின்றனர். அப்பிரிவுகளுள், அறியாமையுள்ள பக்தர்களின் கதைகள் என்பதும் ஒன்று. அறியாமையுள்ளவர் என்றால் அவர்கள் அஞ்ஞானம் உடையவர்கள் என்று பொருள் கொண்டுவிடக் கூடாது. அப்படி நாம் நினைக்கக்கூடும் என்பதனால் தானோ என்னவோ அத்தொடருக்கு மிக விழிப்போடு விளக்கமும் தந்திருக்கிறார்கள். ஈசுவரனைத் தவிர இவ்வுலகத்தில் வேறு எந்த உண்மையும் தெரியாதவர்கள் என மிக நன்றாக விளக்கியிருக்கிறார்கள். ஆம் அவர்கள் மெய்ப்பொருளாகிய சிவம் ஒன்றையே அறிந்து நிற்பவர்கள். உலகமாகிய பொய்ப்பொருளை அறியாதவர்கள். அவ்வகையில் அவர்கள் அறியாமையுள்ள பக்தர்கள் தானே!

இந்நூல் புராணம் எனப்பெயர் பெறினும் காவியத்தன்மை வாய்ந்ததாய் விளங்குகிறது. காவியத்திற்குரிய உறுப்புக்களாகிய வருணனைகள், கற்பனைகள், உவமை, தற்குறிப்பேற்றம் முதலிய அலங்காரங்கள் போன்றவை நிரம்பவுள்ளன. ஓரிரு சான்றுகளை இங்கே தருவது பொருத்தமாகும்.

ஞாயிறு மேற்கே மறைவதை வருணிக்கிறார் கவிஞர். அதன் இயற்கையான மறைவுக்கு ஒரு காரணத்தைக் கற்பித்துக் கூறுகிறார். பசவண்ணரின் பக்தி பரவசம் என்ற புகழ் உலகமெல்லாம் இடம்பிடித்துவிட்டது. அவரது புகழ் ஒளி தனது வெளிச்சத்தைக் குறைத்துவிட்டது என்று நினைத்துச் சூரியன் மேற்கே மறைந்து விட்டானோ? என்கிறார்.

வானத்தில் விண்மீன்கள் தோன்றிப் பொட்டுப் பொட்டாக ஒளிர்கின்றன. அக்காட்சிக்கு ஓர் உவமை சொல்லுகின்றார். மோட்சம் என்ற பெரும் பகவானுக்கு ஆரத்தியெடுத்த தீபங்களைப் போல விண்மீன்கள் வானத்தில் முளைத்தன என்கிறார்.

பசவண்ணரின் பக்திச் சிறப்பை அல்லமப் பிரபு பின்வருமாறு புகழ்ந்து பேசுகிறார்.

'ஓடிக் கொண்டிருக்கும் தண்ணீருக்கு

உடம்பெல்லாம் கால்கள்;

எரிந்து கொண்டிருக்கும் நெருப்பிற்கு
உடம்பெல்லாம் வாய்;
வீசிக் கொண்டிருக்கும் காற்றுக்கு
உடம்பெல்லாம் தலை;
அதுபோலப் பசவண்ணாவுக்கு
உடம்பெல்லாம் பக்தி'

இப்படிப்பட்ட சொற்சித்திரங்களை நூலெங்கும் காண்கிறோம்.

பெரியபுராண அடியார்களின் வரலாறுகளைப் பல வேறுபாடுகளுடன் பசவ புராணத்தில் பார்க்கிறோம். காட்டாக, சிறுத்தொண்டர் என்ற பெயர் சிரியாளன் என மாறியுள்ளது. எறிபத்தர் என்ற பெயர் மாறி இங்கே இருபதாண்டாரி என உள்ளது. அதிபத்தர் இங்கே எறிபத்தர் ஆகியுள்ளார். தண்டியடிகள் விருதாண்டி எனச் சொல்லப்பட்டுள்ளார். இங்ஙனம் நேர்ந்துள்ள பெயர் மாற்றங்கள் பல. இது மட்டுல்ல. கதைச் செய்திகளிலும் வேறுபாடு புகுந்துள்ளது. காட்டாக, கண்ணப்ப நாயனார் வரலாற்றில் சிவலிங்கப் பெருமானது கண்ணிலிருந்து குருதி வழிந்ததாகப் பெரிய புராணம் கூற, கண்ணீர் பெருகியதாகப் பசவ புராணம் கூறுகிறது. பூசலார் பற்றிக் கூறும்போது அவர் கோயில் ஒன்றைக் கட்டினார் என்று இந்நூல் தெரிவிக்கிறதேயொழிய, அக்கோயிலை அவர் தம் மனத்தில் எழுப்பினார் என்று தெரிவிக்கவில்லை.

பெரிய புராணத்தையும், பசவ புராணத்தையும் முழுமையான முறையில் ஒப்பீடு செய்து நோக்கினால் இன்னும் எத்தனையோ வேறுபாடுகளைக் கண்டறியலாம்.

இத்தகைய ஒப்பீட்டு முறைக்கு உதவும் வகையில் பெரியபுராணத்தைப் பிறழ்ச்சியின்றித் தெலுங்கு மொழியில் வசன நடையில் ஆக்கித் தருவது பெரும்பயனுள்ள பணியாகும்.

பெரிய புராணத்தைத் தெலுங்கில் தரும் முயற்சிகள் சில முன்னே நடந்துள்ளதாக அறிகிறோம். வித்துவான் P. தூரிய நாராயண

சர்மா என்பவர் 'ஸ்ரீ சிவபக்த சரிதம்' என்ற பெயரில் பெரிய புராணக் கதையைச் சுருக்கித் தெலுங்கில் உரைநடையாக எழுதி 1962-இல் வெளியிட்டுள்ளார்.

பசவ புராணம் ஆகிய இம் மொழிபெயர்ப்பை முன்னின்று நடத்தி முடித்த அறிஞர் ஜெயப்பிரகாஷ் அவர்கள் பெரிய புராணத்தைக் கருத்து மாறுபடாமல் வேண்டிய செய்திகள் விடுபட்டுப் போகாமல், உள்ளது உள்ளபடி தெலுங்கில் உரைநடை வடிவில் ஆக்கித் தருகின்ற பணியை அடுத்து மேற்கொள்ள வேண்டும். அதற்கான முழுத்தகுதியும் அவர்க்கு உண்டு. அவரது பணி நாளும் சிறந்து நிறைவு பெற வாழ்த்துகிறேன்.



# என்முரை

"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்" என்ற பாரதியின் பாடல்வரிகளை நினைவில் நிறுத்தி, 'பசவபுராணம்' என்ற தெலுங்கு மொழி பக்தி இலக்கியம் எங்களால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது. மொழிபெயர்க்கும் போது நாங்கள் எதிர்கொண்ட சிக்கல் என்னவென்று கூறினால், சில தெலுங்கு மொழிச் சொற்களுக்கு சரியான பொருளினைத் தெரிந்து கொள்ள இயலாததுவேயாகும். அவைகள் தான் எழுந்த காலத்தின் மொழியமைப்பினைப் பிரதிபலிக்கும் சான்றுகளாகத் திகழ்கின்றன. மொழிபெயர்க்கப்படும் மொழியின் தன்மைக்கும் விளங்கிக் கொள்ளுதலுக்கும் ஏற்ப மொழிபெயர்ப்பு அமைப்பைப் பெறலாம் என்பதனால் தெலுங்கிலிருந்து எங்களால் சரியான முறையில் புரிந்து கொள்ள முடியாத சொற்களின் விளக்கங்கள் பொருள் சிறிதும் சிதைந்து போகாத அளவிற்கே அமைக்கப்பட்டுள்ளன. தமிழ் மொழியிலிருந்து எடுக்கப்பட்டுள்ள சிவபக்தர்களின் கதைகள் தெலுங்கு மொழிக்கும் அதன் தன்மைக்கும் ஏற்றாற் போல் ஆக்கப்பட்டிருப்பது மொழிபெயர்ப்பில் நாங்கள் கண்டதுவாகும். தமிழில், சிவ வழிபாடே சைவ சமயத்தின் முதன்மைக் கருத்தாக ஆக்கப்பட்டிருக்கின்றது. அதாவது, சைவ சமயத்திற்கு முக்கியத்துவம் தரப்பட்டிருக்கிறது. ஆனால், தெலுங்கு மொழியில் வீரசைவ சமயத்தை முதன்மைப் படுத்துவதைக் காட்டிலும் அச்சமயத்தைப் பின்பற்றும் அடியவர்களை வணங்குதலே முக்கியமாகக் காட்டப்பட்டுள்ளது என்பதனை அறிய முடிகின்றது. வீரசைவ அடியவர்களை அல்லது சிவபக்தர்களை வணங்குதலே சிவனை வணங்குதலுக்கும் சமமானதாக தெலுங்குமொழி இலக்கியமான பசவபுராணத்தின் வழி அறிந்து கொள்ள முடிகின்றது. தமிழகத்தின் சைவ சமயத்தில் சாதீய உயர்வு, தாழ்வு முக்கியமாக்கப்பட்டுள்ளது. ஆனால், தெலுங்கின் வீரசைவ சமயத்தில் சமூகத்தில் மிக உயர்ந்த சாதியாகக் கருதப்படுகின்ற அந்தணனும் அதே சமூகத்தால் மிகவும் கீழே

தள்ளப்பட்டு, ஒதுக்கப்பட்ட வண்ணான் போன்ற மற்றையவர்களும் சமமே. பக்தர்களுக்குள் வேற்றுமை பாராட்டக்கூடாது, அனைவரும் இறைவனின் சமூகத்தில் சமமே என்ற கருத்தே நூல் முழுக்க விரவி இருப்பதனைக் கண்டோம்.

இந்நூல் வெளிவர பணவுதவி செய்த திருமலை திருப்பதி தேவஸ்தான நிர்வாகிகளுக்கும் இந்நூலைச் சிறப்பிக்கும் வகையில் அணிந்துரை வழங்கிய பேராசிரியர் ஆ. ஆனந்தராசன் அவர்களுக்கும், இம்மொழிபெயர்ப்பு நூலைச் செம்மையாக்கம் செய்து உதவிய பேராசிரியர் து. சேதுபாண்டியன், பேராசிரியர் ச.சாம்பசிவனார் முனைவர் எம். தேவகி, ஆய்வாளர் திரு. முத்துராமன், ஆய்வாளர் திரு. ஆ.பூமிச்செல்வம் ஆகியோர்களுக்கும், இந்நூலின் முகப்பிற்கு வடிவம் தந்துதவிய நண்பர் திரு.ரவிக்குமார் அவர்களுக்கும், இந்நூலை எழிலுற வடிவமைத்துக் கொடுத்த மாரீஸ் கிராபிக்ஸ் (அஜந்தா) அச்சகத்தாருக்கும் எங்கள் நன்றி என்றும் உரியது.

*மதுரை*
*ஆகஸ்ட் 2002*

**நூலாசிரியர்கள்**



# பசவபுராணம் - அறிமுகம்

எம்மொழியாயினும் எத்தேசமாயினும் இறைவன் என்ற பரம்பொருள் ஒன்றே. அப்பரம்பொருள் சிவமாக - சிவ்லிங்கமாக மட்டுமே இருக்கமுடியும் என்பது சைவசமயத்தின், குறிப்பாக வீர சைவத்தின் உறுதிப்பாடாக அமைந்தது. அச்சிவனை வணங்குவதற்கும் வழிபடுவதற்கும் எந்த விதிமுறைகளும், குலகோத்திர கட்டுப்பாடுகளும் தேவையில்லை. எவரும், எம்முறையிலேயும் சிவனைப் பூசிக்கலாம் என்ற வகையில் மதக்கட்டுப்பாடுகளைத் தகர்த்துக்கொண்டு தன் கட்டுக்களை விடுவித்துக்கொண்டு வெளிவரும் சுதந்திரப்பறவைப்போல வெளிவந்த சமயமே வீரசைவம் ஆகும். இந்த சமயத்தை வலியுறுத்த எந்தவித மொழிக்கலப்பும் இல்லாது தூய்மையான தெலுங்கு மொழிநடையில் இறையடியார்களைப் பற்றியும் இறைவனது தன்மை பற்றியும், வீர சைவ சமயத்தின் சிறப்பைப் பற்றியும் அக்காலச் சமூக இயைபோடு முகிழ்த்த நூல் .பசவபுராணம் ஆகும்.

### *நூற்பெயர் விளக்கம்*

சைவ அடியார்கள் எழுபத்தைந்து பேர்களுடைய வாழ்க்கை வரலாற்றைக் கூறுவது இந்நூல். எனினும் நந்தி தேவனுடைய அவதாரமாகக் கருதப்பட்ட பசவண்ணரின் வாழ்க்கை வரலாற்றை முதன்மையாகக் கூறுவதால் இந்நூல் பசவபுராணம் என்று பெயர் பெற்றுள்ளது. மக்களின் வழக்கில் உள்ள சிவத்தொண்டர்களின் கதைகளை எடுத்துக்கொண்டு, தனது கற்பனைக் கதைகளைத் தவிர்த்து நூல் வடிவம் கொடுத்துள்ளார் பால்குறிக்கி சோமநாதர். இவரது நூலில் குருவணக்கம் காணப்படுகிறது. இவர் தனது குருவாக 'கரஸ்தலி விஸ்வநாதய்யா' என்பாரைக் குறிப்பிடுகிறார்.

### *பெற்றோர்*

இவரது தாயார் சிரியாதேவி, தந்தையார் விஷ்ணு ராமதேவன். இந்த குறிப்பு பசவபுராணத்தில் மட்டுமே காணப்படுகின்றது. (பால் குறிக்கி சோமநாதர், பசவபுராணம் மு.ப.1, ப.4) வேறு எந்த இடத்திலும் இது பற்றிய குறிப்பு காணப்படவில்லை என்பர் தெலுங்கு இலக்கியத்திறனாய்வாளர். 'பண்டிதராத்யா சரித்திரம்' என்ற நூலின் முன்னுரையில் தனது தாயாக

உமாதேவியையும், தந்தையாக ருத்ர மூர்த்தியையும் குறிப்பிடுகின்றார் பால்குறிக்கி.

## இவரது மற்றைய படைப்புக்கள்

1. அனுபவசாரமு 2. பண்டிதராத்ய சரித்திரம் 3. விருஷாதிப சதகம் 4. சதுர்வேத சாரமு 5. சென்னமல்லு சீசாலு 6. நமஸ்கார கத்யாலு 7. பஸவரகட 8. பஸவாஸடகமு 9. பஸவ உதாகரணம் ஆகியவை இவரது பிற படைப்புக்கள் ஆகும். இவை தவிர உதாகரணமு என்ற முதல் தெலுங்கு இதழை அறிமுகப்படுத்திய பெருமையும் இவரையே சாரும்.

## பசவபுராணத்தின் இயல்பகுப்பு

பசவபுராணம் ஏழு அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டு உள்ளது. இதில் முதல்கதை பசவண்ணாவைப் பற்றியது. என்றாலும் தமிழ், கன்னடம், தெலுங்கு உள்பட பல்வேறு மாநிலத்தினைச் சார்ந்த எழுபத்தைந்து சிவபக்தர்களின் கதைகள் கூறப்படுகின்றன. இவருக்கு முன்னும், இவர் காலத்திலும் வாழ்ந்த சிவபக்தர்களின் கதைகள் கூறப்படுகின்றன. பெரியபுராணத்தில் கூறப்பட்டுள்ள 33 சைவ அடியார்களின் கதைகளும் இதில் கூறப்பட்டுள்ளன. அவ்வாறு தெலுங்கு மக்களின் மனதில் இடம்பிடித்த தமிழ் நாயன்மார்கள்

I. 1. கண்ணப்பர்

2. கலிக்கம்பர்

3. எனாதி நாயனார்.

II. 1. திருநீலகண்டர் (த) கும்மரிகுண்டையா (தெ)

2. அரிவாய்தாய நாயனார் (த) சங்குலா தாயுடு (தெ)

3. திருஞானசம்பந்தர் (த) பிள்ளை நயினார் (தெ)

தமிழகத்தைச் சேர்ந்த இவர்களைப் போன்ற முப்பத்து மூன்று சிவபக்தர்கள் தவிர ஏனைய கன்னடம், தெலுங்கு ஆகிய தேசங்களைச் சேர்ந்த ஐம்பத்தொரு சிவபக்தர்களின் கதைகளும் ஒரே அத்தியாயத்தில் இடம் பெறவில்லை. நூலின் ஏழு அத்தியாயங்களிலும் ஆங்காங்கே விரவி காணப்படுகின்றன.

### அமைப்புமுறை

புராணம் என்று கூறப்பட்டாலும் இது முதன்முதலில் பால்குறிக்கி சோமநாதரால் படைக்கப்பட்ட சிவபக்தர்களின் கதைகளைக் காவியம் என்றே தெலுங்கு இலக்கிய வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். திருக்குறள் போல இரண்டு இரண்டு அடிகளைக்கொண்ட 'திவிபத' (த்விபதம் = இரண்டடியாப்பு) என்ற யாப்பு வடிவில் பாடல்கள் அமைந்துள்ளன. இராகத்துடன் பாடக்கூடிய வகையில் இந்த யாப்பு அமைந்துள்ளது.

பசவபுராணத்தின் மொழிநடை மிகவும் எளிய நடையாகும். அன்றைய மக்களின் பேச்சு வழக்கில் இருந்த தெலுங்கு மொழியிலேயே அமைக்கப்பட்டுள்ளது. மக்கள் பேசும் தெலுங்கு மொழியை ஜானு தெலுங்கு என்று கூறுவர். அதில் இன்றைய தெலுங்கு மொழியில் புழக்கத்தில் இல்லாத, அன்றைய தெலுங்கு மொழியில் புழக்கத்தில் இருந்த சில பதங்கள் அதிகமாகக் கையாளப்பட்டன. அத்தகை நடையையே பால்குறிக்கி பின்பற்றியுள்ளார். சமஸ்கிருதத்தில் படைப்பு அமைந்திருப்பின் பிறரால் எளிதில் அங்கீகரிக்கப்படும் என்றும் கருதப்பட்ட அக்காலத்திலேயே சமஸ்கிருத மொழிக்கலப்பு சிறிதும் இன்றி, தெலுங்கு தேசத்திற்கே உரித்தான தெலுங்கு மொழியிலேயே இந்நூலினைப் படைத்துப் புரட்சியைச் செய்துள்ளார் பால்குறிக்கி.

### பசவண்ணரின் கதை

கர்நாடகா தேசத்தில் மாதிராசு, மாதாம்பா என்ற தம்பதியர் இருந்தனர். குழந்தை இல்லாத அவர்களுடைய கவலையைத் தீர்க்க நந்தீஸ்வரர் அத்தம்பதிக்கு மகனாக அவதரித்தார். குழந்தை பிறந்த உடனேயே கூடலி சங்கமேஸ்வரர் முனிவர் வேடத்தில் அவர்கள் வீட்டிற்கு எழுந்தருளுகிறார். இறைவனுக்குப் படைத்த பின்னே அக்குழந்தைக்கு எதனையும் கொடுக்க வேண்டும் என்று கூறி மறைகிறார்.

குழந்தையின் எட்டாவது வயதில் உபநயனம் (பூநூல் அணிவிக்க) செய்ய ஏற்பாடு செய்கின்றனர். அந்த வயதிலேயே சிவபெருமானிடம் அதிக ஈடுபாடு கொண்டிருந்த பசவண்ணா தனக்கு உபநயனம் செய்ய வேண்டாம் என்று மறுத்து இறைவனை வழிபட பக்திதான் தேவை. பிராமணீயம் தேவையில்லை என்கிறார்.

இக்கருத்து வேறுபாடு காரணமாக இவர் தம் தந்தையைப் பிரிந்து, தனது தங்கையை அழைத்துக்கொண்டு தனது மாமன் வீடு செல்கிறார். இவரது மாமன் கல்யாண கடகத்தில் பிஜ்ஜலன் என்ற மன்னனிடம் தண்ட நாயக்கனாக (சேனாதிபதி) இருக்கிறார். இவரது பெயர் பலதேவர். இவருக்கு ஒரு மகள் இருக்கிறாள். அவள் பெயர் கங்காம்பாள். பலதேவர் தனது மகளை ஒரு சிறந்த சிவபக்தனுக்குத்தான் மணம் முடித்துக் கொடுக்கவேண்டும் என்ற விரதம் பூண்டு இருக்கிறார். அவ்விதமே பசவண்ணருக்குத் தனது மகளை மணம் முடித்துக் கொடுக்கிறார்.

பசவண்ணர் திருமணத்திற்குப் பின்பு கூடலி சங்கமேஸ்வரரை தரிசிக்கச் செல்கிறார். அப்போது கூடலி சங்கமேஸ்வரர் முனிவர் வேடத்தில் பசவண்ணரின் முன்பு தோன்றி, சிவபக்தர்கள் என்ன தவறு செய்தாலும் அதனை நீ நல்லதாகவே ஏற்றுக்கொள்ள வேண்டும். சத்ருவாயினும் லிங்கம் தரித்திருந்தால் அவர்களைத் தோழனாய்க் கருத வேண்டும் என்று உபதேசிக்கிறார். மேலும் பக்தர்களது குலம் என்னவென்று எப்பொழுதும் ஆராய்ச்சி செய்யாதே. சிவ துவேசகர்களை நீ நேரடியாய்க் கொள்வது தான் முறை; அப்படிச் செய்தேனும் உலகில் சிவபக்தியை நிலைநாட்ட வேண்டும் என்று கூறுகிறார். ஈசுவரரின் பொலிவைப் பசவன்னா புகழ்ந்து பாடுகிறார்.

பசவண்ணாவின் மாமன் சின்னாட்களில் இறைவன் அடியைச் சேர, அவரது பதவியை மன்னன் பிஜ்ஜலன் பசவண்ணாவுக்குக் கொடுக்கிறார். கல்யாண கடகத்தில் தனது பணியை மேற்கொண்டு அங்கேயே இருக்கிறார் பசவண்ணா. அவ்வூரில் இலட்சத்து எண்பதினாயிரம் சிவபக்தர்கள் இருந்தனர். அந்த சிவபக்தர்களுக்கு எல்லாம் வேண்டியன கொடுத்து நன்முறையில் பார்த்துக்கொண்டார்.

பசவண்ணரின் தங்கை நாகமாம்பாளுக்குத் திருமணம் முடிந்து ஒரு குழந்தை பிறக்கிறது. அக்குழந்தையின் பெயர் சென்ன பசவண்ணன். சென்ன பசவண்ணன் வளர்ந்து பசவருக்கு வலதுகரம் போல் உறுதுணையாய் இருக்கிறான்.

இதற்கிடையே ஒரு நாள் அல்லம பிரபு என்பவர் பசவண்ணரின் வீட்டிற்கு வருகிறார். அவரை இவர் நன்றாக உபசரிக்கிறார். அல்லம பிரபு உணவருந்தி, மகிழ்ந்து பசவண்ணரின் வீட்டில் இருந்து கிளம்பும்போது பசவண்ணருக்கு நிறைய வரங்களை அளித்துச் செல்கிறார். அன்றிலிருந்து பசவண்ணா அருள் பெற்றவராகி, நிறைய அற்புதங்களைச் செய்கிறார்.

***சான்று***

ஒரு முறை சில திருடர்கள் பசவண்ணரின் வீட்டிற்குத் திருட வருகின்றனர். அவர்கள் கத்திரிக்காயைத் துணியில் கட்டி, கழுத்தில் கட்டிக்கொண்டு சிவபக்தர்கள் கழுத்தில் சிவலிங்கம் அணிந்திருப்பது போன்று வருகின்றனர். நீங்கள் சிவபக்தர்கள் ஆனபடியால் நீங்கள் இறைவனுக்குச் சமம் என்று பசவண்ணா அவர்களிடம் கூறி, அவர்களை மகிழ்வுடன் அழைத்து உபசரிக்கிறார். அவர்கள் வேண்டுவனவற்றை யெல்லாம் கொடுத்து உபசரிக்கிறார். திருடர்களும் அதன்படியே உட்கார்ந்து நன்றாக சாப்பிடுகின்றனர். அத்திருடர்கள் கழுத்தில் இருந்த கத்தரிக்காய் அத்தனையும் சிவலிங்கங்களாக மாறின.

***பசவபுராணம் எழுதியதின் முக்கிய நோக்கம்***

சிவபக்தியை நிலைநாட்டுவதே பசவபுராணம் எழுதியதின் முக்கிய நோக்கமாகும். பசவண்ணரின் வாழ்க்கை வரலாற்றில் சிவபக்தர்களுக்குத் தடையாக இருக்கும் வைதிகர்கள், சமணர்கள், பௌத்தர்கள் போன்றவர்களைக் கொன்றாவது சிவக்தியை நிலைநாட்டுதல் வேண்டும் என்று பசவண்ணர் கூறுவதாக பால்குறிக்கி எழுதிச் செல்கிறார். இதன்மூலம் வீரசைவத்தை நிலைநாட்ட வேண்டும் என்கிறார். பிராமணர்களால் உருவாக்கப்பட்ட வைதிக சமயமோ, அச்சமயம் கூறும் உபநயனம் போன்ற சடங்குகளோ யாகம் போன்றவைகளோ வேதஸ்லோகங்களை வீர சைவ சமயத்திற்கு முக்கியமல்ல. இவற்றைப் பின்பற்றுவதால் மட்டுமே இவர்கள் உயர்ந்தவர்களாய் மாறிவிட முடியாது. குலத்தால் தாழ்ந்தோராயினும் உண்மையான சிவபக்தியைக் கொண்டவரே உயர்ந்தோர் என்ற பசவண்ணரின் கூற்றின் மூலம்; வைதீக சமயச்சாடலும், சிவபக்தர்களைக் காட்டிலும் அவர்கள் எந்த விதத்திலும் உயர்ந்தவர்கள் அல்லர் என்ற கருத்தும் பசவபுராணத்தில் வலியுறுத்தப்படுகின்றது.

*சிவபக்தியின் சிறப்பு*

சிவபக்தி உடையவர்கள் ஒரு நல்ல குடும்பப் பெண்ணுக்கு ஒப்பானவர்கள் என்று கூறும் பசவண்ணர், உயர்ந்த குலமே மிகவும் முக்கியம் என்று கூறும் பிறரைக் கடுமையாகச் சாடுகிறார். இவ்வுலகத்தில் சிவனை மட்டும்தான் நினைக்க வேண்டும். சிவனைத்தவிர வேறு தேவர்கள் நினைத்தால் அது இருபத்து ஒன்பது கோடி நரகம் வந்து சேருவதற்குச் சமமாகும் என்று கூறுகிறார்.

## இயற்கை வாழ்வோடு இயைந்த படைப்புத்தன்மை

பசவபுராணம் நூல் முழுவதும் வர்ணனை அதிகமாக வருகின்றது. எந்த பாத்திரத்தைப் பற்றி கூறுகின்றாரோ அந்த பாத்திரமாகவே மாறி அப்பாத்திரத்தையே படிப்பவரின் கண்முன் கொண்டுவந்து நிறுத்தி, அப்பாத்திரத்தின் உணர்வோடு ஒன்றச்செய்து விடுகின்றார்.

*சான்று*

கொடகூச்சி என்ற கதையில் ஒரு சிறுமி சிவபெருமானுக்குப் பால்கொண்டுவந்து படைக்கிறாள். இறைவன் அப்பாலினை ஏற்றுக்கொள்ளாது அப்பாலானது அப்படியே இருக்கின்றது. அதனைக் கண்ட அக்குழந்தையின் மனநிலையைப் பின்வருமாறு விளக்குகிறார்.

.... பால் பாத்திரத்தை சிவன் முன்னே வைத்து வணங்கி, இதனை நீ சாப்பிட வேண்டும் என்றாள். பின் கொஞ்சதூரம் சென்று மறைவாய் நின்று பின்வந்து பார்க்கும்பொழுது பால் பாத்திரத்தில் அப்படிவே இருந்தது. அச்சிறுமி பயந்து எதனால் பாலைக் குடிக்கமாட்டேன் என்கிறாய்? பால் நன்றாகக் காய்ச்சப்படவில்லையா? சுவையாயில்லையா? பழைய பாலோ என்று நினைத்தாயோ? தாமதமாய் விட்டதோ என்று நினைத்தாயோ? ஒரு வேளை புகை பாலிலே பட்டு புகைமணம் வருகின்றதோ? இப்பால் இப்பொழுது வேண்டாம் என்று நினைத்தாயோ? பாலிலே நெய்கலந்து கொண்டுவரவில்லை என்று நினைத்தாயோ? அல்லது பால் சூடாக இருக்கிறதா? தண்ணீர் கலந்து உள்ளது என்று நினைத்தாயோ? பக்க வாத்தியங்கள் இவை போன்றவற்றுடன் வந்து உன்னைச் சிறப்புச் செய்யாது தனியாக நான் மட்டும் கொண்டு வந்ததைக் குறையாகக் கருதுகிறாயா? இது பசும்பால் இல்லை என்று நினைத்தாயோ? பால்மீது இச்சிறுமிக்கு

ஆசை இருக்கிறது என்று நினைத்தாயோ? பாத்திரம் சரியாயில்லையா அளவு சரியாயில்லையா எப்படி பரிமாறுவது என்று தெரியாமல் அப்படியே கொண்டு வந்து உன்முன் வைத்துவிட்டேன் என்று கோபிக்கிறாயா? நான் கொண்டு வரும்போது யாரேனும் பார்த்துவிட்டார்கள் என்று நினைக்கிறாயா? சும்மா எதற்காகப் பால் வேண்டாம் என்று கூறுகிறாய்? நீ பாலைக் குடிக்காததற்கு ஏதாவது காரணம் இருந்தால் கூறு. உண்மையாக உனக்கு குடிக்க இஷ்டமில்லாவிட்டாலும் எனக்காக ஒரு மடக்காவது குடி போதும். பாலைக்குடிப்பதற்கு ஏன் அடம்பிடிக்கிறாய்? வீட்டில் சாதம் இருக்கிறது. உரியில் நெய் இருக்கிறது. அதனையும் உனக்குக் கொண்டு வந்து தருகிறேன். பாலில் நனைத்து உண்பதற்காக அவல் கொண்டு வருகிறேன், பாலைக்குடி. இச்சிறுமி பார்த்துக்கொண்டு இருக்கிறாளே எப்படி குடிப்பது நான் மட்டும் என்று நினைக்கிறாயா? இருவரும் சேர்ந்தே குடிக்கலாம். என் பெற்றோர் ஊருக்குச் சென்றிருக்கிறார்கள். அவர்கள் திரும்பிவரும்போது பொம்மை, பழங்கள் போன்றவற்றைக் கொணர்வார். அவற்றை உனக்குத் தவறாது கொடுக்கிறேன். உன்மேல் ஆணை நீ பாலைக்குடி. பால் ஆறிப்போய்விட்டதா? என்று பலவாறு வினவுகிறாள். ஏன் பேசமாட்டேன் என்கிறாய்? ஏன் என்னைத் தொந்தரவு செய்கிறாய்? என்று கேட்டு, ஈசுவரரின் பாதங்களில் நெடுஞ்சாங்கடையாக விழுந்து வணங்குகிறாள்.

பின்பு, இறைவனைக் கோபித்துக் கொள்கிறாள். பயம் காட்டுகிறாள். குதிக்கிறாள்; கத்துகிறாள்; காலால் தரையை உதைத்து அழுகிறாள். கீழே விழுநது புரண்டு ஓவென சத்தமிட்டு அழுகிறாள். பால் இருக்கும் இடத்தைப் பார்த்து, பின் சிவனைப் பார்த்து கீழே விழுகிறாள். உயிர் போனது போன்று கீழே விழுந்து நடிக்கிறாள். மீண்டும் எழுந்து ஓவென அழுகிறாள். பாத்திரத்தைத் தூர ஒருமுறை தள்ளி பின்பு மீண்டும் கொண்டு வந்து வைப்பாள்; நான் என்ன செய்தாலும் பாலைக் குடிக்க மாட்டேன் என்கிறாய். நீ பாலைக் குடிக்காவிட்டால் எங்கள் ஆட்கள் வந்தால், என்னைக் கொன்று விடுவார்கள். அதில் சந்தேகமில்லை. உயிர்போவது உறுதி. வீட்டிற்குப் போய் உயிரை விடுவதைவிட, இங்கேயே உயிரை விட்டு விடுகிறேன் என்று தலையைத் தூணில் மோத ஆரம்பிக்கிறாள். உடனே சிவன் அச்சிறுமியின் முன்னே வந்து கருணை

ததும்பும் புன்னகை முகத்தோடு காட்சியளிக்கிறார். அப்பாத்திரத்தின் பாலை எடுத்துக் குடிக்கிறார். அதற்குப்பின், அச்சிறுமி மகிழ்ந்தாள். பின்பு சிவனைப் பார்த்து நான் சிறுமி என்று என்னை இவ்வளவு துன்பப்படுத்தினாய்? என் அண்ணாவிடம் சொல்லி உன்னை என்ன செய்கிறேன் பார். இதையெல்லாம் மறக்காதே என்று கூறி, பாத்திரத்தைக் கொடு என்று கேட்டு வாங்கி நேரே வீட்டிற்குச் சென்றாள்.

இக்கதை நிகழ்ச்சியின் இந்த விவரணையில் ஒரு சிறுமியின் மனநிலை இதுபோன்ற தருணத்தில் எப்படி இருக்கும் என்பதனை அப்படியே படைத்துக்காட்டுவதுடன் இச்சிறுமியாகவே மாறி அப்பாத்திரத்தினோடு ஒன்றிச் செல்கிறார் பாலகுறிக்கி.

இதுபோன்ற சிவஸ்துதி எங்கெல்லாம் வருகின்றதோ அங்கெல்லாம் தன்னையே மறந்து தெய்வீக உணர்வில் லயித்து பாடிச் செல்கிறார்.

பசவனி சரணன்ன பரமபாவனமு
பசவனி சரணன்ன பாக்யமுல்வந்து
பசவனி சரணன்ன பாயு ஆபதலு
பசவனி சரணன்ன ப்ரபலு சம்பதலு.

(பசவபுராணம் 1–4)

இதுபோன்ற குறைவான சொற்களில் நிறைவான பொருள் தரும்படி கூறுவதனையே நல்ல கவிதை என்கிறார் பாலகுறிக்கி. இந்நூலினுள் கூறப்பட்டுள்ள சிவபக்தர்களின் கதைகளை முப்பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவையாவன.

1. அபூர்வ சக்தி படைத்தவர்களின் கதைகள்.
2. அறியாமையுள்ள பக்தர்களின் கதைகள்.
3. வீரசைவத்தை நிலைநாட்டுவதற்காக கூறப்பட்ட கதைகள்.

(என். நாகையா, திருப்பதி ப. 110).

### *1. அபூர்வ சக்தி படைத்தவர்களின் கதைகள்*

சிவபக்தர்கள் சிவனைக் கூப்பிட்டதும், சிவன் உடனே காட்சி தந்து அவர்கள் வேண்டுவன யாது? எனக் கேட்டு அருளல். அழைத்ததும்

இறைவனைக் காணும் சக்தி படைத்த இவர்களை சிவனைக் காட்டிலும் அபூர்வ சக்தி படைத்தவர்களாகக் காட்டுகிறார்.

*சான்று*

கின்னாரபிரம்மய்யா

கதை – தனது சோதனை காலத்தில் இறைவனை அழைத்ததும் சிவபெருமான் தரிசனம் கொடுத்து, குறைகேட்கிறார்.

## 2. *அறியாமையுள்ள பக்தர்களின் கதைகள்*

ஈசுவரனைத் தவிர இவ்வுலகத்தில் வேறு எந்த உண்மையும் தெரியாதவர்கள் என்ற காரணத்தால் இவர்களை அறியாமையுள்ள பக்தர்கள் என அழைக்கலாம்.

*சான்று*

பெஜ்ஜ மகாதேவியின் கதையில் இந்தப் பெண்மணி இறைவனின் நஞ்சுண்ட கண்டத்தைப் பார்த்து ஒரு தாயின் மனநிலையோடு அறியாமை நிறைந்த புலம்புகிற, நிலை.

## 3. *வீரசைவத்தை நிலைநாட்டுவதற்காகக் கூறப்பட்ட கதைகள்*

இக்கதைகளின்

1. பக்தியே பிரதானமாகப் பேசப்பட்டது.
2. சாதி, மத வேறுபாடுகள் இந்த வீரசைவத்தில் இல்லை என்பது வலியுறுத்தப்பட்டது.
3. சிவன்தான் எல்லா தேவர்களிலும் உயர்ந்தவர் எனக்கூறும் நிலை.

*சான்று*

1. கண்ணப்பர் வேடராயினும் அவரது பக்தி வன்முறையானதாக இருப்பினும் இறைவனால் மெச்சப்பட்டது.
2. மடிவாலு மாசய்யா என்ற கதையில் மாசய்யா தாழ்த்தப்பட்ட சாதியைச் சேர்ந்தவராக இருப்பினும் இறைவனால் இவரது பக்தி பாராட்டப்பட்டது.

3. கன்னட பிரம்மய்யா கதையிலும் பிரம்மய்யா கன்னமிட்ட போதும் அவரது செயல் இழிநிலை அல்ல என்று ஏற்றுக் கொள்ளப்பட்டது.

## தொகுப்புரை

1. பசவபுராணம் வீரசைவத்ததை நிலைநாட்டத் தோன்றிய நூலாகும்.
2. சாதியும் சமயமும் ஒரு பொருட்டல்ல, உண்மையான சிவபக்தி உள்ள எவரும் உயர்ந்தோரே என்ற கருத்து இந்நூலில் வலியுறுத்தப்படுகிறது.
3. சிவபெருமானைப் பூசிக்கும் பொருட்டோ அல்லது சிவபக்தர்களுக்கு செய்யும் சிறுசிறு தவறுகளும் மறக்கப்படவேண்டும் என்பது பசவன்னரின் கட்டளையாகப் பின்பற்றப்பட்டது.
4. இந்நூல் இரண்டடி யாப்பில் மிக எளிய நடையில் எல்லா மக்களும் புரிந்து கொள்ளும் வகையில் இயற்றப்பட்டுள்ளது.
5. பிறமதச்சாடல் - வீரசைவக் கொள்கைக்குப் புறம்பான கொள்கையுடை வைதிகர்கள், சமணர்கள் போன்றோரை அதிகமாகச் சாடுகிறது. இந்நூல் அப்படிப்பட்டவர்களைக் கொன்றவாறு வீரசைவத்தை - வீரசைவதருமத்தை நிலை நாட்டவேண்டும் என்பதும் வலியுறுத்தப்படுகிறது.
6. உலக நடைமுறையில் ஒரு பாத்திரத்தின் ஏதாவது ஒரு செயலை நாம் எவ்வாறு கண்கூடாகக் கண்டு உணர்கிறோமோ அல்லது அக்குறிப்பிட்ட செயலில் நம் மனநிலை எப்படி இருக்குமோ அதனையே பசவபுராணம் முழுதும் காண முடிகின்றது. உண்மையாகி அப்பாத்திரமே கண்முன் நிழலாடுமாறு செய்கிறார் பசவண்ணர்.



# பசவ புராணம்

## முதல் அத்தியாயம்

### துதி

நல்ல உள்ளமும் கருணையும் கொண்ட என் குருதேவரை வணங்கி, என் இதய நாயகனான சென்ன மல்லிகார்ஜுனனை உறுதியாக நிறுத்தி, அழியாத உருவம் பெற்ற தேவகணங்களை நினைத்து, சிவபக்தர்கள் அனைவரையும் துதித்து பசவசரிதத்தினை இப்பூவுலகிற்கு நான் கூறப்போகிறேன்.

### ஸ்ரீ பர்வதம்

சிவபெருமானுக்குச் சிம்மாசனமாகவும் அவருக்கு உருவம் கொண்ட ஸ்தலமாகவும் சிவபக்தர்களுக்குத் தவம் செய்ய ஏற்ற இடமாகவும் எல்லாத் தீர்த்தங்களுக்கும் தாயாகவும் ஒரு மலை உண்டு. அதற்கு ஸ்ரீபர்வதம் என்று பெயர். இப்படிப்பட்ட மலைக்குக் குமாரமலை ஒன்று உண்டு. அதற்குத் திரிபுராந்தகம் என்று பெயர்.

### அடியார்களை வேண்டுதல்

திரிபுராந்தகத்தில் எப்பொழுதும் தியானநிலையிலேயே இருப்பவர் கரஸ்தலி சோமநாதய்யா. மல்லிநாதர் விரத நியதிகளைக் கடைபிடிப்பவர். ரெண்டால மல்லிநாதர் மலையின் கிழக்கே படிகள் அமைத்துக் கொடுத்துள்ளார். தோச்சமாம்பா என்ற அடியவர் ஐந்து கரவீர மலர்களை இறைவனுக்கு அர்ச்சனை செய்பவர். ஒரு மலர் அர்ச்சனைக்குக் குறைந்த காரணத்தால், தனது கண்ணையே மலராக அர்ச்சனை செய்து, மீண்டும் இறையருளால் கண் பெற்றவர். கோடகதிரிபுராரி என்ற பக்தர் வேதங்களை நன்றாகக் கற்றவர். இவர்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்து சிவபெருமானைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கும்போது, அவர்கள் அனைவரையும் நோக்கி சாஸ்டாங்கமாகத் தரையில் விழுந்து, அவர்களை வணங்கி, "ஈடுஇணையற்ற பசவபுராணக் கதையை" நான் கூற விரும்புகிறேன்,

அக்கதையைச் சொல்ல எனக்கு அனுமதி அளியுங்கள்" என்று வேண்டுகிறார். உடனே, பக்தர்கள் மகிழ்ந்து, "பசவபுராணத்தை எழுதும் சக்தியை உனக்குத் தருகிறோம். உலகத்தவர் அனைவருக்கும் நன்மை உண்டாகுமாறு இதனை எழுதுக" என்றனர். அவர்களின் ஆணையை என் தலையின் மீது ஏற்றுக் கொண்டு நான் இங்குப் பசவபுராணத்தைத் தொடங்குகிறேன்.

**பசவபுராணம் கூறத் தொடங்குதல்**

கர்நாடக பூமியில் கொப்பூர் என்ற ஊர் இருக்கிறது. அங்கு மாதிராசா என்ற பெயரையுடைய ஒருவர் இருந்தார். அவர் எப்பொழுதும் சிவதீட்சையிலேயே இருப்பவர். அந்த ஊரின் மன்னன் பெயர் சங்கமாமாத்தியர் என்பதாகும். இவர் எப்பொழுதும் மாதிராசா என்ற குருவின் பாதங்களை நினைத்துக் கொண்டிருப்பவராவார். சிவ ஆசாரங்களை எப்பொழுதும் அனுசரித்து வருபவராவார். உங்களைப்பற்றி பக்தசபையில் கேள்விப்பட்டிருக்கிறேன். ஜங்கமர்களுக்கும் பிரியமான, பசவபுராணத்தைக் கேட்பதற்கு ஆர்வம் உடையவர் என்பதனையும் கேள்விப்பட்டிருக்கிறேன். அதனால், நீங்கள் மகிழும்படி இந்த பசவபுராணத்தைக் கூறப்போகிறேன். நீங்கள் கவனமாகக் கேளுங்கள்.

**தன் உறவு கூறல்**

இப்பூமியில் தாயாக உமாதேவியும் தந்தையாக (ருத்ரன்) சிவபெருமானும் விளங்குகிறார்கள் என்று புராணங்களில் சொல்லப்படுகிறது. அதுபோல நான் ஈசுவரகுலத்தில் பிறந்தவன். பக்தியே எனது கோத்திரமாகும். எனது தந்தையின் பெயர் விஷ்ணுராமதேவன். தாயின் பெயர் சிரியாதேவி என்பதாகும். இவர்கள் இருவரின் அருமை மைந்தன் நான். வீரமாகேசுவராச்சாரம் விரதத்தை நான் மேற்கொண்டிருக்கிறேன். கரஸ்தலி விஸ்வநாதய்யா என்பவர் எனது குருநாதர் ஆவார். அவாது கருணையினால் இக்கவிதை எனக்கு வல்லமையுடையது ஆயிற்று. எனது நண்பனின் பெயர் சென்னராமன் என்பதாகும். எனது பெயர் பால்குறிக்கி சோமநாதன் என்பதாகும்.

## நூலின் அமைப்புமுறை கூறல்

செய்யுளும் உரைநடையும் சேர்ந்த அமைப்புடைய காப்பியங்கள் போலன்று இந்த நூலினை மக்கள் தெலுங்கில் (சானு தெலுங்கு), இரண்டடி (த்விபதயாப்பு) யாப்பில் அமைக்கிறேன். எளிய தெலுங்கு மொழியில் கூறுகிறேன் என்று மட்டும் நீங்கள் நினையாதிருங்கள். வேதங்களுக்கு இணையாக இதனைக் கருதுங்கள்.

சிறிய, சிறிய வார்த்தைகளில் நிறைய பொருள்தரும்படி கூறப்படுவதே நல்ல கவிதையாகும். கயிற்றில் முத்துக்களைக் கோப்பது போல, முத்துக்களாக பக்தர்களின் கதையினையும், கயிறாக வேத புராணங்களுக்குச் சம்பந்தப்பட்ட பசவன்னரின் கதையையும் கூறுகிறேன்.

## பசவனின் சிறப்பு

'பசவா' என்ற மூன்று எழுத்தினை ஒருமுறை யாரும் படித்தால் அவர்கள் முகத்தில் சிவன் குடியிருப்பார். அப்படிப்பட்ட பகவானைத் துதித்தாலே பிறவி வினை நீங்கும். பசவர் சாதாரண சிவபக்தர் என்று கருதாதீர்கள். ஒற்றைக் கண்ணை நெற்றியில் கொண்ட சிவனே பசவரின் உருவத்தில் அவதரித்தார் என்று கருதுங்கள். சிவன் உருவம் இல்லாதவராக இருக்கும் போது, இவர் உருவம் எடுத்துத் திரிகிறார். சிவன் கடவுளாய் இருக்கும்போது இவர் பக்தராய் இருக்கிறார். சங்கம பக்தர்கள் அனைவருக்கும் இவர் தாசி போன்றவர் ஆவார். சிவனின் வாகனமும் பசவன்னரே. சிவ பக்தர்களுக்குச் சிம்மாசனம் ஆனவர். இப்படிப் பட்ட மிகப்பெரும் புகழை உடைய பசவன்னரின் கதையைப்பற்றி விவரித்துக் கூற யாரால் இயலும்? ஆனாலும், அவரைப் பற்றிய கதையைக் கூறுகிறேன்.

## வெள்ளிமலைக்கு நாரதரின் வருகை

வெள்ளிமலை என்று ஒன்று இருக்கிறது. அங்கே உபமன்யு, பிருந்கி, நந்திகேசுவரர் உட்பட்ட தேவகணங்கள் வணங்கிக் கொண்டிருக்க, சிவனும் பார்வதி தேவியும் ஒரு சிம்மாசனத்தில் அமர்ந்து இருந்தனர். அந்த நேரத்தில் நாரதர் அங்கு வந்தார். சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி நின்றார். அப்பொழுது பார்வதி

தேவி. அவரை அழைத்து, நீ பூலோகம் சென்று வந்த காரியம் என்ன? அதனைச் சிவனிடம் கூறுவாயாக என்று ஆணையிட்டார்.

## பூலோகத்தின் நிலைகுறித்து நாரதர் கூறல்

அதற்கு நாரதர், எல்லா லோகங்களிலும் உங்கள் மீது உள்ள பக்தி நிலையாய் இருக்கிறது. ஆனால், பூலோகத்தில் மட்டும் உங்கள் மீது பக்திகொள்வது எவ்வாறு என்று புரியாமல் மக்கள் திண்டாடுவதால், நிலையாக இல்லை. சிவபக்தர்கள் இருக்கிறார்கள். ஆனால், சிவபக்தியில்லாதவரிடம் அவர்கள் பேச முடியாது தவித்துக் கொண்டிருக்கிறார்கள். சில அடியார்கள் பக்தியினை மனதில் இருத்திக்கொண்டு வெளியில் கூறமுடியாது தவித்துக் கொண்டு இருக்கின்றனர். இதனால் உங்கள் மீது உள்ள பக்தியில் இது ஆரம்பம் இதுமுடிவு என்று யாருக்கும் தெரியவில்லை. இப்பூவுலகில் சிவபக்தியை நிலைநாட்ட ஒருவழிதான் இருக்கிறது. அது யாதெனில், நீர் பூவுலகில் பிறப்பெடுத்தலே ஆகும்" என்றார்.

சிவபெருமான் நந்திகேசுவரரின் மீது கருணை கொண்டு, நந்திகேசுவரருக்கும் எனக்கும் இடையில் எந்த பாலமும் இல்லை ; வித்தியாசமும் இல்லை. நாங்கள் இருவரும் ஒருவரே அதனால், இவரைப் பூவுலகம் தூய்மை அடையும் பொருட்டும், என்மீது வழிபடும் பக்தி நிலையின் பொருட்டும் அங்கு அனுப்பி வைக்கிறேன்" என்றார்.

## பார்வதிக்கு நந்தியைப் பற்றி சிவபெருமான் கூறல்

அப்பொழுது, பார்வதிதேவி சிவனைப் பார்த்து, "நந்திகேசுவரருக்கும் எனக்கும் வேறுபாடு இல்லை என்று கூறினீர்களே எவ்வாறு அப்படிக்கூறினீர்கள்? அவர் உங்கள் மீது கொண்ட பக்தியின் காரணமாக அவ்வாறு கூறினீர்களா? அவர் மீது உங்களுக்கு உள்ள ஈடுபாட்டின் காரணமாக அவ்வாறு கூறினீர்களா? என்று எனக்குத் தெரியப்படுத்துங்கள்" என்றாள்.

அதனைக் கேட்ட சிவபெருமான் நந்திகேசுவரரின் கதையை உனக்கு நான் கூறுகிறேன். கேள் என்று கூறி, நந்திகேசுவரர் கதையைக் கூற ஆரம்பித்தார்.

***சிலாதனின் தவம்***

அநேக யுகங்களுக்கு முன்னே சிலாதன் என்ற முனிவர் இருந்தார். அவர் ஸ்ரீபர்வதத்திற்குத் தெற்கு, வடக்காக அமர்ந்து தவம் செய்து கொண்டிருந்தார். காற்று, நீர், சூரிய ஒளி, நிலவொளி ஆகியவற்றைச் சிறிது சிறிது காலம் ஒவ்வொன்றாக உட்கொண்டு (ஆகாரமாக) மூன்று கோடி வருடம் தவம் செய்தார். ஆயிரம் கோடி வருடம் வரை அக்கோரதவம் நீடித்தது. அப்பொழுது நான் காட்சியருளி உனக்கு யாது வேண்டும்? என்றேன். முனிவர் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி, மகாதேவா எனக்கு எந்தக் குறையும் இல்லை. ஆனால், உங்கள் தயவினிலே என் ஆசை ஒன்றை நிறைவேற்ற வேண்டுகிறேன். இந்த நேரமே எனக்கு உன்னைப்போலவே ஒரு மகன் தேவை. அவன் உன்மீது அதிக பக்தி உள்ளவனாக இருக்க வேண்டும். உன்மீது கொண்ட பக்தியில் சிறிது குறைந்தாலும் அவனது தலையைத் துண்டித்து விடுவேன். நீ தடுக்க வந்தாலும் விடமாட்டேன். அப்படிப்பட்ட மகனை எனக்கு அருளல் வேண்டும் இல்லையென்றால், எந்த வரமும் எனக்கு வேண்டாம் என்றார்.

நான் அவரது பக்திக்கு மிக மகிழ்ந்து, என்னிடம் எனது அம்சத்தில் காளை ஒன்று இருந்தது, ்கு வாகனமாகவும் இருந்தது. தேவகணங்கள் அனைத்திற்கும் தலைமையாகவும் இருந்த அந்த காளையைப் (நந்தி) பார்த்து, நீ இந்த சிலாதனுக்கு நந்திகேசுவரனாகப் பிறக்க வேண்டும்; ஏன் என்றால், உனக்கும் எனக்கும் எந்த வேறுபாடும் கிடையாது; இந்த சிலாதன் என் போன்று மகன் வேண்டும் என்று கேட்டான். அதனால் நீ சென்று பிறக்க வேண்டும்; இவ்வுலகத்தில் இரண்டாவது சிவனாகப் பிறக்க வேண்டும் என்றேன். உடனே, விருஷபர் நந்திகேசுவராக அவதாரம் எடுத்தார். அவர் பிறந்த உடனேயே என்மேல் உள்ள பக்தி அவர்மேல் உண்டாயிற்று. நந்திகேசுவரர் வளர்ந்து வரும்போது எனது பாதகமலத்தை மனதிலே இருத்தி என்மேல் கொண்ட பக்தியோடு தபசு செய்ய ஆரம்பித்தார். குளிர்காலத்திலும் கூட, கழுத்துவரை குளிர்ந்த நீரில் நின்று தபசு செய்தார். மலைமேல் நின்றுகொண்டு

ஒற்றை விரலில் தபசு செய்தார். பஞ்சாக்கினி மத்தியில் நின்று தபசு செய்தார். அப்பொழுது சமுத்திரத்தில் உள்ள தண்ணீர் வற்றிப்போயிற்று. சூரியன், சந்திரன் இருவரும் மறைந்தனர். உலகத்தையே கீழே தாங்கிப்பிடிக்கும் கூர்மமும் நிலை தடுமாறியது. எட்டு திசைகளிலும் உள்ள திக்கஜங்களும் நிலை தடுமாறின. பெரிய பெரிய பர்வதங்களாகிய உறிமாலயம், விந்தியா போன்றவைகளும் நிலைதடுமாறின. திக்குப்பாலகர்களும் அஞ்சினர். படைப்புக் கடவுளாகிய பிரம்மாவும் அஞ்சினார். விஷ்ணு மற்றும் தேவர்களும் பயந்து, இவரது கோர தபத்தை நினைத்து வருந்தி என்னிடம் ஓடி வந்து தஞ்சமடைந்தார்கள்.

தட்சனின் யாகத்தை அழித்தவனாகிய தட்ச மகட்சயன் அவர்களைப்பார்த்து கண்ணிலே சிரித்து, எதற்காக இவ்வாறு வருந்துகிறீர்கள். நந்திகேசுவரரின் தவத்தைப் பார்த்து இவ்வாறு பயந்து வரவேண்டுமா? பதவி என்ற பெயர்கூட அவருக்குத் தெரியுமா? அவர் எந்த ஆசையும் இல்லாதவர் என்று கூறி, அவர்களை எல்லாம் அழைத்துக் கொண்டு நந்திகேசுவரரிடம் சென்றேன். அவர் என்னைப் பார்த்ததும் பக்தியினால் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்தார். என்மீது கொண்ட பக்தியினால் பேச்சு சரியாக வரவில்லை. உன்னுடைய தபசிற்காக நான் பிரசன்னமானேன். உனக்கு வேண்டியதைக் கேள் என்று நந்திகேசுவரரிடம் கூறினேன்.

நிறைய செல்வம் இருக்கும்போது யாரேனும் கருங்கல்லைக் கேட்பாரோ? உன்மேல் இருக்கும் புனிதமான பக்திதான் எனக்குத் தேவை. அதை எனக்கு அருளவேண்டும் என்று நந்திகேசுவரர் என்னைக் கட்டிப்பிடித்துக் கொண்டார். என்னுடைய சரீரத்தை எப்பொழுதும் தொடும்படியாக என்னுடைய வாகனமாய் இருப்பாயாக என்று கூறி, தேவகணங்களுக்கெல்லாம் தலைவனாய் இருக்கும்படி அவருக்கு வரம் நல்கினேன். உடனே, பிரம்மா, விஷ்ணு, தேவேந்திரன் முதலிய தேவர்கள் கீழே விழுந்து நந்திகேசுவரரைப் பிரார்த்தித்தார்கள். அவர்களைப் பார்த்து, அவர்களின் பயமும் அவர்களைவிட்டு அகலுமாறு செய்தேன். ஸ்ரீபர்வதத்தின் தென்மேற்கே நந்திகேஸ்வரர் தவம் செய்ததனாலேயே அதற்கு நந்தி மண்டலம் என்ற பெயர் பிறந்தது.

அங்கு வாழும் எல்லா உயிர்களுக்கும் நான் மோட்சம் அளித்தேன். இந்த நந்திகேஸ்வரர் சரித்திரத்தை எழுதுபவருக்கும் கேட்பவருக்கும் ஸ்திரபுத்தி, குறையில்லாத பக்தி, மோட்சம் உண்டாகும் என்று அருளினேன். இவ்வாறு இருப்பதினால் நானும் நந்திகேசுவரரும் ஒன்றுதான், என்று கூறினார். ஜகதாம்பாள் அன்போடு கேட்க சிவன் மேலும் தொடர்ந்து கூற ஆரம்பிக்கிறார்.

உன் எதிரிகளுக்கு உன் உருவம் எடுப்பது உனக்குத்தான் பொருத்தம் வேறு யாருக்கும் முடியாது என்று பார்வதி கூறியவுடன், நாரதனைப் பார்த்து, ஈஸ்வரன் நந்திகேசுவரனுடைய புகழ், அவர் மகிமை நீ கேட்டாயா? நந்திகேசுவரனைக் கருணையோடு பார்க்கிறார், நந்திகேசுவருக்கு கொஞ்சம் பயம், மரியாதை, மகிழ்ச்சி உண்டாயிற்று. இப்படியான நந்திகேசுவரரைப்பார்த்து கண்ணாலும் கையாலும் அருகில் கூப்பிட்டார். அவரிடம் அன்போடு அம்பிகையின் கணவனாகிய சிவபெருமான், இது வேதத்தில் சொல்லப்பட்டது ; இது தர்மத்தின் வழி ; இது புனிதமான செயல் ; தத்துவங்களுக்கெல்லாம் சாரம்; இது முதன்முதலில் முன்னோர்களால் சொல்லப்பட்ட வழி ; எல்லோருக்கும் தெரியும்படி இவ்வுலகத்தில் உன்னாலே பக்தி உண்டாக வேண்டும். தேவகணங்களுக்கும் பார்வதிதேவிக்கும் தெரிவதைவிட மெய்ப்பொருளை உனக்குத்தான் அதிகமாகத் தெரியும்படிச் செய்தேன். சர்வஞ்ஞன் என்ற பெயர் உனக்குத்தான் பொருத்தமாய் இருக்கிறது. அதனால் நீ இப்பூவுலகத்திற்குச் சென்று, இரண்டாவது சிவன் என்று புகழ்ந்து பேசும்படி இவ்வுலகத்தில் பக்தர்களுக்கெல்லாம் நன்மை உண்டாகும்படி, பசவன் என்ற பெயரால் நீ பிறப்பாயாக.

## நந்திகேசுவரரின் அவதாரம்

உடனே, நந்திகேசுவரர் ஒரு விண்ணப்பம் செய்தார். தேவதேவரே உங்களுடைய ஆணையைச் சிரமேல் கொண்டு, நான் செய்வேன். இதனை இவ்வளவு அழுத்தத்துடன் சொல்ல வேண்டுமா? பூலோகத்தில் என்னைப் போல வேறுயார் இருக்கிறார்கள்? நான் இங்கிருந்தால் என்ன? அங்கிருந்தால் என்ன? நீ எங்கிருக்கிறாயோ அங்கு நான் இருப்பேன். என்னுடைய இருப்பிடம் நீயே என்று நந்திகேசுவரர் கூறினார். இவ்வுலகத்தின் தலைவனாகிய சிவன் அவரைப் பார்த்து,

பிராணலிங்கமாக வந்து நான் உன்னுடன், உன்னுயிருடன் இருப்பேன். சங்கமர் உருவத்தில் வந்து எப்பொழுதும் உன்னுடனேயே அலைந்து கொண்டிருப்பேன். தேவகணங்களுக்கு உயிராக இருக்கும் எனக்கும் உனக்கும் எந்தப் பிரிவினையும் இல்லாதது உனக்குத் தெரியுமே! இது நீ அறிந்த செய்திதானே என்று சிவன் நந்திகேசுவரரிடம் கூற, நந்திகேசுவரர் உடம்பெல்லாம் கையாகமாற, சிவபெருமானை வணங்கி, பூலோகத்திற்கு மெதுவாக வருகிறார்.

இப்பூவுலகத்தில் ஸ்ரீபர்வதத்திற்கு மேற்கே கர்நாடக தேசம் இருக்கிறது. அங்கு பக்தியில் மிகவும் புகழைப்பெற்ற 'உறிங்குலேசுவர பாகவாடி' என்ற அந்தணர் வாழ் இருப்பிடம் ஒன்று இருக்கிறது. அந்த ஊரில் மாதிராசு, மாதாம்பா என்ற கணவனும் மனைவியும் இருந்தனர். இவர்கள் இருவரும் எப்பொழுதும் சிவபக்தியில் ஆழ்ந்து சிவபூசை செய்து, தன் நினைவு முழுவதையும் இறைவன் மீதே வைத்துக் கொண்டு இருந்தனர். மிகுந்த காலமாக இருவருக்கும் குழந்தை பாக்கியம் இல்லாத காரணத்தால் வருத்தத்துடன் இருந்தனர். நீண்ட காலமாக பூசைசெய்தும் பலனில்லாது போயிற்று. ஆகையால், சிவ அறிஞர்கள் பல அரிய நூல்களை எல்லாம் தேடிப்பார்த்து, நந்திகேசுவரரை நோன்பு செய்தால் நினைத்தது நடக்கும் என்று நினைத்து மாதாம்பாவிடம் கூறினார்கள். பெரியவர்கள் கூறியபடியே இந்த அம்மையார் கோயில் சென்று நந்திகேசுவரரின் முன்பு சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்காரம் செய்து, பக்தியோடு விரதம் மேற்கொண்டார். திங்கள் கிழமை முதற்கொண்டு ஒன்பது நாட்கள் விரதம் மேற்கொண்டார். ஒன்பது நாள் கழித்து பத்தாவது நாள் நந்திக்கு அபிஷேகம் செய்து சந்தனம், பூ முதலானவைகளை வைத்து, மென்மையான துணியை உடம்பெல்லாம் போர்த்தி சலங்கை மணி, கொம்புகளுக்குப் பொன் ஆபரணம் இவை போன்றவை அணிவித்து, நெற்றிக்கு நெற்றிச்சுட்டி கட்டி, தூபதீப ஆராதனை செய்து பஞ்சபட்சணம் உண்ணச் செய்து, சிவபக்தர்கள் அனைவரும் மனநிறைவடையும்படி உணவுபரிமாறி, நந்திக்கு நமஸ்காரம் செய்து, நந்தீசா! உன்மாதிரி பக்தி உள்ள, உன்மாதிரியே இருக்கிற குழந்தையை எனக்கு வரமாகக் கொடுத்தால், அக்குழந்தைக்கு உன் பெயரையே வைக்கிறேன் என்று பிரார்த்தனை செய்தார்.

சுற்றிலும் உள்ள மக்கள் அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கும்போது நந்திகேசுவரரே பிரசாதம் கொடுக்க, பயபக்தியோடு அம்மையார் உண்டார். வீட்டிற்குச் செல்லும்போது எதிரே நற்சகுனங்களாகக் கண்டார்.

அப்பொழுது அம்மையாரின் வயிற்றில் குழந்தை உதித்தது. அம்மையாரின் வயிற்றில் இருக்கும்போதே அக்குழந்தையின் ஒளி பூமியெங்கம் பரவியது. அதனைக்கண்டு, இக்குழந்தை இன்னும் பூமியில் அடியெடுத்து வைக்கவேயில்லை; அதற்குள் இப்படிப்பட்ட சக்திவாய்ந்த குழந்தை ஏதாவது இருக்குமா? என்று நண்பர்களும் விரோதிகளும் வெவ்வேறிடம் சென்றனர். மூன்று வருடம் கர்ப்பத்தில் குழந்தை இருப்பதனைக்கண்டு, பயந்து, நந்திகேசுவரரின் கோயிலுக்குச் சென்றார். நிறைய நோன்புகள் செய்து நான் உன்னைச் சரண் அடைந்தேன். எல்லாப் பெண்களுக்கும் ஒன்பது மாதத்தில் குழந்தை பிறக்கும். அப்படி இருக்கும்போது, மூன்று வருடம் என்னை ஏன் துன்பப் படுத்துகின்றாய். நண்டு, தாயைக் கொன்று வெளிவரும் அதுபோல் எனக்கு நடக்குமா? நீ எனக்குக் கொடுத்த வரமெல்லாம் போதும். இந்தத் துன்பம் எனக்கு போகும்படிச்செய். எங்காவது இதுபோல நடந்ததனைக் கேள்விப்பட்டிருக்கிறோமா? என்று பலவாறு புலம்பிவிட்டு, வீட்டிற்குச் சென்று படுத்துத்தூங்கி விடுகிறார். அப்பொழுது அந்தம்மையாரின் கனவில் ரிஷபநாயகனே சங்கமர் உருவத்தில் வந்து ஆணை கொடுக்கிறார். உன் மனத்தில் இருக்கும் துன்பத்தைப் போக்குவதற்காகவே நான் வந்தேன். சாமான்யமாக நினைக்காதே. இவ்வுலகத்தைப் புனிதமாக்க வந்திருக்கும் மூர்த்தி முதல் காளையான இது சிலாதனனுக்கு மகன். தேவ தேவனாகிய சிவனது ஆணையினால் பக்தர்களது நன்மைக்கு, உனது மகனாகப் பிறக்க இருக்கிறார். எனவே, நீ கவலைப்படாதே. உனக்கு மகன் பிறப்பான். இனியும் காலதாமதம் ஆகாது. உனக்கு ஆண்மகவு பிறந்தவுடன், அம்மகவிற்குப் பசவா என்று பெயரிடு என்று ஆணை இடுகிறார். உடனே கண்திறந்து பார்க்க, யாருமே இல்லாததால், வந்தவர் நந்திகேசுவரரே என்று மிகுந்த மகிழ்ச்சி அடைந்து பக்கத்தில் இருக்கும் உறவினர்களும் நண்பர்களும் ஆச்சரியப்படும் வகையில் கனவில் நிகழ்ந்ததைப் பற்றிக் கூறுகிறார். சிறிதுகாலம்

கழித்து அம்மையாருக்கு நந்திகேசுவரர் பிறக்கிறார். குழந்தையிடம் இருக்கிற சிவன் யாரும் அறியாவண்ணம் முனிவர் வேடத்தில் வந்தார். வீட்டிலிருக்கும் அனைத்துப் பாதைகளும் அடைக்கப்பட்டு இருந்தும் வீட்டிலுள்ளவர்கள் அதிசயப்படும் வகையில் வீட்டிற்குள் வந்தார். அவர் வேட்டி அணிந்திருந்ததோடு இரத்தினக்கம்பளி, உத்திராட்சம், யோகதண்டம், விபூதி உள்ள பையும் வைத்திருந்தார். உடம்பெல்லாம் விபூதி அணிந்திருந்தார். நெற்றியில் திருநீற்றுப்பட்டையும் அணிந்திருந்தார். தாடி வைத்திருந்தார். இவ்வாறான தோற்றப் பொலிவுடன் கூடிய தபசு வேடத்தில் வந்தார். அவர், "அருகில் உள்ள சங்கமேஸ்வரத்தில்தான் நான் இருப்பேன். கூடலி சங்கமேஸ்வரர் என்ற பெயரில் அக்கோயிலிலே குடியிருப்பேன். என் மகன் இந்த ஜென்மத்தில் உலகிற்கு நன்மை செய்ய உனக்குப் பிறந்தான். அதனால் அவனைப் பார்ப்பதற்காக வந்தேன். இந்த ஜென்மத்தில் அவனுக்கு நான் தான் குருவாக இருப்பேன். சிவபக்தர்கள் உணவருந்தும் முன்பு சுவாமி லிங்கத்திற்கு எதையும் அர்ப்பணம் செய்யாது எதையும் சாப்பிடமாட்டார்கள். அதனால் இறைவனுக்குப் படைக்காத பொருள் எதனையும் அவனுக்குக் கொடுக்கக்கூடாது என்று கூறிச் சென்றார்.

மேற்கண்டவாறு கூறி மன்மதனை எரித்தவனாகிய சிவபெருமான் மறைந்தார். அதன்பின் குழந்தை நன்றாக வளர்வதைப் பார்த்துப் பெற்றோர் மகிழ்ந்தனர். குழந்தை மெதுவாக வளர்ந்தான். சிவபக்தர்களை அழைத்து அவர்களுக்குச் செய்ய வேண்டிய மரியாதை எல்லாம் செய்து. அச்சிறுவனுக்கு 'பசவா' என்ற பெயரிட்டனர். குழந்தையின் சிறு விளையாட்டுக் கூட சிவபக்திக்கு உரியதாகவே இருந்தது.

குழந்தைக்கு எட்டு வயதாகும்போது உபநயனம் செய்விக்க தந்தையார் முயற்சி செய்தார். அந்த சமயத்தில் பசவண்ணர் தனது தந்தையாரிடம் உபநயனம் எதற்காக? சிவனைப் பூஜித்து வந்தும் நீ கூட மூடன் போல் ஏன் பிதற்றுகிறாய்? சிவனை நாம் குருவாக அடைந்திருக்கிறோம். குரு நினைப்பது நடக்குமே. பிராமணியம் என்பது உபயோகமே இல்லை. குருவின் ஆசீர்வாதத்தினாலேயே இருக்கும் ஒரு மனிதனுக்கு. கர்மத்தோடு தொடர்புடையவை தீங்கு விளைவிக்கும் செயலாகும். குருவின் பாதங்களை அர்ச்சனை

செய்பவனுக்கு நெருப்பு வளர்த்து யாகம் செய்வது தவறல்லவா? நமது கர்மங்களை விளக்கும் மந்திரங்களாகிய சிவமந்திரங்களைக் கற்றவர், வேறு மந்திரங்களைப் படிப்பது பாவமல்லவா? சிவபக்தர்களுக்குச் செய்யும் பணியை (வணக்கத்தை) பறையர்களுக்குச் செய்வது தவறல்லவா? கர்ம பாசங்களை அறுத்து எரிந்த பின்பு மீண்டும் அதனில் சேர்ப்பது தவறல்லவா? ருத்ராட்சம், விபூதி போட்டு கீழ்த்தரமான பூணூலுக்குத் தூரமாய் இருந்து வீர மாகேஸ்வர ஆச்சார்ய தீட்சையில் இருக்கும் என்னை இதுபோல் கர்மம் என்ற கடலில் மூழ்கடிப்பது தர்மமோ? கண்கள் தெரியாத நீ, பசவனுக்கு இச்சடங்குகள் செய்ய வந்துள்ளாயே. உபநயனம் செய்வது தவறல்லவா? பிரம்மனின் தலையைக் கொய்த சிவபெருமான், தேவர் கணங்களுக்குத் தலைவனானவனை அந்தணன் என்று நினைக்கிறாய்? பிரம்மத்தைச் சேர்ந்தவன் என்று ஏன் நினைக்கிறாய்? சாதி, கோத்திரம் எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டு சத்குரு என்று நம்பியிருக்கிற ஒருவனைப் பார்த்து, இவை அனைத்தையும் எனக்குக் கொடுக்கிறாய், ஏன் இவ்வாறு செய்கிறாய்? குலமே இல்லாது இருக்கிற சிவபக்தனுக்கு எந்தக்குலமென்று நீ நிர்ணயம் செய்கிறாய்? எப்பொழுதும் உபநயனம் செய்யக்கூடாது. இது போன்ற கதைகளை எல்லாம் என்னிடம் கூறாதே என்றார். அதனைக் கேட்ட பசவண்ணாவின் தந்தையார், "பிராமண குலத்தின் வேதங்களில் பதினாறு கர்மங்கள் (விதிகள்) சொல்லப்பட்டுள்ளன. பிறந்ததிலிருந்து மறைவுவரை பதினாறு கர்மங்களைக் கண்டிப்பாக செய்தல் வேண்டும். அதில் ஒன்றினைச் செய்யத்தவறினாலும் அவன் அந்தணன் ஆகமாட்டான். உபநயனம் செய்தால் பக்தி சிதைந்து போகாது. குழந்தைத்தனத்தை விட்டுவிட்டு நாங்கள் கூறுவதுபோல் செய். நீ கூறுவது போன்ற அதிசயங்களெல்லாம் எங்களுக்குத் தெரியாது. எந்தக்காலத்திலும் நாங்கள் இதுபோல் பார்த்ததில்லை. சிவப்பெருமையைக் காப்பதற்காக நல்ல குழந்தையாகப் பிறந்திருக்கிறாய் என்று நாங்கள் சந்தோஷத்தில் இருக்கும்போது, நீ குலத்தின் பெயர் கெடுமாறு ஏன் இவ்வாறு நடந்து கொள்கிறாய்? குலத்தை அபிவிருத்தி செய்கின்ற மகன் தோன்றினால் குலம் முன்னேறும்; இல்லையேல் அழிவுறும். குலத்திற்குக் கோடாரி போல் வந்திருக்கிறாய். இதைக்கேட்டால் அந்தணர்கள் அனைவரும் ஒன்றுகூடி நம்மை ஒதுக்கி

வைத்துவிடுவர். உன் கையைப்பிடித்து இந்தக்குலத்தின் நலனை எவ்வாறு கெடுத்துக்கொள்ள முடியும்? நான் சொல்வதனைச் சொல்லிவிட்டேன். நீ உன் விருப்பப்படிச் செய் என்று விரக்தியுடன் கூறினார். இதைக்கேட்ட பசவண்ணா கோபத்துடன், "பிராமணர்களுக்கு யார் ஆச்சாரியார்? என்ன வேதம் மந்திரம்? எது தெய்வம் (காயத்ரி மந்திரம்) உங்கள் மதத்தில் கடவுளே இல்லை. இருந்தாலும் வேறுவேறு ரூபத்தில் இருக்கிறார். அதற்கு மூடர் ஒருவர் குரு வேறு. அதற்கு மந்திரம் காயத்ரி. இந்த மாதிரி தினமும் செய்யும் காரியங்கள் மோட்சத்தினைக் கொடுக்குமா? கொடுக்கவே கொடுக்காது. இதற்கெல்லாம் அப்பாற்பட்ட பரமேஸ்வரனின் மேல் கொண்ட பக்திதான் முக்கியமானது. இதனைக் கேட்பீராக என்று கூறினார்.

வேதங்களில் புகழ்ந்து பேசப்பட்ட சூட்கமரூபமும் நித்தியானந்தமும் திவ்யலிங்கமுமாய் இருக்கிற கடவுள் அப்படிப்பட்ட ஈஸ்வரனை மனதிலே இருக்கிறார் போல் செய்து, லிங்கரூபமாய் கையில் வைக்கக்கூடிய மூர்த்தி. குருவுக்கு மேலே யாரும் இல்லை. அப்படிப்பட்ட உள்ளம் கொண்டவர் எங்கள் குரு. மந்திரங்களுக்கெல்லாம் இராஜமந்திரமாய் இருப்பது எங்கள் மந்திரம். மோட்சத்தைத் தகுந்தாற்போல் உடை. உத்திராட்சம் இவை போன்றவையாகிய அஷ்டாங்க பக்தி குணங்கள் இவர்களுக்கு குலபாவங்களும் நீங்கி மோட்ச லெட்சுமி வந்தடையும். லிங்கத்தை சேவிக்கிறதனலே உண்டாகும் சுகம். இவ்வாறென்று வேதங்களிலும் கூற முடியாது. பிராமணீயமும் சிவன்மீது இருக்கும் பக்தி இவை இரண்டும் சில உபநிடதங்களிலே சேர்ந்து இருக்கும் எனக் கூறுகின்றனர். ஆனால், எங்கேயாவது அதுபோல கலந்து இருக்குமா? இரண்டும் ஒன்றே என்று நினைத்தால் அதில் சிவபக்தனுக்கு இவனல்லாத வேறு தேவர்களை நினைந்தாலே, இருபத்திஎட்டு கோடி சென்மங்கள் அவனுக்கு உண்டாகும். சூரியன், அக்னி, திக்குப்பாலகர்கள், விஷ்ணு, பிரம்மா இதுபோன்ற எல்லா தேவர்களும் தினமும் மூன்று முறை வணங்க வேண்டியதிருக்கும். அதுபோல் வணங்காது இருந்தால் அவனது பிராமணீயம் அப்பொழுதே சென்றுவிடும். அவர்களை வணங்கினாலும் பக்தி அழிந்து விடும். அப்படி இருக்கும்போது பிராமணனைப் பக்தன் என்று எப்படிச் சொல்ல முடியும்? இந்தக்

கதை எல்லாம் எதற்கு? மாவிதையைப் பூமியில் விதைத்தால் என்னாகுமென்று தெரியுமல்லவா? லிங்கத்தின் மேல் நிஷ்டையாய் கூடி இருக்கும் பக்தி, நிறையக் கடவுள்களை வணங்கும் பிராமணர்கள் என்ற இரண்டு இருக்கிறதே. பத்தினி போல நிறைமைத் தன்மையுடைய பக்தி ஒரு வகை. இது பிராணலிங்கத்தை வணங்குவதால் வரப்பெறுவது. வேசியைப்போல உள்ளது பிராமணர்கள் பக்தி. இது மற்றொரு வகை. நந்தியைக் குலதேவனாக எடுத்திருக்கிறாய். சிவன் ஆதி தேவனென்று தெரியும். ருத்ராட்சம் போட்டு இருக்கிறாய். அப்படித்தான் நீ நடக்கவேண்டும். உலகத்தில் சர்வேஸ்வரன் ஒருவன் இருக்கும்போது, மற்ற தேவர்களை வணங்குவது நியாயமா? அதனால் இத்தனையும் நான் கூறத்தேவையில்லை. கௌதமன், ததீசி வியாசன் ஆகியோர் சிவனுடைய கோபத்திற்கும் - சாபத்திற்கும் ஆளானவர்கள். உத்வேகத்தில் நான் சொல்கிறேன் என்று நினையாதே. பிராமணீயம் என்பது கர்ம மார்க்கத்தைச் சேர்ந்தது. அதிலே நிர்மலமான சிவபக்தி கிடையாது. இதுதான் பிராமணமார்க்கம், நான் இதைத்தான் உறுதியாகக் கடைப்பிடிக்கிறேன் என்று நினைத்தால் ஒன்றும் பேசத்தேவையில்லை. குயில் குஞ்சை காக்கையா வளர்ப்பது? காக்கை வளர்த்த குயில் குஞ்சு காக்கையைப் போல் கத்தாது. எங்கள் தந்தை, தாத்தா அனைவருமே சிவன் என்று மனதில் நினைத்து இருக்கிறேன். எங்களைக் காப்பாற்றுபவர் அவர்தான். உங்கள் விருப்பப்படி நீங்கள் இருங்கள். என் விருப்பப்படி நான் இருக்கிறேன். இந்த வீண் வம்பு எதற்கு என்று கூறிவிட்டு உடன் பிறந்த தங்கையை (நாகம்மா) அழைத்துக் கொண்டு வியாபாரம் செய்து கொண்டிருந்த ஒருவர் வீட்டிற்கு வந்தார்.

உபநயனத்திற்கு வந்துள்ள பசவண்ணரின் மாமன் ஒரு சிறந்த சிவபக்தர். பிஜ்ஜலன் என்ற மன்னனுக்கு அவர் நிதியமைச்சராக இருந்தார். அவர் பெயர் பலதேவ தண்ட நாயக்க என்பதாகும். பல தேவர் என்பவர் உபநயனத்திற்கு வந்த இவரைப்பார்த்தார். இவர் தனக்குத் தானே ஒரு உறுதிமொழி எடுத்திருந்தார். அது என்னவெனில், தன் மகளை ஒரு சிவபக்தனுக்கல்லாது வேறு யாருக்கும் மணம் முடித்துக் கொடுக்காத விரதம் ஆகும். அது அப்பொழுது நினைவிற்கு வந்தது. அதனை

நினைத்து. இப்படிப்பட்ட சிறந்த பக்தனுக்கு இப்பொழுது மணம் முடித்துக் கொடுக்காது. எப்பொழுது யாருக்கு மணம் முடித்துக் கொடுப்பேன்? என்று நினைத்தார். பின்பு, பசவண்ணாிடம் சென்று, என் மகளைத் திருமணம் செய்து கொண்டு என்னைக் காப்பாற்று பசவண்ணா! என்று வேண்டி நின்றார். பசவண்ணாவின் அனுமதி கிடைத்தபிறகு மிக்க மகிழ்ந்து, தன் மகளுக்கும் பசவண்ணாவிற்கும் நடக்கவிருக்கும் திருமணத்திற்காக ஊரெல்லாம் தோரணங்கள் கட்டச் செய்தார். சிவபக்தர்கள் அனைவரையும் திருமணத்திற்கு அழைத்து வந்தார். அவர்கள் விரும்பும் வசதிகள் அனைத்தையும் செய்து கொடுத்தார். கோலாட்டம், பேரணி, சாங்குமலா, அனுசப்தமு, ஆனந்த கீதம், சங்கரகீதம், ஜதிகீதம் போன்ற கீதங்கள் இசைக்கப்பட்டன. இவைகளைக்கேட்ட சிவபக்தர்கள் சிவபக்தி மேலிட ஆடிக்கொண்டு சென்றனர். சிலர் அந்த மயக்கத்தில் சிவனை நினைந்து, தன்னை மறந்து தூங்கிக்கொண்டு இருந்தனர். பசவய்யா குளித்து, புதுத்துணி அணிந்து. உடம்பெல்லாம் விபூதிபூசி, தலையில் சாமிப்பிரசாதமாகிய பூவினை அணிந்து, ருத்ராட்சமும் அணிந்து, கூடவே லிங்கபசவாயுதம் என்ற கத்தியும் அணிந்திருந்தார். இறைவன் மீது கொண்ட அதீத அன்பின் காரணமாக கண்களில் ஆனந்தக்கண்ணீர் வடிய அமர்ந்திருந்தார். நான் மிகவும் புண்ணியம் செய்தவன் என்று கூறி, தன் மகள் கங்காம்பாளை அழைத்து வந்து, அங்கிருக்கும் சிவ பக்தர்களுக்குத் தனது மகளை வணக்கம் சொல்லுமாறு செய்வித்து, அட்சதை தூவி, சிவனுடைய அனுக்ரகம் அதிகமாக இருக்கும் முகூர்த்தத்தில், வேதத்தில் சொல்லப்பட்ட சிவ சமயத்தின் விதிப்படி திருமணத்தை நடத்தினார். திருமணமென்றால் இவ்வாறுதான் நடக்க வேண்டும் என்று உலகத்தில் உள்ளவர்கள் அனைவரும் நினைத்தனர். சிவபக்தர்களின் பலத்தினாலே விஷ்ணு, பிரம்மா ஆகிய இவர்களும் கூட எரிந்து போகிறார்கள். அப்படி இருக்கும்போது மீதி இருக்கக்கூடிய கிரகங்களின் பலன்களை சொல்லத்தேவையே இல்லை. அவை ஒன்றும் செய்து விடாது. சிவபக்தர்களின் கருணை நிறைந்த பார்வையே நல்ல லக்கினம் ஆகும். சிவபக்தர்களின் செயலே நல்ல முகூர்த்தம் ஆகும். சிவபக்தர்களின் ஜீவனே பலம் ஆகும். அப்படிப்பட்ட பக்தர்களின் கருணை பசவருக்கு உண்டு. இவ்வாறாக

உலக மக்கள் அனைவரும் அதிசயப்பட்டுப் பேசும்படியாக பசவண்ணாவின் திருமணம் நடந்தது.

திருமணம் முடிந்த பிறகு, பசவண்ணா சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து, சங்கமேஸ்வரத்தில் எங்கள் குருதேவர் இருக்கிறார்; அவருடைய திருவடிகளுக்குச் சேவை செய்வதற்காக நான் செல்லுகிறேன்; எனக்கு அனுமதி கொடுங்கள் என்று கேட்டு, தங்கையையும் மனைவியையும் அழைத்துக் கொண்டு பலதேவனின் அனுமதியோடு சங்கமேஸ்வரத்திற்குப் புறப்பட்டார்.

தூரத்தில் அவ்வூரைப் பார்த்தவுடனே, பசவண்ணா தரையில் விழுந்து நமஸ்கரித்தார். அப்பொழுதிலிருந்து அவ்வூர் சென்று அடையும் வரை வணக்கம் சொல்லிக் கொண்டே சென்றார். அனைவரும் அவரது பக்தியைப் புகழ்ந்து பேசும்பொழுது அவ்வூருக்குள்ளே நுழைந்தார். சங்கமேஸ்வரத்தின் மகிமையை எடுத்துச் சொல்ல ஆதிசேசனாலே கூட முடியாது. அவ்வூரில் உள்ள நீர் நிலைகள் அனைத்தும் புண்ணிய தீர்த்தங்கள். குகைகள் அனைத்தும் சிவன் குடியிருக்கும் குகைகள். மலைகள் அனைத்தும் பொன்னால் செய்யப்பெற்றவை. மரங்கள் அனைத்தும் ருத்ராட்ச மரங்கள், தோட்டங்கள் அனைத்தும் பூந்தோட்டங்களே. சுரங்கங்கள் அனைத்தும் விபூதியால் ஆனவை. மாடுகள் (பசுக்கள்) எல்லாம். காமதேனுக்களே. காளைகள் நந்தி போன்றவையே. சங்கமேஸ்வரத்தில் இருக்கும் அனைவரும் சிவபக்தர்களே. மக்கள் அனைவரும் சிரஞ்சீவிகள். பொய், பாவம், கெட்ட பழக்கம் இல்லாதவர். ஊனமுற்றோர் அவ்வூரில் மருந்திற்குக்கூட இல்லை. இப்படிப்பட்ட ஒப்பற்ற சிறப்புவாய்ந்த சங்கமேஸ்வரத்தை அடைந்ததும் கூடலி சங்கமேஸ்வரர் ஆலயத்திற்குச் சென்று சாஷ்டாங்கமாய் விழுந்து, இறைவனைப் புகழ்ந்து வணங்கினார்.

சங்கையன் முதலில் வந்த தபசு வேடத்தில் கோயில் உள்ளே இருந்து வந்தார். பசவண்ணா மிகுந்த பக்தியினாலே அவருடைய திருவடிகளில் விழுந்து ஆனந்தத்தால் அர்ச்சனை செய்தார். சங்கையன் கருணைகாட்டி, தம் மகனை எடுத்துக் கட்டிப்பிடித்துக் கொண்டு, பசவன்னரின் பக்தி கண்டு மகிழ்ச்சி அடைந்து, அவருக்கும்

பிரசாதம் கொடுத்தார். பின்பு அவரிடம்', இங்கு வந்து போகிறவர்களிடம் உன்னுடைய நல்ல செய்திகளைக் கேட்டு நான் மகிழ்ச்சி அடைந்தேன். எப்போதுமே சிவபக்தி மார்க்கத்திலே அது தவறாது நடக்க வேண்டும். சிவபக்தர்கள் ஏதாவது தவறு செய்தாலும், அதனைத் தவறாக எடுத்துக் கொள்ளாதே. அவர்கள் உன்னுடைய எதிரிகளாக இருந்தாலும் லிங்கதாரிகளாய் இருந்தால் அவர்களை நண்பர்களாக நீ கருத வேண்டும். நீ கடைபிடித்திருக்கும் சிவவிரதத்தை உயிர் போனாலும் விடாதே. வேறு பக்தர்கள் யாரையும் நீ நினைக்காதே. சிவபக்தியே வேண்டாம் என்று கூறுகிற தீயவர்களை, அவர்களின் உயிரைப்போக்குபவனாக இருந்து நீ கொன்று விடு. வேதங்களிலும் சாஸ்திரங்களிலும் சொல்லப்பட்டு இருக்கிற இந்த பக்தியை நீ கற்று. இந்த சிவநெறியை உலகத்தில் நீ நிலை நாட்ட வேண்டும். பக்தர்கள் உன்னை நிந்தித்தாலும் அடித்தாலும் உதைத்தாலும் சரணம் என்று சொல். பெண்கள் மேல் வேறு சிந்தனை வைக்காது, நன்றாக நடத்து. சுவாமிக்குப் படைக்கப்பட்ட பிரசாதத்தினைத் தவிர மற்ற எல்லா பொருள்களையும் கெட்ட பொருளாகக் கருது. நடமாடும் சிவபக்தர்களாகிய சங்கமரை எப்பொழுது பார்த்தாலும் என்னைப் பார்த்ததாகக் கருது. பிரசாதத்தினையே சாப்பிடு. சிவபக்தர்களுக்கு எப்பொழுதும் துதி செய். ஏதேனும் வேண்டுமென்றால் தயங்காது என்னை நினை. எப்பொழுதும் என்னை மறக்காதே. என்றிவ்வாறெல்லாம் போதனை செய்து சங்கய்யா கோயிலுக்கு உள்ளே சென்று லிங்கத்தோடு ஐக்கியமானார். இதைப்பார்த்த அனைவரும் அதிசயப்பட்டு, இவர் சாதாரண மனிதர் அல்லர்; எப்பொழுதாவது இந்தக் கோவில் அருகே இப்படி ஒரு முனிவரைப் பார்த்து இருக்கிறோமா? பிறந்ததற்கு பயன் இவ்வாறல்லவா இருக்க வேண்டும்? இதற்கு முன்னால் பக்தர்கள் சிவபக்திக்காக மிகுந்த துன்பப்பட்டுள்ளனர்; ஆனால், இவருக்கு எந்தத் துன்பமும் இன்றி, சிவ அனுக்கிரகம் எளிதாகக் கிடைத்துள்ளது எனப் பெருமைபடப் பேசினர். பசவண்ணா பக்தர்கள் அனைவரும் சூழ்ந்துள்ள நேரத்தில் கோயிலின் முன் உட்கார்ந்து பூசை செய்தார். மூன்று நேரமும் கோயிலின் முன் உட்கார்ந்து பூசை செய்து தம் காலத்தை பிரயோசனமான முறையில் செலவிட்டுக் கொண்டு இருந்தார்.

# இரண்டாவது அத்தியாயம்

## பசவண்ணனுக்கு பிஜ்ஜலன் தண்டநாயக்கன் பதவி கொடுத்தல்

கல்யாணத்தில் இருக்கிற சிவபக்தரான நிதியமைச்சர் பலதேவ தண்ட நாயக்கர் பசவண்ணாவிற்குத் தன் மகளைக் கொடுத்ததனாலே. பிரமத கணங்கள் அனைத்தும் பாராட்டி, அவரை அழைத்ததன் பொருட்டாக கைலாயம் சென்றார். மன்னரான பிஜ்ஜலன் மந்திரிகளையும் பந்து ஜனங்களையும் அழைத்து பலதேவனுக்கு மகனாக இருப்பவர் இந்தப் பதவியை ஏற்றுக் கொள்வாரா? என்று கேட்டார். அப்பொழுது இரு க்கிறார் என்று பதில் வந்தது. பலதேவனின் (மகள் கணவன்) மருமகன் இருக்கிறார் என்று அவையில் பதில் வந்தது. அவர் நல்ல பண்புடையவர், விநயம் இருக்கிறவர், எல்லாக் கலைகளிலும் வல்லவர். இந்த நாட்டையே நிர்வகிக்கக் கூடிய பலம் இருக்கிறது. எப்படியென்று நீ கேட்கலாம். மக்களெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே சங்கமேஸ்வரரின் அருளையும் ஆசியினையும் நேரிலேயே பெற்றார். அதனாலேயே உனக்கு அவர் பிரதான மந்திரியாகப் பொருத்தமானவர் எனக் கூறினர். பிஜ்ஜலன் மகிழ்ச்சியடைந்து, தன்னிடமுள்ள அமைச்சர்களையும் நண்பர்களையும் அழைத்து, தான் உபயோகித்த யானையினை அனுப்பி அமைச்சர்கள் மூலம் பசவனை அழைத்து வர அனுப்பினார். அவர்கள் சங்கமேஸ்வரத்திற்குச் சென்று, பசவனைப் பார்த்து கீழே விழுந்து வணங்கிக் கீழ்வருமாறு கூறினார்.

சொர்க்க உலகம், மோட்சம் இதுவெல்லாம் உனக்கு ஒரு கணக்கேயில்லை. சிவபக்தியிலே தன்வயமாய் இருக்கிறவனுக்கு இதுவெல்லாம் ஒரு ருசியில்லை. இருந்தாலும் நீ உலகத்தின் நன்மை கருதி, எங்களின் பிரார்த்தனையை ஏற்றுக்கொள்ள வேண்டும். பிஜ்ஜலன் எவ்வாறாக இருந்தாலும் இவ்வுலகத்தை ஆளக்கூடிய சக்தி இருக்கிறதா? இந்த அமைச்சர் பதவிக்கும் இந்த ராஜ்யத்திற்கும் நட்பிற்கும் பொருளாளருக்கும் மற்றும் எல்லாவற்றிற்கும் உன்னைத்தவிர வேறு அதிகாரிகள் யாருமில்லை. ஒரு பிடி சோற்றுக்குத்தான் மன்னன் தகுதியானவன். இந்த நாட்டிற்கு

மட்டுமல்ல; உலகத்திற்கே நீ தான் மன்னனாக இருக்கிறாய், நீ வரவேண்டும் என்று கூறினார். பக்தர்களின் நன்மை கருதி, அவர்களின் வேண்டுதலை ஏற்றுக்கொண்டு பசவண்ணா கல்யாண கடகத்திற்குச் சென்றார்.

பசவண்ணா வந்த செய்தியைக் கேட்டவுடனேயே, பிஜ்ஜல மன்னன் இவரை எதிர்கொண்டு வரவேற்றார். பின்பு அவ்வூரை நன்றாக அலங்கரிக்கச் செய்து சிற்றரசர்களையும் மற்ற மந்திரிகளையும் அழைத்து நடந்தே எதிர்சென்று அவரை வரவேற்றார். அவருக்குக் காணிக்கையும் கொடுத்தார். 700 மிகச்சிறந்த யானைகள், 1200 குதிரைகள், 12,00,000 படைவீரர்கள் ஆகியவற்றையும் கொடுத்துப் பசவண்ணாவை நிதியமைச்சராக நியமித்த பின் தம் பரிவாரங்கள் சூழ வீதி வழியாக அழைத்து வந்தார். இது கண்ட அங்கிருந்தவர்கள் எல்லாம் கீழே விழுந்து அவரை வணங்கினார்கள். மன்னன் அரண்மனைக்குள் இவரை அழைத்துச் சென்று, இவர் வருவதற்கு முன் இங்கு இருந்த 12 மந்திரிகளுக்குள்ளும் இவர் பெருமைக்குரியவர் என்று இவருக்குச் சிறந்தொரு ஆசனத்தைக் கொடுத்தார். என் உயிருக்கும் என் இராஜ்ஜியத்திற்கும் என் பொருளுக்கும் நீயே அரசன் என்றுகூறி, நீயே நான்; உன்னையே நான் நம்பி இருக்கிறேன் என்று மன்னர் மிகுந்த பாசத்துடன் கூறினார். இந்த உலகத்தையே காப்பாற்றுகிற சிவனுக்கு உன்னை மட்டும் காப்பாற்றுவது பெரிதல்ல; சிவபக்தர்களுக்கு மட்டும் நீ எப்பொழுதும் பயந்து பக்தியோடு இரு. இந்த இராஜ்ஜியம் பரிபாலனம் செய்யப்படுவது பெரிய அதிசயமே கிடையாது என்று பசவனா கூறினார். பின்பு, பிஜ்ஜலன் நீங்கள் போய்வாருங்கள் என்றுகூற, இவருக்கென நியமிக்கப்பட்ட இடத்திற்குச் சென்றார். பலதேவன் வீட்டையே சொந்த வீடாகக்கருதி அங்கேயே இருந்து, அந்த இராஜ்ஜியத்தினை நன்றாகப் பாதுகாத்தார். பசவண்ணாவின் புகழ் உலகெல்லாம் பரவும்படியாக அமைந்து இருந்தது. தினமும் சிவராத்திரியாக இருக்க வேண்டும். சிவபக்தர்கள் அனைவரும் சிவனே என்று நினைக்க வேண்டும். பக்தர்கள் எந்தக்குலம் என்று கேட்காது இருக்கவேண்டும். அவர்கள் எதனைக்கேட்டாலும் அதனைக் கொடுப்பதனை ஒரு நியாயமாகக் கொள்ள வேண்டும். அவர்கள் எதனைப் பேசுகிறார்களோ அதனையே

செய்யவேண்டும். சொன்ன சொல் தவறாது இருக்க வேண்டும். கனவில் கூட சிவனுக்கு வெற்றியைக் கொடுக்காது அழிக்கக்கூடிய நியமத்தைக் கொண்டிருத்தல் வேண்டும். பிற சமயங்களைப் பற்றிப் பேசுபவரை அழித்தல் வேண்டும். சிவனைத் தூசிப்பவர்களின் தூசன வார்த்தைகளைக் காதில் கேளாது இருத்தல் வேண்டும். சிவார்ப்பணம் செய்யாத பொருளை கையால் தொடாதிருக்க வேண்டும். சங்கமர்களை உயிரோடு இருக்கிற லிங்கமாகக் கருதுதல் வேண்டும். சைவரல்லாதவரை வணங்காதிருத்தல் வேண்டும். அவர்களுக்கு வாக்குக் கொடுக்காதிருத்தல் வேண்டும். தலையே போவதாயினும் சரணம் என்ற வார்த்தையை விடாது உச்சரித்தல் வேண்டும். பசவண்ணரின் கதையை அவரைத்தவிர வேறு யாராலும் கூற இயலாது. பசவண்ணர் சாதாரண பக்தரல்லர். மிகச்சிறந்த புகழ்பெற்ற பக்தர் என்பதனைக் கேள்விப்பட்டு, அவரைப்பார்க்க நிறையபேர் வந்தார்களா? பேரும் புகழும் உண்மையில் வந்ததா? இல்லை பொய்யா? என்று பார்க்க நிறையப்பேர் வந்தனர். அவர் நிறையப் பொருளை வாரிவாரி வழங்குவதால் அவரைப்பார்த்தால் நிறையப் பொருள் பெறலாம் என்று எண்ணியும், அவரைப்பார்த்தால் சிவபக்தி அதிகமாகும் என்றெண்ணியும் நிறையப்பேர் வந்தனர். சந்தைக்குக் கூட்டம் கூட்டமாக செல்பவரைப்போல, ஒருவரைஒருவர் முந்தித்தள்ளிக் கொண்டு யானை, குதிரை, ரதம், பல்லக்கு மேலேறி வந்தனர். சிலர் விபூதி, ருத்திராட்சம், சிலர் தலையில் முடி, லிங்கதாரிகள், சிவபக்தியோடு கட்டுப்பாடாக இருப்பவர்கள் வந்தனர்.

பசவண்ணா வந்தவர்களைப் பக்தியோடும் சந்தோஷத்தோடும் வரவேற்றார். அவர்களின் பாதங்களில் நெடுஞ்சாங்கிடையாக விழுந்து வணங்கினார். அவர்களது பாதங்களைச் சுத்தம் செய்த தண்ணீரை எடுத்துத் தலையில் தெளித்துக்கொண்டார். அவர்கள் வேண்டுவென அறிந்து உணவு தந்தார். அவ்வூரில் உள்ள சங்கமர்களில் வேசிவீட்டிற்கும் சென்று வருபவர்கள் சுமார் 12,000 பேர் இருக்கின்றனர்.

பசவண்ணருக்குத் தங்கை மகன் ஒருவன் இருந்தான். அவனது பெயர் சென்ன பசவய்யா. இவன், சிவன் மீது கொண்ட பக்தியையே உயிராகக் கருதுபவன். எனவே, பசவண்ணா இவன்மீது நிறையன்பு கொண்டிருந்தார்.

அல்லம பிரபு என்ற மன்னர் சிறந்த சிவபக்தர். இவர் மான, அவமானங்களைச் சமமாகக் கருதுபவர் யோகி. வேதங்களைக் கற்றுணர்ந்தவர். எப்போதுமே இவர் தனது கையில் லிங்கத்தை வைத்து அதனைப்பார்த்துக் கொண்டே இது மரம், கல், பாதை, பள்ளம், காடு, தண்ணீர் என்ற நினைப்பே இல்லாது புறப்பட்டுச் சென்று கொண்டிருப்பவர். அவ்வாறு செல்லும்போது அவை அனைத்தும் விலகி அவருக்குப் பாதையை ஏற்படுத்திக் கொடுக்கும். பசவன் மேலுள்ள பக்தி வெள்ளத்தில் படகுபோல வந்தார். அல்லம பிரபுவைப் பார்த்து சரணம்! என்று சொல்லி அவருக்கு வேண்டியன செய்து, மங்கல ஆரத்தி எடுத்து, ஐந்து வகை உணவுகளுடன் உணவு பரிமாறினார். இவரே பிசைந்து உருண்டை, உருண்டையாகக் கொடுத்தார். இதுபோல முன்னொரு காலத்தில் சுரியசவுடருக என்ற பக்தர் இறைவனுக்கு உணவு கொடுத்தார். இவர் சாப்பிட்டுக் கொண்டே இருக்கவும் 1,80,000 பக்தர்களுக்குச் சமைத்த உணவு தீரவே, இனி நான் தான் உங்களுக்கு உணவு என்று உறுதியாக நிற்கிறார். அதனைக் கண்டு அல்லமபிரபு மகிழ்ந்து பசவண்ணாவைப் புகழ்ந்தார். உன் புகழ் நிலையாய் இருக்கும் என்றார்.

ஓடிக்கொண்டிருக்கும் தண்ணீருக்கு உடம்பெல்லாம் கால்கள், தீப்பற்றி எரிந்துகொண்டிருக்கும் நெருப்பிற்கு உடம்பெல்லாம் வாய். வீசிக்கொண்டிருக்கும் காற்றுக்கு உடம்பெல்லாம் தலை, இதுபோல மற்றவருக்காய் செய்து கொண்டிருக்கும் பசவண்ணாவிற்கு உடம்பெல்லாம் பக்தி. 'பசவா' என்றதும் சிறு குழந்தைக்குக்கூட பக்தி உண்டாகும். 'பசவா' என்று சொல்லுகின்ற பக்தர்களைப் பார்த்தவுடன் பறவைகளுக்கும் உலகில் உள்ள எதிரிகள், அனைவரும்கூட நண்பராவர். எரிந்துகொண்டிருக்கும் தீகூட நிலவாகும் என்று அல்லமபிரபு கூறினார். இதுபோன்ற பக்தி இந்த மூன்று லோகங்களிலும் யாருக்கேனும் இருக்கிறதா? என்று புகழ்ந்து பேசும்போது, கதை ஒன்று கூறுகிறார்.

கைலாயத்தில் ஒருநாள் சிவபெருமானை வணங்க மலைமகள் சென்றபோது, இவரைப் போன்றே தேவகணங்கள்

அந்த வடிவிலேயே இருந்தனர். வேறுபாடு தெரியாது அம்பிகை அப்படியே அங்கு நின்று விட்டாள். அப்பொழுது பார்வதியின் சந்தேகத்தினை சிவன் அறிந்து கொள்ள, மற்றவர்கள் அவரவர் ரூபத்திற்கு வந்து விடுகின்றனர். அவர்களுக்கு பசு, ஆடு,குரங்கு, கோழி போன்று அவர்களுக்கு முகங்கள் அமைந்திருக்கின்றன. எருமைமாடு, குதிரை, மான், பூனை, சிங்கம், யானை, பறவைகள் போன்றும், சிலருக்கு இரண்டு மூன்று, நான்கு முகங்களும் சிலருக்கு முகமேயில்லாமையும். சிலருக்கு கணக்கேயில்லாத முகங்களும் உதடுதடித்தவர்கள், மூக்கு, காது, கண்கள், வயிறு பெரிதாய் இருப்பவர்கள், நிறைய கைகள், கால்கள், நாக்குகள், வர்ணங்கள் போன்றன நிறைய இருக்கின்றன. கோடிக்கணக்கான இந்தத் தேவர்களைப்பார்த்து பார்வதி தேவி அதிசயப்பட்டார். தன் கணவனை வணங்கி, வேத நாயகனே! என் மனதை அறிந்தவுடன் இவர்கள் தங்கள் ரூபத்திற்கு மாறிவிட்டனர். அதனால் இந்த கணங்களுக்கு எல்லாம் இப்பொழுதே விருந்து வைக்க வேண்டும் என்ற ஆசை எனக்கு வந்துள்ளது என்றுகூறி மகாகாசம் என்ற இடத்தில் சமையல் செய்யச் சொல்லி, சிவன் பிரமத குமாரனை அழைத்து, நீ சென்று சமையல் பூர்த்தியாகிவிட்டாதா? என்று பார்த்துவா என்று கூறினர். பிரமதகுமாரன் சென்று சமையல் ஆகிவிட்டதா? என்று கேட்கின்றார். அதற்குப் பார்வதிதேவி பிரமதகணங்களை இங்கிருக்குமாறு அழைத்துவா! என்று கூறுகின்றார். அதற்கு பிரமதகுமாரன் நான் தற்போது பசியாயிருக்கிறேன். எனக்குக் கொஞ்சம் சாப்பாடு கொடுத்தால் சாப்பிட்டுவிட்டுப் போய் அழைத்து வருகிறேன் என்றார். எனவே, பார்வதிதேவி உணவு,பரிமாற, உணவினை மலைபோன்று உருண்டை உருண்டையாகப் பிடித்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். எனவே, உணவு முழுவதும் தீர்ந்து விட்டது. பிரமத கணங்கள் அனைத்திற்குமாக சமைத்த உணவினை, இந்தச் சிறுவன் சாப்பிட்டு விட்டானே எனப் பார்வதிதேவி அதிசயித்தாள். சிவனிடம் சென்று தலைகுனிந்து நின்றாள். சிவபெருமான் சிரித்துக் கொண்டே பிரமதகணங்களைப் புகழ்ந்து பேசுகிறார்.

இதிலிருந்து அவை பெருமைக்குரியவை என்பது தெரிகிறது. பிரமதகணங்கள் நினைத்தால் இப்பூமி அழியும். படைப்பு, காப்பு முதலிய தொழில்களைச் செய்கின்ற பிரம்மன், விஷ்ணு முதலிய தெய்வங்களையும் அழித்து விடுவர் எனக்கூற, பார்வதி தேவி இதனைக் கேட்டு அதிசயித்து நின்றாள். அதுபோல் பார்வதி தேவியினாலேயே சிறு குழந்தைக்குக்கூட உணவு கொடுக்க முடியவில்லை. என்னால் உனக்கு உணவு கொடுக்க முடியுமா? என வினவிய அல்லமபிரபு மகிழ்ந்து, அரவி, சிந்தாமணி, கற்பகவிருட்சம் இவை மூன்றும் அருகிலேயே இருக்கும்போது வரம் கொடுப்பது கடுமையான செயலல்ல, நினைத்தால் எல்லாப்பொருட்களும் கிடைக்கும். சாம்பலைப் பிடித்தாலும் அது பொன்போல மாற வேண்டும். சாதாரண வெளியில் கைவைத்தாலும் ஒரு மூர்த்தி உருவம் உண்டாகும். சிவன் சண்டையிட வந்தாலும் தயங்காது வெல்லக்கூடிய சக்தி உண்டாகும் என்றுகூறி அழியாது இருக்கிற செல்வத்தையெல்லாம் அவருக்குக் கொடுத்தார். மோகமாகிய இருட்டைப் போக்கினார். எப்போதுமே சிவபக்தியிலே நிரந்தர பரமானந்த சுகத்தினை அனுபவிக்கிறபடி செய்தார். உப்புமுட்டையைத் தண்ணீரில் வைத்தாற்போல, சிவபக்தியில் ஊறிய பசவண்ணனுக்கு அல்லமபிரபு இதுபோன்ற வரங்கள் பலவற்றைக் கொடுத்தார்.

### கத்தரிக்காய் லிங்கமான கதை

ஒரு நாள் பசவண்ணா சங்கமார்ச்சனை செய்து கொண்டிருக்கிற சமயத்தில், திருடர்கள், பசவண்ணாவின் வீட்டில் இருக்கும் செல்வத்தை எல்லாம் கொள்ளையடிக்க நினைத்து, கத்தரிக்காயைத் துணியில் சுற்றிக் கட்டிக் கொண்டு லிங்கதாரிகளைப்போல வந்தார்கள். பசவண்ணரைப்பார்த்து பயத்தோடு வணங்கினார்கள். பசவன் அவர்களைப் பார்த்து கண்களிலேயே சிரித்து, லிங்கதாரியாகாதவர் ஈசுவரரின் வாசலுக்கு எவ்வாறு வரமுடியும். நீங்கள் லிங்கதாரியாய் இருக்கிறபடியால் உங்களுக்குச் சகல மரியாதைகளையும் செய்கிறேன் என்றார். உடனே, அவர்களுக்குப் பயத்தால் உடம்பெல்லாம் குளிர்ந்து போயிற்று. கடவுளின் பெயரைச் சொன்னால் உயிர் பிழைக்கலாம்.

இங்கிருந்து தப்பிச் செல்ல முடியாது என்று அங்கேயே அமர்ந்தனர். நிஜமான லிங்கதாரியைப் போலே கைநீட்டினர். பசவரின் மகிமையாலே அவர்கள் தம்வசம் வைத்திருந்த கத்தரிக்காய் பிராண லிங்கமாக மாறிப் போனது.

## பல்லேக மல்லய்ய கதை

ஒருநாள் பல்லேக மல்லய்ய என்பவர் வியாபாரத்திற்காக ஊருக்குச் சென்றார். அவ்வூரில் எங்குமே சிவாலயங்கள் இல்லை. இவருக்கு ஒரு நியம் இருந்தது. எப்பொழுதுமே லிங்கத்தைத் தொட அல்லது பார்க்க வேண்டும் என்ற நியதியே அதுவாகும். அந்த நியமம் போய்விட்டால் அவர் இறந்து விடுவார் என்று தெரிந்து அவ்வூரில் உள்ளவர்கள் சிறு கோவிலைச் செய்து, படியை வைத்து, பூவால் பூஜை செய்து, இதுதான் சிவபெருமான் கோவில் என்று அவரைக் கூட்டி வந்து காட்டினர். மல்லய்ய சிவாயநமோ நமோ என்று கூறிய படியே பலமுறை கீழே விழுந்து வணங்கினார். அத்துடன் மூன்று முறை சுற்றி வந்தார். பிறகு வீட்டிற்கு வந்து உணவு உண்டார். இவரைப் பார்த்துச் சிலர் படியை வணங்கி நீவீர் சாப்பிட்டால் அந்தப் படியைக் கொண்டு வாருங்கள்; தானியத்தை அளக்க வேண்டும். எது உணவு கொடுக்கிறதோ. அதுவே தெய்வம் என்று கூறி இவரைக்கேலி செய்தனர். இதனைக் கேட்கக் கூடாதே என்று நினைந்து தன் காதுகளை மூடிக்கொண்டார். பின்பு அவ்வாறு கேலி செய்தவர்களைப் பார்த்து நீங்கள் நாய்போல் குரைக்கிறீர்கள். உண்மையான லிங்கமூர்த்தி இதுதான். உங்களுக்குத் தெரியாவிட்டால் என்னுடன் கூடவே வாருங்கள் என்று அவர்களை அழைத்துச்சென்று. அச்சிறுகோவிலைக் காட்ட அங்கு, பிரகாரம், முகமண்டபம். சுவர்ணசிகரம், கோவில் ஆகியவை அனைத்தும் இருந்தது. அந்த கோவிலுக்கு முன்பே நந்தியும் இருந்தது. அந்தபடி லிங்கமாகத் தெரிந்தது. அதனைக் கண்ட அனைவரும் பிரமித்துப் போய் நின்று அவரைப் புகழ்ந்து துதித்தனர்.

## காடகோடன் கதை

காடகோடன் என்ற ஆடுமேய்ப்பவன் இருந்தான். அவன் ஆட்டின் தம் ஆட்டின் சாணத்தையே ஈஸ்வரனாகக் கருதினான். எனவே,

தினமும் பாலைக்கறந்து அதன்மேல் ஊற்றினான். அதுகண்ட அவனது தந்தை இவனைக் கேலி செய்து, காலால் உதைத்தார். அதனால் கோபமுற்ற காடகோடன் தன் கையில் உள்ள கோடாலியினால் தன் தந்தையின் தலையை வெட்டினான். அதே நேரத்தில் அவன் லிங்கமாக வழிபட்ட சாணங்கள் அனைத்தும் லிங்கமாக மாறின. இவ்வதியத்தைக் கண்ணுற்ற சு. பக்தர்களாய் இல்லாதவர்களைக்கூட பசவண்ணா சிவபக்தர்களாக மாற்றியிருக்கிறார்.

## சோளம் முத்து ஆன கதை

பசவண்ணா ஒருநாள் சிவபூசை செய்து கொண்டிருக்கும்போது ஒரு சங்கமர் வீட்டிற்கு வந்தார். எனக்கு ஒரு நியமம் இருக்கிறது கோலம் போடுவதற்கு 10 மூட்டை முத்துப்பொடி வேண்டும் என்றார். அதுவும் இப்பொழுதே, இந்த நிமிடமே வேண்டும் என்றார். 'லிங்கபஸாயுதமு' என்ற ஆயுதத்தை எடுத்து அதனைப் பார்த்தவுடன் சோளங்கள் அனைத்தும் முத்துக்களாய் மாறின. அவரைப்பார்த்து, 10 மூட்டை என்ற கணக்கு எதற்கு? உங்களுக்கு எவ்வளவு வேண்டுமோ? அவ்வளவு எடுத்துச் செல்லுங்கள் என்று கூற அவர் வேண்டுமளவு எடுத்துச் சென்றார்.

## மொரட்டத வங்கையா கதை

இவரது வீட்டிற்கு பாதி இரவில் மற்றொரு பக்தர் வந்தார், வங்கயைா அவரது காலில் விழுந்து, வேண்டியன எல்லாம் செய்கிறார். எங்கள் லிங்கத்திற்கு ஒரு நியமம் இருக்கிறது. மாட்டுப்பால், வில்வமரம், இலை இவை வேண்டும். அது இருந்தால் தான் என் வேலை நடக்கும். கொஞ்சம் கூட காலதாமதம் ஆகக்கூடாது. சிவபக்தர்கள் யாரும் இவ்வூரில் இல்லை. மற்றவர்களை நான் கேட்கமாட்டேன். இருந்த சிவபக்தர்களும் இப்பொழுது ஊரில் இல்லை. பக்கத்தில் இருக்கும் ஊருக்கு இந்த நேரம் நான் செல்லவும் முடியாது என்றார். ஈனாப்பசுவை கொண்டு வந்து, சிவபக்தர்களைத் தன் மனதில் நினைத்து, இந்த மாட்டில் பால் வரவேண்டும் என்று நினைத்து பாத்திரத்தைக் கொண்டு வந்தார். கறந்தவுடனே, அப்பாத்திரம் நிறைய பால் மழைபோல் பெய்தது. மாடு கட்டப்பட்டிருந்த குச்சியில் வில்வஇலைகள் துளிர்த்தன. வங்கய்யா அதனை அறுத்துக்

கொண்டு வந்து பக்தருக்குக் கொடுத்தார். முன்பு பெரியவர்கள் கூறுவதனைக் கேட்டோம். இப்பொழுது கலியாண கடகத்தில் இது உண்மையாக நடந்திருக்கிறது என்று மக்கள் பேசிக்கொண்டனர்.

**சங்கமேஸ்வரர் பசவண்ணாவின் மூன்றாவது கண்ணைக் கேட்கும் கதை**

பசவண்ணா பக்தர்கள் கேட்கும் பொருள்களையெல்லாம் கொடுத்துக் கொண்டிருக்கும் காலத்தில், அனைவருக்கும் கொடுக்கிறானே எனக்கும் கேட்க வேண்டும் என்று நினைத்து, லிங்கமூர்த்தி ஆன சிவபெருமான் சங்கமர் வேடத்தில் வருகிறார். பசவண்ணாவிடம் மூன்றாவது கண்ணைக் கேட்கிறார். இவர் வாளைக் (லிங்கபசாயுதம்) கையில் வைத்துக் கொண்டு, உனது மாயை எனக்குத்தெரியாதா? என்று கூறி கண்ணைக் காட்டி மூன்றாவது கண் உனக்கு இயற்கையாக இருக்கிறது பார் என்றார். இக்கண்ணாடியில் தனது மூன்றாவது கண்ணைக்கண்டு சிவபெருமான் மாயமாக மறைந்து விடுகிறார். உடனே, பசவண்ணா அவரைப்பார்த்து, "ஓடிப்போகாதே நான் உன்னை எதையுமே கேட்கமாட்டேன். சிவபக்தர்கள் வீட்டில் நீ செய்தது என்னவென்று எனக்குத் தெரியாது என்று நினைத்தாயா? சிரியாளன் போன்று எனக்கு மகன் வேண்டும் என்று கேட்க மாட்டேன். தாசய்யா போன்று உன்னை தவநிதி கேட்கமாட்டேன். கரிகாலன் போன்று பொன்மழை கேட்கமாட்டேன். நம்பியாரூரார், கும்மரி குண்டையா போல சொர்க்க சுகங்கள் எதனையும் கேட்க மாட்டேன்."

"உன்னுடைய பக்தர்கள் வீட்டில் இருக்கிற பிரசாதமே வாழ்நாள் முழுதும் போதும்"என்றார்.

**பக்தர்கள்**

| | |
|---|---|
| 1) அபிஷேகம் செய்பவர் | காடகோடய்யா |
| 2) மாலையால் அலங்கரிப்பவர் | புஷ்பதந்தன் |
| 3) பூசை செய்பவர் | கண்ணப்ப தேவன் |
| 4) திரி செய்பவர் | ரேகவ்வா |

| | |
|---|---|
| 5) கண்ட தீபம் ஏற்றுபவர் | நமிநந்தி |
| 6) ஆசிர்வதித்து விபூதியை வைப்பவர் | பிள்ளையாண்டான் |
| 7) கந்தம் கொடுப்பவர் | அனுமூர்த்தி |
| 8) தூபம் காட்டுபவர் | மாசய்யா |
| 9) மணி அடிப்பவர் | ஒகிலய்யா |
| 10) மங்கல ஆரத்தி எடுப்பவர் | சோமய்யா |
| 11) சமையலுக்கு விறகு கொண்டு வருபவர் | மாரய்யா |
| 12) சமையலுக்குத் தேவையான பொருட்கள் சேகரிப்பவர் | கரிகாலன் |
| 13) சமையல் செய்பவர் | சிறுத்தொண்டர் |
| 14) சமையல் செய்யும் பெண்மணி | சங்களவ்வா |
| 15) பாத்திரம் வைப்பவர் | கரிகாலன் |
| 16) காவல் காப்பவர் | ஹொன்னய்யா |
| 17) சுவையாக சமைப்பவர் | சென்னய்யா |
| 18) உண்பதற்கு வேண்டுவதைக் கொடுப்பவர் | வீரசோடவ்வா |
| 19) தாம்பூலம் கொடுப்பவர் | ரேசய்யா |
| 20) பால், பிரசாதம் கொடுப்பவர் | பிப்ப பாசய்யா |
| 21) வைத்தியம் செய்பவர் | நாட்டிய நிமித்தண்டி |
| 22) புரோகிதர் | கல்லிதேவய்யா |
| 23) புராணம் சொல்பவர் | மாயிபட்டு |
| 24) விதூசகன் | களியம்ப |
| 25) பாடகர் | வாகீசர் |
| 26) கவிஞர் | ஸ்ரீபதி பண்டிதர் |

| | |
|---|---|
| 27) அன்பு | மல்லிகார்ஜீன பண்டிதர் |
| 28) வீணை வாசிப்பவர் | மாதிராசய்யா |
| 29) இசைஞானி | சங்கரய்யா |
| 30) கணக்கு | கேசிராஜுலு |
| 31) தண்ட நாயக்கன் | ஜகதேவன் |
| 32) அமைச்சன் | கணநாதன் |
| 33) மன்னன் | இரவத்துல்லு |
| 34) குதிரைப்படை, யானைப்படை | சேரமயோகி |
| 35) தனிமையில் இருப்பவர் | ராமய்யா |
| 36) வேசி தொடர்புடையவர் | பல்லகா |
| 37) தோழி | நம்பி |
| 38) சேவகன் | சங்கரதாசி |
| 39) அருகில் இருப்பவர் | ஏனாதிநாதன் |
| 40) சேவகராய் இருப்பவர் | மஞ்சய்யா |
| 41) வரிவசூல் செய்பவர் | சங்கேச பங்கய்யா |
| 42) கத்தி வைத்திருப்பவர் | சரியசவுடய்யா, |
| 43) தாதி | பெஜ்ஜமகாதேவி |
| 44) மந்திரவாதி | ருத்ரபசுபதி |
| 45) ஜாலகாரன் | கக்கய்யா |
| 46) தாசிவேலை | தேவரதாசய்யா |
| 47) வியாபாரி | கின்னரபிரம்மய்யா |
| 48) துணிதுவைப்பவர் | மடிவாலுமாசய்யா |
| 49) தீவட்டிபிடிப்பவர் | கடமலநம்பி |

| | |
|---|---|
| 50) சுவருக்கு வெள்ளையடிப்பவர் | கோடலுமல்லய்யா |
| 51) குயவன் | கும்மரிகுண்டையா |
| 52) வேடன் | சொம்மையா |
| 53) உலோக ஆசாரி | பொம்மையா |
| 54) கடை வைத்திருப்பவர் | பல்லேகமல்லய்யா |
| 55) பல்லக்குத்தூக்கி | பாசய்யா |
| 56) பால்கறப்பவர் | வங்கய்யா |
| 57) பால்காய்ச்சுவதில் திறமையானவர் | கொடகூஜ்ஜி |

"இதுபோன்ற உனது பரிவாரங்கள் அனைத்தும் எங்களுடையதாக இருக்கும்போது எங்களுக்கு சோர்வு ஏது? நீ என்ன கேட்டாலும் கேள். நான் இப்போதே தருகிறேன்."

"இவையெல்லாம் நடப்பதற்கு முன்பே. பார்வதியைத் திருமணம் செய்வதற்கும் முன்பே நீ எனக்கு இறைவன். அஷ்டமூர்த்திகள் பிறப்பதற்கு முன்பே. உலகத்தில் அரியும் அயனும் பிறப்பதற்கு முன்பே. அதற்கும் முன்பே நான் உனக்கு அடியவன். எதற்காக நீ குழம்புகிறாய்? என்னை மீறி நீ செல்ல முடியுமா?" என்று சிவனுடன் பேசி வெல்லுகிறார் பசவண்ணா.

## ஆடுமேய்க்கும் பெண்ணின் மோர்ப்பானை கீழே விழாது பசவண்ணா பிடித்த கதை

ஒரு நாள் பசவண்ணா பிஜ்ஜல மன்னன் அவையில் அமர்ந்திருக்கும்போது, பயப்படாதே! பயப்படாதே! என்று சொல்லிக்கொண்டே பானையைப் பிடிப்பதுபோல இரண்டு கைகளாலும் பாவனை செய்கிறார். அதனைப்பார்த்து மன்னன் சிரித்துக் கொண்டு, சிறிது சாம்பலை நெற்றியில் பூசினால் மழைபோல் மயக்கம் வரும் என்பது தெரியவருகிறது. சிவன்மேல் உனக்குப் பித்தா? பக்தி ரசம் உன் தலையிலும் ஏறிவிட்டதா? எல்லோரும் உட்கார்ந்திருக்கும் இந்தச்சபையில் பயப்படாதே! பயப்படாதே! என்று கூறி, கையை

எதற்காக நீட்டினாய்? என்னை நான் புகழ்ந்து கொள்ளக் கூடாது. அவ்வாறு கூறிவிட்டால் இச்சபை என்னைப் பார்த்துச் சிரிக்கும். சிவன் கோயிலுக்குக் கிழக்குத்திசையில் கபிலேஸ்வாம் என்ற இடத்தில் ஒரு முனிவர் அங்கிருக்கும் லிங்கத்திற்கு தினமும் ஆறு அபிஷேகம் செய்து கொண்டு வந்திருந்தார். அந்த பாலானது கால்வாயாகத் தெருவெல்லாம் பரவி ஓடிக் கொண்டு இருந்தது. மக்கள் கால்பட்டு அந்தத் தெருவே சேறாகிவிட்டது. அந்தத் தெருவில் பால் விற்பதற்குப் போகும்போது, ஒரு பெண்மணி கால் வழுக்கி கீழே விழப் போகும்போது. பசவண்ணா! என்று அழைக்க, அந்தப் பானை கீழே விழாது இருக்க கைகளை நீட்டி நான் பிடித்தேன் என்று சொல்லி அப்பெண்ணின் உருவத்தினையும் செயல்களையும் உடையையும் இடம் பற்றியும் மற்றும் பிற பற்றியும் கூறியபடியே அப்பெண்ணும் கூறினாள். அப்பெண் கையிலும் காலிலும் உள்ள சேறைக் காட்டி, உங்களுக்குத் தெரியாதா? இவருடைய புகழ் என்று கேட்டாள்.

### திருச்சிற்றம்பலன் கதை

63 பக்தர்களில் ஒருவராகிய திருச்சிற்றம்பலன் என்பவர் இருந்தார். அவர் சிவ பூசைக்காக பூக்களைப் பறித்துக் கொண்டிருந்தார். அதனைக் கொண்டு வரும்போது, கால் இடறி. பூக்கள் கீழே விழுந்து விடுமோ எனப்பயந்து 'சிற்றம்பலத்தீசா' என்று கூக்குரலிட்டார். அப்பக்தர் கீழே விழாது இறைவன் வந்து பிடித்துக் கொண்டார்.

மன்னா 'சொன்னலிபுரமு' என்ற ஊருக்கு சித்தராமய்யா சென்று அங்கிருக்கும் பக்தர்கள் சபையில் அவர் அமர்ந்திருக்கும்போது, அங்கிருப்பவர்கள் அவர்களைப்பார்த்து, ஏ! சுவாமி! உலகத்தில் புகழ்பெற்ற புதுஸ்ரீசைலம் (மற்றொரு ஸ்ரீசைலம்)போல புகழ் வரும்படிச் செய்து, அது போன்ற கடவுளை (மல்லிகார்ஜுன சுவாமி) இங்கு கொண்டு வந்து நிறுத்தி இருக்கிறாய். அதுமட்டுமல்லாது, 1,90,000 லிங்கங்களை இங்கு கொண்டுவந்து பிரதிஷ்டை செய்து இருக்கிறாய். இந்த பூமியில் இருக்கிற உணவும், நீரும் எதனையும் தொடாத

பக்தி பாவசத்தினாலே அவருக்கும் பிறவியிலே மணிமுடி. நெற்றியில் கண் யோகானந்தத்தில் அவர் நடக்கும்போது அவாது நிழல் கீழே விழாதபடி. தரையில் வைத்த காலடி கூட தெரியாது திரிந்து கொண்டிருந்தார். சமாதி யோகத்தில் பிரமத லோகத்திற்குப் போய் அங்கே சபையில் கலந்து கொண்டு இங்கு வருகிறேன். இது அனைவருக்கும் தெரிந்த விஷயம். ஸ்ரீமதயோகத்தில் பசவண்ணா என்ற பெயருடையவரை பார்த்து இருக்கிறீர்கள் அவர் சிவபக்தர்கள் சபையில் இங்கும். அங்கும் இருக்கிறார் என்று நாங்கள் கேள்விப்பட்டோம் என்று சிவபக்தர்களைப்பார்த்து, சித்தராமய்யா, பிரமதலோகத்திற்குச் சென்று அங்கிருக்கிற நந்தி பிரமத கணங்கள், உபமன்யு. வாமதேவா. கன்யா. அகஸ்தியன் முதலான முனிவர்கள், கருட. கந்தர்வா. சித்தர் போன்ற தேவர்கள் பிரம்மா, விஷ்ணு போன்ற தேவேந்திரர்கள் அபயம் சொல்லி பிரார்த்தனை செய்து கொண்டிருக்கும்போது. அம்பிகைகூட அந்த மண்டபத்தில் இருக்கிற சிவபெருமனைப் பார்த்து சித்தராமய்யா. ஓ சுவாமி! மத்தியில் இருக்கிற சிவபக்தர்கள் பிரமதலோகத்தில் பசவண்ணா இருக்கிறாரா என்று பார்த்து வரச்சொன்னார்கள் என்று அதனைக்கூறி. அவாது ரூபத்தை எனக்குக் காட்டுங்கள் என்று கூறினார். அந்த உலகம். இந்த உலகம் என்று கூறத்தேவையில்லை. பசவண்ணா எங்கும் இருப்பார். பிரமத கணங்கள் பக்தர்கள் உள்ளத்தில் இருப்பார்கள். என் இதயத்து ஆசனத்திலும் இருக்கிறார். இங்கே பார் என்று சிவன் தன் இதயத்தைத் திறந்து காட்டினார். அங்கு பத்மாசனம் போட்டு தவக்கோலத்தில் இருந்த பசவண்ணாவைப் பார்க்கிறார். பிரமதகணங்கள் அவருக்கு வணக்கம் செலுத்தினாாகள். பார்வதி தேவி பசவணனைப் பார்த்து, மிகுந்த ஆச்சரியப்பட்டார், சித்தராமய்யா மகிழ்ந்தார். பார்வதியைப் பார்த்து சிவன், பசவண்ணாவின் மகிமையைப் பார்த்தாயா? இது போன்ற பக்தியாருக்கும் உண்டா? ஆதி. விருஷபேந்திரா என்று இரண்டு சரீரங்கள் நானே கொண்டிருக்கிறேன். சிலாதனுக்கு பசவண்ணா என்ற பெயரில் உலக மக்கள் நன்மைக்காக நான் பிறந்தேன். பசவண்ணாவின் நல்ல குணங்கள் உனக்குத்தெரியுமல்லவா? என்று அவருக்கும் இவருக்கும் உள்ள வேற்றுமையைக் கூறுகிறார். நான் இவ்வுலக அதிபதி, அவர்

இவ்வுலக உயிர்கள் முக்தி அடையும்படி வழி செய்பவர். நான் இவ்வுலகத்தை அழிப்பவன், நன்மை செய்பவன். நான் அசையாத லிங்கம்; இவர் நடமாடும் லிங்கம்; என் பெயர் சம்புரு. அவர் பெயர் இரண்டாம் சம்புரு, ஸ்திர பக்தியில் என்னைப் பிரார்த்தித்ததால் முக்தி அடைய முடியும். பூமியில் பசவண்ணாவை நினைத்தாலே முக்தி உண்டாகும். அவர்களுக்கு உயிர், உடம்பு, பொருள் இவற்றைக் கொடுப்பவர். பக்தியினாலே பசவா என்ற மூன்றெழுத்தை யார் கூறுகிறார்களோ அவர்களது முகம் என்ற விட்டில் நானும் எனது கணங்களும் குடியிருப்போம். யாரிடம் பக்தி இருக்கிறதோ. அது பசவண்ணனின் மகிமையினாலே என்கிறார். 'பக்தி' என்ற பட்டம் பசவண்ணனுக்கு மட்டும் தான் பொருத்தம். மற்றவர் யாராலேயும் முடியாது. என் இதயம் மட்டுமல்லாது பக்தர்கள் இதயத்திலும் அவர் குடியிருக்கிறார். சிவன் பசவண்ணாவைப் பார்த்து, 'பசவா, இப்பூவுலகில் பக்தர்கள் இருக்கிறார்கள். இவ்வுலக வாழ்க்கை உனக்குப் பிடிக்குமா?' எனக் கேட்க, பசவண்ணா, மருந்திற்குக்கூட இந்தப்பூவுலகத்தில் சிவபக்தர்கள் இல்லை. நான் தான் பக்தன். மற்றவர்கள் அனைவருமே உங்களுடைய உருவம்தான். எனக்கு இன்னொரு வேண்டுகோள் ஒன்றுண்டு. சங்கமர்களின் பிரசாதம். சுகம் இதுதான் எனக்குப்பிடிக்கும் அந்த பிரசாதத்தைச் சாப்பிட்டுக்கொண்டே எத்தனை ஜென்மங்கள் வேண்டுமானாலும் சிற்றுயிராய் இருப்பேன். கைலாயத்தில் உள்ள அதிர்ஷ்டத்தில் அதுதான் சிறந்தது. 100 கோடி முறையாவது கூட எனக்கு ஜென்மங்கள் வந்தாலும் இவ்வுலகத்தில் நான் இவ்வாறுதான் இருக்கவேண்டும் என்று பசவண்ணா கூறினார். உடனே இந்நிகழ்ச்சிகளைச் சித்தராமய்யாவிற்கு சிவன் காட்டுகிறார். சித்தராமய்யா திரும்பவும் இவ்வுலகத்திற்கு வந்து பசவண்ணரின் மகிமை, சாமி சொன்னதைப் பார்த்தேன், கேட்டேன் என்று கூறுகிறார். மன்னன் உண்மைதான் அது மக்கள் அனைவரும் அவரது அற்புத செயல்களைப் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறார்கள் என்று கூறி விலைமதிக்க முடியாத வஸ்திரங்கள், ஆபரணங்கள் அனைத்தும் அவருக்கு மரியாதையுடன் கொடுக்கிறார்.

# மூன்றாவது அத்தியாயம்

ஒருநாள் பசவண்ணர், மந்திரிகள் அனைவரும் சபையில் இருக்கும் போது, மிண்ட சங்கமர் (வேசியை நாடுபவர்) வந்து எனக்குப் பணம் வேண்டும் என்று உரிமையோடு கேட்டார். பெட்டியில் இருக்கும் பொற்காசுகளை எடுத்து பசவண்ணா கொடுத்து விடுகிறார். மக்களும் சில மந்திரிகளும் மன்னன் பிஜ்ஜலனிடம் சென்று முறையிட்டனர். கூறினால் சாடை கூறுவது போலாகிவிடும். கூறாவிடில் தவறாகிவிடும். அவரிடம் வேலை செய்வதற்குப் பயந்து கொண்டு இருக்கிறோம் என்றனர். நிதியமைச்சரான பசவண்ணாவை அழைத்து கோபத்துடன் எங்கள் பணத்திற்கு கணக்குக் காட்டிவிட்டு நீ சென்று விடு. நீ பார்த்த அமைச்சர் பதவி போதும். கஜானா முழுவதையும் காலியாக்கிவிட்டாய். மற்றவர்கள் பணத்தை எடுக்கக்கூடாது என்று கொள்கை வைத்துக்கொண்டு இருக்கும் நீங்கள் மற்றவர்களது பணத்தை எப்படி எடுத்தீர்? ஆயிரம் பேச்சு எதற்காக? எங்களுடைய கணக்கைத்தீர்த்து விட்டு நீ எங்காவது செல், உன் விருப்பப்படி செல் என்றார். மென்மையான புன்னகையோடு, மன்னனைப்பார்த்து பசவண்ணர், பரமேஸ்வர பக்தி என்ற கற்பக விருட்சம் என்னிடம் இருக்கும்போது, சிந்தாமணி, காமதேனு மீது ஆசை வைப்பானா? சிங்கம் எப்பொழுதாவது புல் சாப்பிடுமா? பாற்கடலில் இருக்கும் அன்னம் சிறிய கால்வாயில் இருக்கும் நீருக்காக ஆசைப்படுமா? மாம்பழத்தை உண்டு கொண்டிருக்கும் கிளி இலவம்பழத்திற்கு ஆசைப்படுமா? பௌர்ணமி நிலவொளியில் இன்புறும் சகோரம் இருட்டினைப்பார்க்க ஆசைப்படுமா? தாமரையில் இருக்கும் தேனீ தேனில்லாத மலர்களை எவ்வாறு நாடிச் செல்லும்? உனக்குத் தெரியாது போலிருக்கிறது. இந்தப்பணமெல்லாம் எனக்குத் துச்சமானது மன்னவா! உன்னுடைய பணத்திற்காக நான் கைநீட்ட மாட்டேன். பக்தர்களுக்குக் கொடுத்தது பக்தர்களது பணம்தான். உனக்கு நம்பிக்கை இல்லாவிட்டால் கணக்குப்பார்த்துக்கொள் என்றுகூறி, பெட்டிகளைத் திறந்து மன்னனிடம், நீயே பார்த்துக்கொள் என்று கூற, கணக்கிற்கு அதிகமான பொற்காசுகளைக் கண்டு அனைவரும் அதிசயித்தனர்.

## நரி பரியான கதை

மதுரைப்பாண்டியன் ஒரு காலத்தில் தன்னுடைய அமைச்சனை அழைத்து நிறைய பணம் கொடுத்து குதிரை வாங்கி வர அனுப்பினார். அவர் சிவபக்தி உடையவர் என்ற காரணத்தினாலே சங்கமர்களை அர்ச்சித்து பணத்தைச் செலவு செய்தார். குதிரை வாங்கப் பணம் இல்லை. இருப்பினும் அவர் அஞ்சாது வயலில் இருக்கிற நரிகளை அழைத்து அவைகளைப் பாண்டிய மன்னனுக்குக் காட்டவே, சொக்கநாதர் கருணையினால் நரிகள் அனைத்தும் மிகச்சிறந்த குதிரைகளாயின. சிவபக்தர்கள் மகிமை அவ்வாறு இருக்கிறது. இது ஒன்றும் அதிசயமல்ல என்று அங்குள்ளவர்கள் பேசிக்கொண்டு மகிழ்ந்தனர். மன்னன் மிகுந்த ஆச்சரியப்பட்டார். நிஜமாகவே இவர் பரமேஸ்வரர்தான், வேறு யாருமல்ல என்று கூறி பட்டு வஸ்திரங்கள் மற்றும் அனைத்தையும் கொடுத்து மிகவும் அன்போடு மக்கள் அனைவரையும் அழைத்து, சத்தமாக இந்த நிதியமைச்சர் மீது குற்றம் சாட்டினால் அந்த நாய்களை அடித்து, நாக்கறுத்து, சுண்ணாம்பு பூசி சூடாக்கின மணலை அவர்கள் வாயில் இடுவேன் என்று கூறி, பசவண்ணாவை வழியனுப்பி வைத்தார். மக்கள் அனைவரும் புகழ்ந்து பேசினர்.

## பசவண்ணா தனது மனைவி சேலையை சங்கமனுக்குக் கொடுத்த கதை

ஒரு வேசி தனது வீட்டில் இருந்த ஒரு ஆளை அனுப்பி தினக்கூலி வாங்கிவா என்று கூறினாள். அவன் வந்து அங்கு பசவண்ணாவின் மனைவி கட்டியிருந்த சேலையைக் கண்டு, அதிசயித்து தினக்கூலி கேட்பதனை விட்டு, நான் பசவண்ணரின் வீட்டிற்கு சென்றபோது ஓர் அதிசயத்தைக் கண்டேன். பசவண்ணனின் மனைவி கட்டியிருக்கும் சேலையை இதற்கு முன்னால் நான் எங்குமே கண்டதில்லை. அதனைக் கூறுவதற்குத்தான் நான் இங்கு வந்தேன் என்று கூற, இதைக் கேட்டால் போதும். பசவண்ணா கொடுப்பார். தயங்கவே மாட்டார். கோடிக்கணக்கில் இருக்கும் சங்கமர்களுக்கு நிறைய வஸ்திரங்கள் கொடுத்திருக்கின்றனர். அவை வெஜ்ஜாவலி. ஜெயராவலி, மஞ்சுபுஜ்சம், சந்தியாராகம், இந்திரநீலம் போன்றவை.

ஆனாலும் அதனைப்போல இவை இல்லை. இவை அனைத்தும் அதற்குச் சரிவராது என்று சங்கமரைப் பார்த்து உனக்கு என்மேல் அன்பிருந்தால் நீ இப்பொழுதே சென்று பசவண்ணாவின் மனைவி கங்கம்மாள் கட்டியிருக்கும் சேலையை கொண்டுவந்து கொடு என்று கூற. சரியென்று அந்த சங்கமர் உடனே சென்று பசவண்ணரைப்பார்த்து. உங்கள் மனைவி கட்டியிருக்கும் சேலையை வேசியின் வீட்டில் இருக்கும்படி கொடுக்கவேண்டும் என்று கூறியவுடன், அவர் தன் மனைவியைச் சபைக்கு அழைத்து வரச்செய்து, மனைவியைப்பார்த்து பிறப்பும் இறப்பும் இல்லாத மகான் உன் சேலையைக் கேட்கிறார். தயங்காது கொடுத்தால் நமக்கும் பிறப்பின்றி போகும் என்று கூறி சிறிதும் வெட்கப்படாது தனது மனைவியின் சேலையைப் பிடித்து உருவினார். ஒரு சேலை மட்டும் அவர் உடம்பில் அப்படியே இருந்தது. அனைவரும் அதிசயித்து, சிவபக்தர்களாகிய சங்கமர்களுக்கு இது பெரிய கஷ்டமில்லை. ஒரு காலத்தில் நிடிகுடிநாயனார் என்ற பக்தர் தன் மனைவியின் சேலையைக் கழற்றி பக்தர்களுக்குக் கொடுத்தார். தேடர தாசய்யா 12 வருடம் விடாது தொடர்ந்து செய்து 12 முழம் உடைய வஸ்திரம் ஒன்றைப் பொன்னால் செய்தார். சிவபக்தர் கேட்டவுடன் தயங்காது கொடுத்து விட்டார். 'பல்லகுடு' என்ற சிவபக்தர் எந்தத் தயக்கமுமின்றி தன் மனைவியையே காணிக்கையாகக் கொடுத்தார் அல்லவா? மொன்னய தருடு' என்பவர் கேட்டவுடனேயே தன் கையிலிருந்த மாணிக்கத்தைக் கொடுத்தார் அல்லவா? நிடுகுடினி பெருமானி என்ற சிவபக்தர் வறட்சியான காலத்திலும் தன் சொத்து முழுக்க சிவபக்தர்களுக்கே செலவு செய்தார் அல்லவா? 'மானக்கஞ்சாரன்' என்பவர் தன் மகளுக்குத் திருமணம் நடந்து கொண்டிருக்கும் வேளையில் ஒரு முனிவர் வந்து கேட்க, அவளது முடியைக் கொடுத்தார் அல்லவா?

பசவண்ணனின் பக்திப் பரவசம் என்ற புகழ் உலகமெல்லாம் இடம்பிடித்து விட்டதால் சூரியன் என்ற புகழ் வெளிச்சத்தைக் குறைத்து விட்டது என நினைத்து மேற்கே மறைந்து விட்டானோ? என்று கூறும்படி, சூரியன் மறைந்தான். தாமரை மலர்கள் கருங்கின. மாலையானதும் பறவைகளின் சத்தங்கள் மறைந்தன. சிவன் கோயிலில் பஞ்ச மகாசப்தங்கள் கேட்டன. பக்தர்களின் கூட்டம்

தூபம் போட்டதனாலேயே எழுந்த புகையினால் மேகங்கள் போன்று வானத்தில் இருள் சூழ்ந்து கொண்டது. மோட்சம் என்ற பெண்மணி பகவானுக்கு ஆரத்தி எடுத்த தீபங்கள் என்றாற் போல் நட்சத்திரங்கள் வானத்தில் முளைத்தன.

சந்தியாகாலத்தில் பக்தர்கள் அனைவரும் லிங்கார்ச்சனை செய்து கொண்டிருக்கிறார்கள். பசவண்ணா பக்தியும் அன்பும் கலந்து தாம்பூலம், பூ, வஸ்திரங்கள், ஆபரணங்கள் இவை அனைத்தையும் சிவ பக்தர்களுக்குக் கொடுக்க இவற்றை எடுத்துக் கொண்டு இந்த சங்கமர்கள் அனைவரும் வேசியர் வீட்டிற்குச் சென்று கொண்டிருக்கிறார்கள்.

## முக்த சங்கைய்ய கதை

இவர் ஒரு சிறந்த சிவபக்தர். பசவண்ணரிடம் சென்று, இந்த சங்கமர்கள் அனைவரும் கந்தம், பூ, கற்பூரம், தாம்பூலம் இவை அனைத்தையும் சிவபூசைக்காகக் கொண்டு செல்கிறார்கள். இதுவும் கூட ஒரு லிங்கார்ச்சனை என நினைத்து, பசவண்ணரைப் பார்த்து இவர்களுடன் நானும் செல்கிறேன் என்று கூற, அவரும் 'அன்புடன் போய் வா' என்று நன்றாக அவரை அலங்காரம் செய்து, வேலைக்காரியை அழைத்து, மிகுந்த சிவபக்தி உள்ள ஒரு பெண் இருக்கும் வீட்டிற்கு அனுப்பி வைக்கிறார். இவர் அப்பெண்ணைப்பார்த்து, இது பிரமதலோகப் பெண்ணா? ருத்ர கணிகையா? ஓவியமா? பொன்னால் செய்த சிற்பமா? என்று அதிசயப்பட்டுக் கொண்டு இவர் இருக்கும் போது அப்பெண் இவர்காலில் விழுந்து, பாதங்களைக் கழுவி உள்ளே அழைத்து செல்கிறார். அந்த வீட்டைப் பார்த்து அதிசயப்படுகிறார். வெள்ளைக்கல்லால் செய்த படிகள், மாடி, கஸ்தூரி தெளித்து போடப்பட்டுள்ள முத்துக்கோலத்தைக் கண்டார். இதனைப்பார்த்து திரும்பி, படுக்கையறையைப் பார்த்து அங்குள்ள அலங்காரத்தைப்பார்த்து இது சிவபெருமானின் சிம்மாசனம். சாமி பூசை செய்ய இதுதான் வீடாயிருக்குமோ? என்று நினைத்து அங்கு பூசை செய்ய கம்பளியின் மேல் உட்கார்ந்து, சிவார்ச்சனை செய்யுமுன்பே விபூதியை உடம்பெல்லாம் பூசிக்கொள்கிறார். பார்வதி

எப்பொழுதுமே மஞ்சள் கலர் விபூதியை உடம்பெல்லாம் பூசிக்கொள்ள எனக்குக் கொடுத்துள்ளார்கள். அதனைப் பூசி இருக்கிறேன். பார் என்று உடம்பில் அணிந்துள்ள மஞ்சளைக் காண்பிக்கிறார் அந்த பெண். ருத்திராட்சம் நீ ஏன் அணியவில்லை என்று கேட்க, உப்பு சமுத்திரத்தில் விளைந்த ருத்திராட்சம் அணிந்ததால் உடம்பிற்கு சரியில்லை, உப்பாயிற்று. அதனால், பாற்கடலில் உருவான முத்து மாலையைப் போட்டிருக்கிறேன் என்று முத்து மாலையைக் காட்டுகிறாள். மூக்கில் அணிந்துள்ள மூக்குத்தியைப் பார்த்து, இந்த ருத்ராட்சத்தை நீ ஏன் மூக்கில் அணிந்துள்ளாய்? இதன் சிறப்பு யாது? எனக் கேட்க, அவள், 'எனக்குத் தெரியாது, கடவுளுக்குத்தான் தெரியும் என்றாள். சிவபக்தர்கள் பாதி உடை அணிந்திருக்கின்றார்கள். நீ ஏன் அணியவில்லை என்று கேட்டார். உடனே பிற ஆடவர்கள் பார்ப்பார்கள் என்பதற்காக உடம்பு முழுதும் ஆடை அணிந்திருக்கிறேன் என்று கூறி உடம்பெல்லாம் துணியைக் காட்டுகிறாள். அவர் அப்பெண்ணை சிறந்த சிவபக்தி உடையவளாகக் கருதினார். எனவே, அவளது காலில் சாஷ்டாங்கமாய் விழுந்து நமஸ்கரித்தார். இதற்கு ஆச்சாரியர் யார்? இதற்குரிய நியமங்கள் என்னென்ன? உங்கள் சம்பிரதாயத்தைச் சார்ந்த குருக்கள் எந்த இடத்தில் தபம் செய்து கொண்டிருக்கிறார்கள்? என்று கேட்டார். அதற்கு அந்த பெண் எங்களுடைய குருவானர் பார்வதி. தப கருணையினால் இந்த சம்பிரதாயத்தைப் படைத்தாள். நாங்கள் அந்தம்மையின் சந்ததி, மன்மதனை வென்று, சிவன் பாராட்டும்படி இவள் நடந்துகொண்டாள். உடம்பில் பாதிப் பாகத்தை எடுத்த பெண் கூட்டத்தைச் சார்ந்தவர். சிவனுக்கு அர்ப்பணம் செய்த பிரசாதத்தைத் தவிர வேறு எதனையும் சாப்பிடுவதில்லை. பக்தர்கள் கொடுத்த கந்த மூலங்கள், பலகாரங்கள், காய், இலை இவற்றை சாமிக்கு அர்ப்பணம், செய்து அவற்றை எடுத்துக்கொண்டோம். எங்களுடைய உடல், இதயம், செல்வம் எல்லாவற்றையும் விட்டுவிட்டு, எப்பொழுதுமே சங்கமர்களின் கோஷ்டியில் விடாது இருப்போம். மூன்று வேளையும் லிங்கார்ச்சனை தவிர வேறு வேலை செய்ய மாட்டோம். இரவும் பகலும் இது தவிர எங்களுக்கு வேறு வேலை இல்லை. மனதில், பேச்சில், செய்கையில் சங்கமர்களை மட்டுமே அடைக்கலம் என்று நினைப்போம். இதுதான்

எங்களின் விரதம். இதுதான் எங்களது குரு சம்பிரதாயம். இந்த சம்பிரதாயத்தைச் சார்ந்தவர்கள் ஸ்ரீசைலம் போன்ற இடத்திலும் பார்வதிக்குச் சமானமானவர்கள் ஸ்ரீசைலம் தாட்சாராமம் போன்ற இடத்தில் இருக்கிறார்கள் என்று கூற. அந்த முக்த சங்கய்யா பூசை செய்வதற்கு வேண்டிய பொருட்களைக் கொடு என. அவர் கொடுக்க, அவர் மணிகள் ஒலித்துக்கொண்டிருக்கும் போது தூபமெல்லாம் இட்டு, தெய்வத்திற்கு ஆரத்தி எடுக்கிறார்.

## சந்திரோதய வருணனை

சிவனின் தலைமேல் இருந்தும் கூட நமது களங்கம் தீரவில்லையே. ஆதலால் பக்தர்களின் பாதங்களைத் தொடுவதன் மூலமாவது தூய்மை பெற முடியும் என்று எண்ணி. சந்திரன் கிழக்கு நோக்கி உதித்தான். பசவண்ணரின் புகழ் தூய்மையாக இருக்கும். அந்த புகழின் தூய்மை பரவியதா? சிவனின் விபூதியானது வெளிச்சம் பரவியதா? ருத்ரனின் பெரிய சிரிப்பு வெண்மை பரவியதா? வெள்ளிமலையின் வெண்மை பரவியதா? என்றெண்ணும்படி ஆகாயம் முழுவதும் சந்திரனின் ஒளி பரவியது. அந்த நேரத்தில் வேசி முக்த சங்கையாவை அன்போடு பார்த்து, அருகிலுள்ள தோழியர்களை அழைத்து, நாதஸ்வரம், நடனம், தாளம், முதலயவற்றை ஏற்பாடு செய்தார். அக்கமாதேவி மேளம். பசவபிரமதவ்வா இசைக்கருவி. பாலருத்ரம்மாவாகிய நீயும் சங்களவ்வா ஆகிய இருவரும் சேர்ந்து ஓரிடத்தில் அமருங்கள் என்றாள். மாகேஸ்வரி, லிங்கம்மாள் போன்றோர் நடன உடை அணிந்து விரைவில் நடனமாடுங்கள் என்றாள். திரை கொண்டு வரச்செய்து அங்கு ஒரு நடன நிகழ்ச்சி நடப்பதுபோல செய்தாள். சிவார்ச்சனை செய்தாள். இதுபோல காலை வரை முக்த சங்கையாவுக்கு பெண்கள் அனைவரும் உபசாரம் செய்து. பக்தர்களின் கால்களைக்கழுவி அந்நீரை அருந்தியதால் புனிதமான உடம்பு உண்டாயிற்று. சிவபக்தர்களுக்குச் சேவை செய்யும் பாக்கியம் கிடைத்தால் எப்பொழுதும் சுற்றிக்கொண்டிருக்கும் சூரியன் சோர்வு நீங்கும் என்றெண்ணும்படி கிழக்கு மலையில் தோன்றினான். அப்பொழுது சங்கமர் பசவரின் வீட்டிற்கு வந்து சுவாமி! நீ என்னுடன் வரவில்லை. ஆனாலும் இப்படிப்பட்ட சுகத்தினை நான் என்றும்

அனுபவித்ததில்லை. சிவனது கிருபை இருந்ததனாலேயே இவ்வாறு எனக்கும் கிடைத்தது. மற்றவர்களுக்கு இதுபோல கிடைக்குமா? என்பது சந்தேகமே. வேறு எந்த மார்க்கத்திலும் இதுபோன்ற சுகத்தை அடைய முடியாது. உன்னுடைய உதவியினால் இது கிடைத்தது. நான் சிறுவயதிலிருந்து ஸ்ரீசைலத்தில் இருந்திருக்கிறேன். அங்குள்ள வாழைத் தோட்டம் மற்றும் வில்வத்தோட்டங்களில் மகா கணங்கள் இருக்கிறார்கள். மஞ்சள் நிற விபூதி வெள்ளை ருத்ராட்சம் அணிந்தவர்கள். உடம்பெல்லாம் வஸ்திரம் அணிந்தவர்கள் இதுபோன்ற சிவபக்தர்களை நான் பார்த்ததில்லை. அந்தப்பெண்ணிற்கு வேலைசெய்து கொண்டு இருக்கும் மற்ற எல்லாப்பெண்களும் அதுபோலவே உடை அணிந்து உள்ளார்கள். அதன் மகிமை சிவனுக்கு மட்டும் தெரியும் என்றிவர் அப்பெண்களின் உடை. ஆபரணங்கள் பற்றி கூற. உடனிருந்த சங்கமர்கள் ஒருவரையொருவர் பார்த்து சிரிக்க ஆரம்பித்தனர். பசவண்ணா மிகுந்த மகிழ்ச்சியடைந்து. சென்ன பசவண்ணனைப்பார்த்து இதுபோன்ற அறியாமை. இதுபோன்ற பெருமை எங்காவது இருக்கிறதா? ஈஸ்வரனைத்தவிர. வேறு எதனையும் தெரியாத சிவபக்தர்கள் என்று புகழ்ந்து பேசினார். சென்ன பசவண்ணா அவரை வணங்கி. புதிய பழைய பக்தர்களில் இதுபோன்று அறியாமையுள்ள பக்தர்கள் எவராவது இருக்கிறார்களா? என்று அவரைக் கேட்கின்றனர். சில அறியாமையுள்ள பக்தர்களைச் சொல்ல வேண்டுமென்று எண்ணி. சென்ன பசவண்ணாவை நோக்கிக்கூற ஆரம்பிக்கிறார் பசவண்ணா.

## ருத்ர பசுபதி கதை

ஐயலையூர் என்ற ஊரில் ருத்ர பசுபதி என்ற பக்தர் இருந்தார். ஆதி புராணத்தில் இருக்கிற பாற்கடலைக் கடையும் கதையை ஒருவர் சொல்லிக்கொண்டிருக்கும்போது. பிரம்மா, விஷ்ணு, மற்ற தேவர்கள். அனைவருமே பயந்து பாற்கடலில் விஷம் வருவதைப் பார்த்து ஓடிப்போயினர். உலகையே அழிக்கக்கூடிய அவ்விஷத்தை சிவன் குடித்தார் என்று கூறினார். உடனே ருத்ர பசுபதி, சிவன் [illegible]ம் குடித்தது உண்மையா? என்று திரும்பிக்கேட்கிறார். இதற்கு [illegible] ஒன்றும் இல்லை. சிவன் எதற்காக விஷம் குடித்தார்

என்பதும் தெரியாது, அதற்குப் பின் என்ன நடந்தது என்பதும் தெரியாது என்கிறார். எல்லாம் கெட்டுவிட்டதே. பைத்தியக்காரத்தனமாக இருக்கிறதே. எந்தப் பைத்தியக்காரனாவது விஷத்தைக் குடித்துப் பிழைப்பானா? இது எப்படி கேட்க முடியும்? நான் என்ன செய்வேன்? உன்னைத் தவிர யாரையும் எனக்குத் தெரியாது, உன்னைத்தவிர கதி யாருமில்லை. பார்வதி தேவியே நீ சரீரத்தில் பாதி இருந்தும் எங்கு சென்றாய்? கௌரி உனக்குத் தெரியாதா? பிரமத கணங்களே நண்பர்களே! அவருக்கு ஏதாவது ஒன்று ஆனால் மீண்டும் அவரை உங்களால் காப்பாற்ற முடியுமா? வீர பத்ர ஐயா! விஷத்தைச் சிவன் குடித்தார். இனி என்னாகுமோ? தெரியாது. முன்னோர்களே! சான்றோர்களே! நமது தெய்வம் ஆகிய ஈஸ்வரன் பிழைத்துக்கொள்வாரல்லவா? உயிருக்கு ஒன்றும் ஆபத்தில்லையே? துன்பத்திலிருந்து சிவனைக்காப்பாற்றுங்கள். தாயில்லாத மக்களை (குழந்தைகளை) மற்றவர்கள் கவனிப்பார்களா? தாயிருந்தால் தன் பிள்ளையை விஷம் குடிக்க எவ்வாறு அனுமதிப்பாள்? சிவன் உயிர் திரும்பி வந்தால் மறுபடியும் அவருக்கு மரணமே கிடையாது. இதுபோல் இனிமேல் எப்பொழுதும் வராது நான் காப்பாற்றுவேன் என்று புலம்புகிறார். மற்ற எதனையும் என்னால் கேட்க முடியவில்லை. நான் உயிரை விட்டு விடுவேன் என்று கூறி. பெரிய குளத்தில் விழப்போகும்போது ருத்ரபசுபதியை சிவன் தடுக்கிறார். ருத்ரகணங்கள். தேவ கணங்கள், தேவர்கள், அசுரர்கள் அனைவரும் சூழ்ந்து நிற்க. சிவன் பார்வதியோடு சேர்ந்து காட்சி அளிக்கிறார். உனக்கு என்ன வரம் வேண்டுமாயினும் கேள் தருகிறேன் என்று கூறினார். இவர் ஆச்சரியப்பட்டு சிவன் காலிலே விழுந்து எனக்கு ஒன்றும் வேண்டாம். நீ விஷம் சாப்பிடுவதால் என்னாகுமோ? எனக்கே தெரியாது. நீ அந்த விஷத்தை வெளியில் உமிழ்ந்து விடு என்றார். உடனே, சிவன் சிரித்துக் கொண்டே கொஞ்சம்தான் விஷம் கழுத்தில் மாட்டிக்கொண்டு இருக்கிறது. அதற்கு நீ கவலைப்படத்தேவையில்லை என்று கூற, அதனை நான் நம்பமாட்டேன் இன்னும் கொஞ்சநேரம் இருந்தால் என்ன நடக்குமோ? தெரியாது. இச்செய்தியைக்கேட்டதால் நான் என் உயிரைபோக்கிக் கொள்கிறேன். நான் என் உயிரைப்போக்கிக்கொள்ள வேண்டாம் என்று நீ நினைத்தால்

உடனே விஷத்தை உமிழ்ந்து விடு என்று உறுதியாகப் பேசுகிறார். விஷத்தை உடனே உமிழாவிட்டால் இப்பக்தன் உயிரைவிட்டு விடுவானோ என நினைத்து, பார்வதிதேவி அஞ்சினாள். ஒரு வேளை உமிழ்ந்தால் நாமெல்லாம் அழிந்து விடுவோமோ என்றெண்ணி பிரம்மா, விஷ்ணு முதலானோர் அஞ்சினர். பிரமத கணங்கள் அனைவரும் அவரது பக்திக்கு மகிழ்ந்தனர். தனது காலில் விழுந்த ருத்ரபசுபதியைக் கையில் எடுத்துக் கட்டியணைத்துக்கொண்டு, இந்த பிரமதகணங்களின் மேல் ஆணை. உன் பாதங்களின் மேல் ஆணை. இந்த விஷத்தால் எனக்கு ஒன்றும் ஆகாது. இது உண்மை, நீ நம்பாவிட்டால் என் தொடையின்மீது அமர்ந்து கொண்டு பார்த்துக் கொண்டேயிரு என்று கூறி, தனது தொடையின் மேல் அவரை வைத்துக் கொண்டார். இதுபோல் அறியாமை பக்திக்கு உதாரணம் யாரேனும் உண்டா? கழுத்தில் விஷம் சிறிது அசைந்தால் கூட நான் என்னையே அழித்துக்கொள்வேன் என்று கத்தியைக் கையில் வைத்துக்கொண்டேயிருந்தார். சிவனின் தொடைமீது அப்போது மட்டுமல்ல, இப்பொழுதும் விடாது அமர்ந்திருக்கிறார். பார்வதிதேவி மனசஞ்சலம் அடைகிறாள். விஷத்தை வெளியில் உமிழாவிட்டால் அந்த அப்பாவி உயிரை விட்டுவிடுவானோ என்று சஞ்சலம் அடைகிறாள்.

### நக்க நயினார் கதை

இந்தப்பூவுலகில் புகழோடு விளங்கும் சோழமண்டலத்தில் நீலநக்க நயினார் என்ற சிவபக்தர் மனைவியுடன் அன்போடு சிவபூசை செய்து வாழ்ந்து கொண்டிருந்தார். அந்த அம்மையார் ஒருநாள் சிவனின் தோளில் சருமரோக வியாதி வந்ததுபோல் தோன்றியதனைக் கண்டார். சிவனுக்கு உடம்பெல்லாம் இவ்வாறு ஆயிற்று. சிவனின் தோள் கெட்டு விடுமே என்று எண்ணி எச்சிலைத்துப்பி அதனை சிவனின் தோல் மீது பூசினார். இதனைப்பார்த்து நக்க நயினர் கோபித்து, பாவி! உனக்கு பைத்தியம் பிடித்துவிட்டதா?நம் உயிரைக் காப்பாற்றுபவரை இவ்வாறு செய்யலாமா? உன்னுடைய பக்தி இவ்வாறென்பதை இப்பொழுதுதான் தெரிந்து கொண்டேன். நீ எங்காவது சென்றுவிடு. உன்னை நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன்

என்று அந்த அம்மாவை வீட்டைவிட்டு வெளியில் போகச்செய்துவிட்டார். அன்று இரவு நக்கநயினார் சிவபூசை செய்து கொண்டிருக்கும்போது, அவர் மனைவி எச்சிலைத்துப்பிய இடத்தில் மட்டும் சருமவியாதி தீர்ந்திருந்தது. இவர் ஆச்சரியப்பட்டு தன் மனைவியைப் பின் தொடர்ந்து ஓடிச்சென்று அந்தம்மாவின் காலில் சாஷ்டாங்கமாக விழுந்து, நீ வீட்டை விட்டு வெளியில் செல்லும்படி கூறிய பாவி நான். எனது பாவத்தை மன்னிக்க வேண்டும். நீ எச்சிலைத் துப்பி தடவிய இடத்தைத்தவிர மற்றைய இடங்களில் சருமவியாதி அப்படியே இருந்தது. மீதி உள்ள இடத்திலும் எச்சிலைத்துப்பி கருணையோடு நீ இதனைப் போகச்செய்ய வேண்டும் என்று மறுபடியும் மனைவிக்கு சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தார். அப்பொழுது இவரது மனைவி உடனே வீட்டிற்கு வந்து புண்வந்து உதிர்ந்த இடத்தைப்பார்த்து இது அப்படியே அடங்கிப்போய்விடுமோ என் கணவன் என்னைக் கொன்றாலும் பாவாயில்லை என்று உடல்முழுவதும் துப்பாமல் சென்று விட்டேனே. ஆகையால், தவறு என்னுடையது தான். இந்தக் காட்சியை நான் பார்த்துக் கொண்டு இருக்கக்கூடாது என்று தன் தலையை வெட்டிக்கொள்ளத் துணிந்தாள். இந்த அம்மையின் அறியாமை பக்தியை உலகத்திற்குக் காட்ட வேண்டும் என்று நினைத்து சிவபெருமான் தன் கணங்களோடு அங்கு சென்றார். அவர்கள் ஆனந்தத்தில் திளைத்தனர். உங்களுக்கு எது வேண்டுமோ அதனைக் கேளுங்கள் தருகிறேன் என்றார். இருவரும் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து, இறைவா! நீயே எதிர்வந்து நிற்கும்போது வேறு ஒன்று வேண்டும் என்று கேட்டால், நீ தேவையில்லை என்று அர்த்தம் உருவாகிவிடும். அதனால் உனது திருவடிகள் என்ற மலர்களின் மேல் எனது மனம் முழுதும் லயித்து இருக்கும்படி எங்களுக்குத் தயவு செய்ய வேண்டும் என்று கூற, சிவன் அவர்களுக்குப் பூரண வரம் கொடுத்து அருள் செய்தார்.

### பெஜ்ஜ மகாதேவி கதை

இவர் சிவனின் திருவடிகளை மனதில் வைத்து இருந்தார். நிறைய மக்களுக்கு வேலை கொடுக்கும் எஜமானியாகவும் இருக்கிற சிவனுக்குத் தாய் இல்லாது இருப்பது அவளுக்கு ஆச்சரியமாக

இருந்தது. தாய் இல்லாது எவ்வாறு பிறந்திருப்பார்? இவருக்குத் தாய் இல்லாது எவ்வாறு இருக்க முடியும்? தாய் இல்லாததினால்தான் நான் வாழ்க்கையில் பாதிப்பினை அடைந்தேன். தாயில்லாத சோகம் எல்லோருக்கும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். தாய் இருந்திருந்தால் எதற்காக சன்னியாசியாகிறார்? தாய் இருந்திருந்தால் தலைமுடி எல்லாம் சடையாக மாறி இருக்குமா? தாய் இருந்திருந்தால் தோலாடை அணிய அனுமதித்திருப்பளா? பாம்பை அணிகலனாக அணிய எவ்வாறு அனுமதித்து இருப்பாள்? சாம்பல் அணிய அனுமதித்து இருப்பாளா? இவ்வுலகத்தில் தாய் தன் மகனைப் பிச்சை எடுக்க அனுமதிப்பாளா? தாயில்லாத மகனாய் இருப்பதனால் இவ்வளவு துன்பம் வந்து சேர்ந்தது. தாய் இருந்தால், அடிக்கடி பால், வெண்ணெய் ஆகியவற்றை குழந்தையின் பசி தெரிந்து கொடுப்பாளே. தாய் இல்லாமலேயே இவர் இந்த அளவிற்கு உயர்ந்திருக்கிறார். பண்டிகை, நோன்பு போன்ற சுபகாரியம் நடக்கும்போது மகனுக்கு என்ன வேண்டுமென்று அன்பாகப் பராமரித்துக் காப்பாள். எப்படிப்பட்ட பராக்கிரமர்களும் தைரியசாலியான குழந்தைகளும். தாய் இல்லாது மனம் வருந்துவர். ஊருக்கு என்ன நடந்தால் என்ன! என்று சும்மா இருக்கமுடியுமா. சிவனுக்குத் தாயாகி நானே காப்பாற்றுகிறேன்! பாதுகாக்கிறேன் என்று சொல்லி பெஜ்ஜமகாதேவி எப்பொழுதுமே சிவனைக் குழந்தையாகப் பாவித்து கால்மீது படுக்கவைத்து குளிப்பாட்டுவாள். மூக்கில் நீர் இருந்தால் தன் வாயால் உறிஞ்சி எடுப்பாள். முகத்தைத் துடைப்பாள். சிவனுக்கு மூன்று கண்கள் இருப்பதனால் அதனையும் துடைப்பாள். வயிற்றை நன்றாகத் துடைப்பாள். சீக்கிரமாக வளரவேண்டும் என்பதற்காக குழந்தைக்கு நோவு எடுக்காது இழுத்து விடுவாள். தண்ணீர் ஊற்றும்போது கண்களில் தண்ணீர் விழாது காப்பாள். மஞ்சள் பூசுவாள், கண்களையும் காதுகளையும் ஊதுவாள். தலையில் வழியும் நீரைத் துணியில் துடைத்து எடுப்பாள். கட்டை விரலில் மண்ணை எடுத்து ஊதி அப்பிள்ளைக்குப் பொட்டு வைப்பாள். விபூதியை எடுத்து மகனுக்கு உடம்பு முழுவதும் பூசிவிடுவாள். எப்பொழுதும் குழந்தையை எடுத்தால் குழந்தை வளரமாட்டான் என்றெண்ணி மடியில் வைத்துக் கொண்டிருப்பாள். குழந்தையை முத்தம் கொடுக்க அழைப்பாள்.

முத்தம் கொடுப்பாள். தன் வயிற்றின் மேலே படுக்க வைத்துக் கொள்வாள். குழந்தைக்காகப் பாடுவாள். இவ்வாறு மகனான சிவனைப் பார்த்த பெஜ்ஜமகாதேவி அம்மையின் அறியாமை பக்திக்கு இவன் மகிழ்ந்து. மெச்சி. அம்மை செய்த உபசாரங்கள் அனைத்தையும் சிவன் ஏற்றுக்கொண்டார். பக்தனை எந்த ரூபத்தில் நினைக்கின்றாரோ? அந்த ரூபத்தில் இருப்பது அதிசயமா? என்று பக்தர்கள் புகழ்ந்து கொண்டிருக்கையில் ஒரு நாள் சிவன் குழந்தைக்கு நோய் வந்தால் பாலைக்குடிக்காது இருப்பது போன்று இருந்தார். அப்போது அந்த அம்மையார் பயந்து. உனக்கு ஏன் இந்த நிலைமை? இதனைத் தாங்கிக் கொள்ள என்னால் முடியுமா? இல்லாது இருந்து எனக்கு நீ ஒரு மகனாகக் கிடைத்தாய். பூமிமேல் என் கால்கள் நிற்கவே இல்லை. கால்கள் நடுங்குகின்றன. தொண்டையில் நோவாய் இருக்கிறதா? எனக்கு மருந்து எதுவும் தெரியாதே? என்று தனக்குத் தானே பேசிக்கொள்வாள். குழந்தையை அணைத்துக் கொள்வாள். கண்ணைத் திறந்து பார்ப்பாள். பயந்து நிற்பாள். பார்த்துக் கொண்டே இருப்பாள். மிகுந்த வேதனைப்படுவாள். பேசாது இருக்கும் குழந்தையைப் பார்த்து. நெருப்புக்கு எங்காவது கரையான் பிடிக்குமா? பேச்சிலே துன்பங்கள் நீங்குமா? இத்துன்பங்கள் போதும். இனிமேல் என் உயிரை நான் போக்கி கொள்கிறேன். இதனைப்பார்த்துக்கொண்டு என்னால் இருக்க முடியாது என்று தன் உயிரைப்போக்கிக் கொள்ள நினைத்து தலையைத் தரையில் மோத. தன் தாய்க்கு சிவன் தரிசனம் கொடுத்து, உனக்கு என்ன வேண்டும் கேள் என்றார். "பெஜ்ஜ மகாதேவியும் என் மகனே! எனக்குக் குறை என்ன இருக்கிறது? கோரிக்கை இல்லை. நீ எப்பொழுதும் எந்தக் குறையும் இல்லாது இருத்தல் வேண்டும். பெற்ற தாயின் பாசத்தைவிட வளர்த்த குழந்தையின் மீது வளர்த்த தாய்க்குப் பாசம் அதிகம். உன்னைக் கண்ணாரபார்த்துக் கொண்டே இங்கிருப்பதுதான் எனது விருப்பம்" என்று கூறியவுடன், இறைவன் சிரித்துத் தாயைக் கட்டிக்கொண்டு. "இந்த மூவுலகத்திற்கும் நீ பாட்டி எனக்கு தாய். உன்போன்ற தாய் இருக்கும்போது எனக்கு வியாதி எப்படி வரும்?" என்று கூறி தீர்க்காயுளை அந்தத்தாய்க்குக் கொடுத்தார். தாயாகச் சிவனே பாவித்ததனால் 'அம்மவ்வா' என்ற பெயர் பெற்றார்.

## கொடாகஞ்சி கதை

சங்கதேவன் என்ற சிவபக்தர் தன்மனைவியோடு வெளியூர் சென்றார். அப்போது தனது கடைசிப்பெண்ணை அழைத்து, 'நீ எங்கும் வெளியில் செல்லாதே. தினமும் ஒருபடி பால் எடுத்துச் சிவனுக்குக் கொடுத்து குடிக்கச் செய்' என்றார். உனக்கு பொம்மை வாங்கி வருவோம் என்றார். தினமும் அக்குழந்தை பாலை எடுத்துப் செல்லும் போது முந்தானையால் மூடிக்கொண்டு, சென்று இறைவன் முன்பாக வைத்து நெடுஞ்சாண்டையாக விழுந்து "சாமி! சாப்பிடு!" என்றாள். பின் மறைந்திருந்து பார்த்தாள் பால் அப்படியே இருந்ததைக் கண்டு பயந்தாள் "ஏன் சாப்பிடமாட்டேன் என்கிறாய்?" காய்ச்சிய முறை தவறா? பால் கெட்டு விட்டதா? நேரம் தவறிவிட்டதா? சிறு குழந்தையாகிய நான் கொணர்ந்ததால் சாப்பிடவில்லையா? தண்ணீர் கலந்துள்ளதென நினைத்தாயா? மங்கல வாத்தியங்கள் முழங்க கொணரவில்லையென நினைத்தாயா? நீ சாப்பிடுகிற பால்மேல் நான் ஆசைகொண்டேன் என்று நினைத்தாயோ? படி அளவு சரியாக இல்லை என்று நினைத்தாயோ? பரிமாறும் முறை தெரியாது வைத்து விட்டேன் என்று சாப்பிடவில்லையா? பாலாடை இல்லையென்று சாப்பிடவில்லையா? நான் கொண்டு வரும்போது யாரேனும் பார்த்துவிட்டார்கள் என நினைத்தாயா? எதற்காக வேண்டாம் என்கிறாய்? வீணாக ஏன் அடம்பிடிக்கிறாய்? வீட்டில் உணவு இருக்கிறது. குறுக்கு வழியில் ஓடிச்சென்று எடுத்துவந்து தருகிறேன். உனக்கு விருப்பம் என்றால் சொல் ஒரு மடக்காவது குடி. பானை நிறைய கல்கண்டு இருக்கிறது. வேண்டுமென்றால் உடனே எடுத்து வருகிறேன். சிவசோதரி மடத்தில் பாயசம் இருக்கிறது கொடுக்கிறேன். பாலை முதலில் குடித்துவிடு. பௌர்ணமி பண்டிகை அன்று பார்க்கச் செல்லலாம். இந்தப்பாலில் அவல் இட்டு சாப்பிட ஆசைப்பட்டால் சொல். கொண்டு வருகிறேன். சின்னக்குழந்தை இங்கிருக்கும் போது. எப்படி சாப்பிடுவது என்று நீ நினைத்தாயானால் இருவரும் சேர்ந்தே சாப்பிடலாம். என் பெற்றோர் ஊரிலிருந்து எனக்காகத் திண்பண்டம். பொம்மைகள் வாங்கி வருவார்கள். அதனையும் உனக்குக் கொடுக்கிறேன். பாலைக் குடி, ஏன்

பேசமாட்டேன் என்கிறாய்? எதற்காக என்னைத் துன்பப்படுத்துகிறாய்? என்று கூறி பயம் காட்டுகிறாள். கோபித்துக் கொள்கிறாள். குதிக்கிறாள். சத்தமிடுகிறாள். ஐய்யோ என்று அழுகிறாள். கையை முறுக்கிக் கொள்கிறாள். அழும்போது தரையில் விழுந்து கால்களைத் தரையில் அடித்துக்கொள்கிறாள். சாப்பிடு என்று குழந்தையைக் கொஞ்சுவது போன்று கொஞ்சுகிறாள். சிறிதுநேரம் கழித்து வாயார அழுதாள். அருகிலேயே சத்தமிட்டு அழைத்தாள் தொப்பென்று கீழே விழுந்தாள். கிண்ணத்தைத் தள்ளுவாள். பின் பயந்து இறைவன் முன் வைப்பாள். நிறைய முறை பாதத்தில் விழுந்து வணங்குவாள். நீ குடிக்காதது தெரிந்தால் என் பெற்றோர் என்னைக் கொன்று விடுவார்கள். அதில் ஒரு சந்தேகமும் இல்லை. அங்கு சென்று எதற்காக உயிரை விட வேண்டும்? இங்கே விட்டுவிடுகிறேன்" என்று கூறி, தனது தலையைச் சிவலிங்கத்தின் மீது மோதிக் கொள்ளச் செல்கையில் சிவன் கருணைச் சிரிப்புடன் குழந்தையை அரவணைத்துக் கொண்டு கிண்ணத்தில் இருக்கும் பாலைக்குடித்தார். என்னைச் சின்னக்குழந்தை என்று நீ துன்பப்படுத்தினாய்? என் அண்ணனிடம் கூறி உன்னை என்ன செய்கிறேன் பார். அப்பொழுது தெரியும். சும்மா ஏன் பேசவானேன்" என்று கூறி பாத்திரத்தைக் கேட்டு விட்டிற்குச் சென்றாள். இதுபோல் தினமும் பாலைக் கொண்டு சென்று கொடுக்க சிவன் குடிக்கிறார். ஒரு நாள் பால் கொடுத்துத் திரும்புகையில் ஊருக்குச் சென்றவர்கள் எதிர்ப்படுகின்றனர். அவளைப்பார்த்துக் கிண்ணியை எங்கிருந்து கொண்டு வருகிறாய்? எனக் கேட்க, "நீங்கள் கூறியபடியே தினமும் ஒருபடி பால் கொண்டு சென்று, சிவனுக்குக் கொடுத்து சிவன் குடித்தபிறகு கொண்டு வருகிறேன்" என்று கூறினாள். "எப்பொழுது சிவன் பாலைக்குடித்து இருக்கிறார்? நீ குடித்தாயா? இல்லை உடன் விளையாடும் குழந்தைகளுக்குக் கொடுத்தாயா? எங்கேனும் கொட்டி விட்டாயா? மகா பக்தர்கள் அனைவரும் சேர்ந்து கூடி சுவாமி சாப்பிடு என்று மிகுந்த பக்தியோடு பிரார்த்தனை செய்தாலும் சாப்பிடுவது இவ்வுலகத்தில் கடினம். அவ்வாறு இருக்கும்போது உன்னால் எப்படி முடியும்? உன்னை எவ்வாறு நம்புவது? சரி பார்க்கலாம் என்று கூறி அக்குழந்தை பாலை எடுத்துக் கொண்டு தந்தையுடன் செல்கிறாள்.

கோயிலுக்குச் சென்று பால் பாத்திரத்தைச் சிவன் முன்பு வைக்கிறாள். சிவன் அக்குழந்தையின் அறியாமை பக்தி ஆகியவற்றை உலகத்திற்குக் காட்டுவதற்காக அதனை எடுக்கவில்லை. குழந்தையின் தந்தை சிவதேவன் மிகவும் கோபித்துக் கொண்டு, "அடே இன்று மட்டும் சிவன் பாலை ஏன் வேண்டாம் என்கிறார். ஏதேதோ கூறினாய் அதுபோல் எதுவும் நடக்கவில்லையே, சிவனுக்கென வைத்த பாலைக்குடித்த துரோகி நீ என்று" அக்குழந்தையைப் பிடிக்க முனைகையில், குழந்தை பயந்து, அழுதுகொண்டே ஆலிங்கா! ஆலிங்கா! என்று இறைவனிடம் சென்றது. இறைவன் கைநீட்ட குழந்தை இறைவனின் மார்போடு சென்று ஐக்கியமானது. அவளது தந்தை "போய் விட்டாளே போய் விட்டாளே" என்று கூறி அவளது முடியைப் பிடித்துக் கொண்டார். லிங்கத்திற்குள் அக்குழந்தை சென்று முடி மட்டும் வெளியே மாட்டிக் கொண்டது. ஆறுமாதத்திற்கு ஒரு முறை அம்முடியை வெட்டுவார்கள். அது வளர்ந்து கொண்டே இருக்கும் அப்பெண்ணின் அறியாமை நிறைந்த பக்திக்கு இது எடுத்துக்காட்டாகும் என்று அனைவரும் பேசும் அளவிற்கு கொடகூஜ்ஜி என்ற பக்தரின் மகிமை உண்டாயிற்று.

**கீபத களியாறு கதை**

இவர் ஒருநாள் வெளியூருக்குச் செல்லும்போது சிதைந்த நிலையிலிருந்த சிவன் கோவிலைக் கண்டார். 'ஐயோ இப்பெரிய காட்டில் இவர் தனியே இருக்கிறார். தனக்கு வேண்டாதவர்களுக்குக் கூட பெரிய வஸ்திரங்களைக்கட்டி வைக்கின்றவர். முனிவர்கள் மோட்சம் அடையும்படி செய்தவர். தேவேந்திரன் முதலான தேவர்கள் கட்டுப்பாட்டுடன் இருக்கச் செய்தவர். மன்மதனை எரித்தவர். கருணை நிறைந்தவர் என்று நினைக்க உலகமெல்லாம் அழிக்கக்கூடிய அழித்தல் தொழிலைச் செய்கிறார். கோயில் மண்டபம் கீழே விழுந்து விட்டது. கதவுகளும் இற்றுவிட்டன. சிவனுடம்பில் பாதியை எடுத்துக்கொண்ட பார்வதி எங்கிருக்கிறாளோ? தெரியவில்லை. அடையாளமே இல்லை. சிவனுள்ளே மறைந்து இருக்கிறாளோ? இங்கு இருப்பதே மிகவும் பிரமாதம். சிவன் பெரிய வீரனாய் இருந்தாலும் இங்கு தனியாய் இருப்பது நல்லதல்ல. என்று நினைத்து,

தனது செல்வம் முதலானவைகளை இங்கிருந்தே வரவழைத்தார். அதன்மூலம் கோயில் மண்டபத்தைப் புதுப்பித்து. அகழி உண்டாக்கி. கோட்டை, கதவு வைத்தது போக. வழி வைத்து. விதானங்கள் எல்லாம் கட்டி. கோட்டையை நன்றாகப் புதுப்பித்தார். வில்வ. அசோக மரங்களைக் கோயிலைச்சுற்றி உண்டாக்கினார். பிரம்மனும். விஷ்ணுவும் இதுபோன்றதனைக் கட்டுவது அரிது என அங்கிருக்கும் மக்கள் பேசிக்கொண்டனர். சில நாட்களில் இது போன்ற புகழைப்பெற்றார். பணமெல்லாம் இதற்காகவே செலவாயிற்று. வேலைக்காரிக்குச் சம்பளம் கொடுக்கக்கூட பணம் இல்லாது போயிற்று. தீப்பந்தத்திற்கு எண்ணெய் வாங்கப் பணம் இல்லாது போயிற்று. அவையும் இல்லாது போகவே தன் தலைமுடியைத் தீப்பந்தமாக்கிச் சுற்றத் தலையும் எரியத் துவங்கியது. அப்போது தேவேந்திரன், விஷ்ணு முதலான தேவர்களுடன் சிவன் வந்து. என்ன வேண்டும் கேள் என்றார். அடியவர் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து. நான் கூறக்கேட்பாயாக! எனக்கு வரம் வேண்டாம். என்ன கடவுளே? என்று கூறுமாறு ஏன் இந்தக்காட்டில் அமர்ந்திருக்கிறாய்? வெள்ளிமலை போன்ற இடங்கள் இருக்கும்போது நாம் இங்கிருக்கத் தேவையில்லை. உடனே புறப்படுவோம் என்று கூறி முதலில் புஷ்பகவிமானத்தில் இறைவனை ஏற்றி. தானும் ஏறி அங்கிருக்கும் கோயில் முதலானவற்றையும் ஏற்றிக்கொண்டு சென்றார். உடம்போடு கைலாயம் சென்ற பக்தர்கள் இருக்கிறார்கள். ஆனால். இவ்வாறு கோயில் மண்டபம் முதலானவற்றையும் ஏற்றிக்கொண்டு கைலாயத்துக்கு உடம்போடு சென்ற பக்தர்கள் உண்டா? என அனைவரும் பாராட்டும் வண்ணம் வீரபக்த சிகாமணி தீபகளியார் என்று புகழ்பெற்றார்.

## நாட்டிய நமித்தண்டி கதை

புகழ்பெற்ற காஞ்சிமா நகரில் நாட்டிய நமித்தண்டி என்ற சிவபக்தர் இருந்தார். அவர் ஒருநாள் காஞ்சியில் இருக்கும் ஸ்ரீஏகாம்பரநாதர் கோயிலுக்குத் தரிசனத்திற்காகச் சென்றிருந்தார். அவரே 1) கூத்தாடி நாயனர் 2) சதானந்த சொரூபி 3) தாண்டவ மூர்த்தி 4) அதி அற்புதசாகர் 5) கால கண்டர் 6) சூலம் ஏந்தியவர்

ஆகிய பெயர்களையுடைய சிவனைப் பார்த்த பின் பூசாரியிடம் 'இறைவனுக்கு இடுப்பு ஒருபக்கம் கோணலாகவும், கை வீங்கியும் காணப்படுகிறது. வாதநோய் போலுள்ளது. சிவனின் தலையும் நேராக இல்லாது ஒரு பக்கமாகச் சாய்ந்து காணப்பட்டது. இறைவனின் சிவப்பான சடையும் முடிவிழ்ந்து காணப்பட்டது ஏன்' என்றார். உடனே, பூசாரி சிரித்துக் கொண்டே. இந்தச் சிவனுக்கு இந்த நோய் வருவதற்குக் காரணம் வாத தோஷம். இதனைப் போக்கவில்லை யென்றால். அதிகமாகவிடும். இதற்கு மருந்தும் எனக்குத் தெரியும். நீ செய்வோன் எனக் கேள்மாகக் கூற அப்படியே ஆகட்டும் என்று தனது செல்வம் முழுவதையும் பூசாரி முன்பு கொண்டு வந்து வைத்தார். பின்பு இதனை எடுத்துக்கொண்டு சிவனுக்கு நோய் தீர்க்கும் வழிமுறையைக் கூறினால். நானும் என் மனைப் பிள்ளைகளும் உனக்கு அடிமைகளாவோம் என பூசாரி விளக்கெண்ணெய்யை எடுத்துச் சூடு செய்து அவர் கையிலே கொடுத்து. அதனை உபயோகிக்கும் முறையையும் அவருக்குச் சொல்லிக் கொடுத்தார். இவர் அத்தைலத்தினைக் கொண்டு வந்து உடம்புமுழுக்கப்பூசி, வாவலி மாத்திரை தளிர்கள். ஆமணக்குத் தளிர்கள் போன்றவற்றைக் கொணர்ந்து ஒத்தடம் கொடுத்தார். பயனில்லாது போகவே, இவ்வளவு செய்தும் நோய் தீரவில்லை. இதற்கு நான்தான் வைத்தியன், என் உடல்தான் மருந்து என்று உயிரைப் போக்கடிக்க முயற்சித்தபோது சிவன் பிரத்தட்சண்யமானார். பக்தனை அணைத்து உனக்கு என்ன வேண்டும் கேள் என்றார். இவர் இது நோயா? இயல்பாகவே இப்படி இருக்கிறதா அதனது இரகசியத்தை உடனே கூற வேண்டும் என, சிவன். "இது தாண்டவம் தொடங்கும் போது தமருகத்தை ஒரு முறை அடித்தவுடன் இந்த உலகம் முழுவதும் ஒரு லயத்தில் மூழ்கி இருக்கும். கால்களை அசைத்தவுடனே நட்சத்திரங்கள் வரிசை வரிசையாய்க் கீழே விழுந்தன. நாட்டியம் செய்யும்போது பார்வையைப் பார்த்து பிரம்மா. விஷ்ணு போன்ற தேவர்கள் பயந்தனர். பார்வதி தேவி என்னுடனே மறைந்து விட்டார். எல்லாத் திசைகளிலும் இருக்கும் உயிர்கள் வேறுபக்கம் ஓடிச்சென்றன. மூச்சு விடும்போது வடவாக்கினி உலகத்தை அழிக்கக்கூடிய நெருப்பு அணைந்து விட்டது, சமுத்திரங்களில் உள்ள தண்ணீர் ஆவியாகி விட்டது. திசைகள்

திரிந்தன, மலைகள் பொடிப் பொடியாயின. காலை ஊன்றி நடனமாடும்போது பாதத்தின் நுனிப்பகுதியை அழுத்தமாகப் பதித்து நடனம் செய்யும்போது பூமியே கதி கலங்கியது. அவருடைய சடைமுடிகள் அசைவினாலே உலகம் என்ற இந்த பாத்திரம் உடைந்துவிட்டது. ஆதிசேசன் உலகத்தைச் சுமக்க முடியாது பெருமூச்சு விட்டான். ஆதிசேசனின் பெருமூச்சினாலே எனது நெற்றிக்கண்ணில் உள்ள நெருப்பு எரிய ஆரம்பித்தது. கண்களின் நெருப்பினாலே பிறைச்சந்திரனும் தேய ஆரம்பித்தான். தலையில் இருந்த அமிர்தமும் கரைந்து ஓட ஆரம்பித்தது. அமிர்தப் பிரவாகத்தினாலே உலகம் மூழ்கி விட்டது. தேவர்கள் சரணம் கேட்டுக்கொண்டே சத்தம் செய்து கொண்டு இருக்கின்றனர். வாத்தியங்கள் முழங்க, பிரமத கணங்கள் பார்த்துக்கொண்டு இருக்க, நான் இந்தத்தாண்டவத்தை மேற்கொள்கிறேன். பக்தர்கள் எனது இந்த உருவத்தைப் பார்த்தே அர்ச்சனை செய்கிறார்கள் என்று சிவன் அன்போடு நாட்டிய நமித்தண்டியை விமானத்தில் கைலாயத்திற்குக் கொண்டு சென்றார். மக்கள் அனைவரும் அவாது புகழைப் பாடிக் கொண்டிருந்தனர்.

## உடுமூரி கண்ணப்பர் கதை

ஸ்ரீகாளகஸ்திக்கு அருகில் ஒரு காடு இருந்தது. அங்கு உடுமூரி கண்ணப்பர் என்ற சிவபக்தர் இருந்தார். அவர் ஒருநாள் காட்டிற்கு வேட்டையாடச் சென்றார். அங்கு ஒரு தோப்பில் குறவர்கள் ஒன்றாகச் சேர்ந்து தூங்கிக் கொண்டு இருந்தனர். அங்கு இவரும் சேர்ந்து தூங்கினார். அந்தத் தூக்கத்திலே இவருக்கு சிவன் காட்சி அளித்தார். அப்பொழுது ஒரு வீட்டிற்கு அழைத்துச் சென்று விபூதி கொடுத்து, தீர்த்தத்தால் அபிஷேகம் செய்து, நீ காட்டின் வழியே வேட்டை ஆடச் செல்லும்பொழுது, அங்கு ஒரு லிங்கம் தெரியும். அது தான் உனது பிராணலிங்கம் என்று உபதேசித்தார். உடனே எழுந்து பார்த்தபோது அதற்குமுன் அவருக்குத் தெரியாத ஒரு வழி தெரிந்தது. நமக்கு வந்த கனவு உண்மைதான் என்று நினைத்து, தன்னோடு வந்த வேடர்களை அங்கேயே இருக்குமாறு செய்துவிட்டு, இவர் மட்டும் தனக்கு இறைவனால் காட்டப்பட்ட

வழியில் மேலும் முன்னேறி செல்லச் செல்ல அங்கு மிகப்பெரிய சிவலிங்கம் ஒன்று தெரிந்தது. அங்கு சென்று கண்ணப்பர் பக்தியோடு வணங்கினார். இதுதான் என் உயிர் லிங்கம் என்று நினைத்து இந்த லிங்கத்தை இங்கே வைக்கக்கூடாது. வைத்தால் மழையும் வெயிலும் துன்பம் தரும். ஆகவே, இந்த லிங்கத்தை ஊருக்கு எடுத்துச்சென்று அங்கு ஒரு குடிசையும் கட்டவேண்டும் என்று நினைத்துக் கொள்கிறார். இவருக்கு வேண்டிய பொருள்கள் எல்லாம் கொண்டு வந்து தூக்கிச் செல்ல வேண்டும் என்று நினைத்துக் கொள்கிறார் இச்சந்தோஷத்தில் உடம்பெல்லாம் பூரிக்கிறது. சிவனைப் பார்த்து அறியாமை கொண்டவராக ஐயோ தன்னந்தனியே நீ இங்கிருக்க என்ன காரணம்? எந்த ஊர்ப்பூசாரியோட சண்டை இட்டுக்கொண்டு இங்கு வந்தாய்? என்னிடம் கூறு. உன் கோபத்தை நான் தீர்த்து வைக்கிறேன். பக்தர்கள் ஊமத்தம்பூவில் பூசை செய்வார்கள் என்று ஆசைப்பட்டு இந்தக் காட்டிற்கு வந்தாயா? பக்தர்கள் வந்து போகிற கூட்டத்தைப் பார்த்து பயந்து இங்கு வந்தாயா? சக்களத்தியாகிய உமாதேவியும். கங்காதேவியும் சடைக்கும் உடம்பிற்கும் சண்டையிட்டுக் கொள்ள அதனைத் தீர்க்க முடியாது. என்று எண்ணி இந்தக் காட்டில் வந்து மறைந்து இருக்கிறாயா? செல்லையாவுடன் சேர்ந்தனால் குலம் கெட்டுவிட்டது என்று உலகமக்கள் ஊரைவிட்டுத் தள்ளி வைத்ததனால் இங்கு வந்தாயா? நம்பிக்கு எடுபடி வேலைகள் செய்து சோர்ந்து போனதால் வேலை செய்ய முடியாது இங்கு வந்து மறைந்து கொண்டு இருக்கிறாயா? அல்லது என் மேல் உள்ள பாசத்தினாலே என்னைக் காப்பாற்றுவதற்காக இங்கு வந்தாயா? எங்கிருந்து வந்தாய்? உன் வாழ்க்கை எப்படி இருக்கிறது? இங்கு வந்து எவ்வளவு காலமாயிற்று? உன்னை ஏற்றிக் கொண்டுவந்த காளை. உன்னை இங்கு விட்டுவிட்டு எங்கு சென்றது? சென்ற இடத்தைக் கூறு நான் சென்று அதனை இங்கே கொண்டு வருகிறேன். சரீரத்தில் பாதி இடத்தை எடுத்துக்கொண்ட பார்வதி எங்கு சென்றாள்? நீங்கள் இருவரும் பிரிந்திருந்தால் அனைவரும் நகைப்பர் அல்லவா? நீ கட்டிய கோவணம் எங்கு சென்றது? யாரிடம் கொடுத்தாய்? தனியே எதற்காகக் காட்டிற்கு வந்தாய்? கக்கத்தில் உள்ள கஜானா ஏன் குறைந்து காணப்படுகிறது?

இந்த மலையிலே தனியாய் இருப்பதற்கு உனக்கு பயமாய் இல்லையா? மிருகங்கள், பாம்புகள் இவைகளெல்லாம் அளவுக்கு மீறி இருக்கின்றன. சிரிக்காதே. இங்கிருக்கும் குறத்தியின் பிள்ளைகள் உன்னைப்பார்த்தால், உன்னை அதிகமாகத் துன்பப்படுத்துவார்கள். ஆகையால், நீ என்னுடன் வந்து விடு. எங்கள் ஊருக்குச் சென்று விடுவோம். காட்டிலே நிறைய எருமைப்பால், நெய், தேன், பழம், இலுப்பைப்பூ இருக்கிறது. உன் எண்ணம் போல் சாப்பிட உனக்குப்பிடித்த கறி நிறைய இருக்கிறது. அவற்றை எல்லாம் சாப்பிடாது, உன் வயிற்றைக் காயப்போட்டுக்கொண்டு இங்கிருக்க வேண்டுமா? என்று கூறி சாஷ்டாங்கமாகக் கீழே விழுகிறார். அப்பொழுதும் சிவன் கண்ணப்பருடன் பேசவில்லை. இதனைப்பார்த்து கண்ணப்பர் பாதத்தில் விழுந்து என்னுடன் இவர் பேசவில்லையே! இவ்வளவு காலம் சாப்பிடாமல் இருந்தது காரணமாய் இருக்குமோ? காது செவிடாகுமளவிற்கு ஏன் சாப்பிடாமல் இருக்க வேண்டும்? என்றுகூறி, சில வேர்கள், சில காய்கறிகள், சில மரங்களைப் பார்த்தார். இந்த உலகத்தில் நமக்கு முன் பிறந்த சிமுதவாகனன், சிபி, கீர்த்திமுகன் போன்ற இவர்கள் சிவனுக்கு அர்ப்பணம் செய்யத் தெரியாததனாலேயே தங்களுடைய சரீர பலத்தால் மட்டுமே உலகத்தில் மிகுந்த சாகசர்கள் என்று புகழ் பெற்றார்கள். ஆனாலும் அவர்கள் அடியார்கள் ஆகவில்லை. அப்புகழ் இவர்களுக்கு வரவில்லை என்று நினைத்து, செல்வம், நல்ல அழகு ஆகாரம் இருக்கிற இராட்சச அரசர்கள் கோரதபம் செய்கிறார்கள். சிவன் அந்த இராட்சசர்களுக்கு முன்தோன்றி, விஷ்ணு, பிரம்மா, தேவேந்திரர், இவர்களுக்கு இருக்கிற வலிமையை நல்ல சுவர்க்க மோட்ச போகங்களைக் கேளுங்கள் தருகிறேன் என்று கூறியவுடன் இராட்சசர்கள் அனைவருக்கும் சிவனிடம் சலந்தரன் ஆசைப்பட்ட விஷ்ணுபதவி கிடைக்காத ஒன்றும் இல்லை. மிகச்சாதாரணமே எங்கள் சிவனாலே அழிக்கப்பட பிரம்மனின் பதவி எங்களுக்குத் தேவையா? எங்கள் தாரகாசுரனாலே தூள்தூளாக்கப்பட்ட இவருடைய இந்திரபதவி பற்றி பேசவேண்டுமா? வியாக்ர அந்தகர் போன்ற இராட்சசர்கள் சிவனுக்கு விரோதியாக இருந்து, உன்னாலே மோட்சபதவி அடைந்தார்கள் என்பது ஒன்றும் அதிசயமல்ல. இதுவெல்லாம் எதற்கு? தேவா! மகாதேவா! உனது

எல்லா தயவும் எங்களுக்குத் தெரியும் அது எல்லாம் எங்களுக்கு வேண்டாம். இந்த அழகான எங்கள் சரீரத்தை. உங்களுக்கு உணவாக இருக்குமாறு எங்களுக்கு அனுக்கிரகம் செய் என்று அவை வரம் கேட்டவுடனே சிவன். நீங்கள் காளஉறஸ்தி மலைப்பகுதியில் மிருகங்களாகப் பிறக்க வேண்டும். உங்களைக் கொன்று, அதனை கறியாகச் சமைத்து ஒரு பக்தர் எனக்கு உணவாகச் சமர்ப்பிப்பார். அந்த பக்தர் கண்ணப்பர். அவர் உணவு சமைத்து எனக்கு அர்ப்பணம் செய்தால் நான் அதனைச் சாப்பிடுகிறேன் என்று ஆணையிட்டவுடனே, இராட்சசர்கள் மிருகங்களாகப் பிறந்து. அந்த மலைப்பகுதியிலேயே யாருடைய கண்களுக்கும் தெரியாது மறைமுகமாக வாழ்ந்து வந்தனர். அந்த மிருகங்களைத் தனது ஒவ்வொரு பாணத்திலும் ஒவ்வொரு மிருகங்களாகக் கொன்று மிகப்பெரிய துண்டுகளாக வெட்டாமல், சிறிய சிறிய துண்டுகளாக வெட்டி. அவற்றைத் தீயிலிட்டு, திருப்பித்திருப்பி நன்றாக வெந்திருக்கிறதா? என்று பார்த்து அதனை சிவலிங்கத்திற்கும் படைத்தார். தாம் வாய்ந்த கறிகளைத் தொன்னையில் வைத்து எடுத்துக்கொண்டு. வில்வ இலைகளை மூட்டையாக்கித் தலையில் கட்டிக் கொண்டார். அருகில் உள்ள ஆற்றிலிருந்து தண்ணீரை எடுத்து வாய் நிறைய வைத்துக் கொண்டார். இடதுகையில் வில். அம்பை எடுத்துக் கொண்டார். வலது கையில் மாமிசத் தொன்னையை எடுத்துக் கொண்டார். இவைகளை எடுத்துக்கொண்டு வருவதற்கு முன்னரே, இந்தலிங்கம் இருக்கும் இடத்தில் இருந்த தூசுகளைச் செருப்புக் காலால் தள்ளி, வாயில் கொண்டு வந்த தண்ணீரால் அபிஷேகம் செய்து, வில்வ இலைகளை லிங்கத்தின் மேல் போட்டு சமர்ப்பித்தார். தினமும் இதுபோல் செய்துவந்தார். இவ்வாறு கண்ணப்பர் ஆராதனை செய்வதற்கு முன்பே அங்கு அச்சிவலிங்கத்தை வழிபட்டு வந்த முனிவர் வந்து. இவ்வாறு அநாகரிகமான செயலைச் செய்தவன் எங்கிருந்து வந்தானோ தெரியவில்லை. எப்போதிருந்து இந்த அநியாயத்தைச் செய்து கொண்டிருக்கிறானோ தெரியவில்லை. இதுமிகவும் அசிங்கமாக இருக்கிறது என்று கூறிக்கொண்டே அங்கிருந்த மாமிசத்தையெல்லாம் தூரத்தள்ளி, புனிதமாக இருந்த சிவாலயம் கெட்டுவிட்டது என்று கூறி. அவர் அச்சிவாலயம்

முழுவதையும் பஞ்சாமிர்தத்தால் அபிஷேகம் செய்தார். சிவனின் திருவடிகளை அபிஷேகம் செய்த நீரினை எடுத்து. அதனை அந்த இடம்முழுவதும் தெளித்து. மறுபடியும் சிவனைப் பூசை செய்தார். மீண்டும் அந்த இடத்திற்கு அவர் வந்தபோது. மாமிசமும் எச்சிலுமாக இருந்தது. மாமிசமும் நீரும் எச்சில்பட்டு இருக்கிறதே. இது கூட ஒரு பூசையா? பாத அணியினால் சுத்தம் செய்வதுகூட சிவபக்தியா? இதனை எங்காவது நாம் கேள்விப்பட்டிருக்கிறோமா? இதனை எவ்வாறு பொறுத்துக்கொள்ள முடியும்? அவனென்னவோ மிருகங்களை வேட்டையாடுகின்ற ஒரு வேடன், நான் ஒரு முனிவர், இந்த இடத்தில் முன்னொரு காலத்தில் ஒரு யானையுடன் சிலந்தி போராடியது அல்லவா? அது எவ்வாறெனில், சிவன் வெயிலில் துன்பப்படுகிறார் என்று சிலந்தி நினைத்து, தன்னுடைய நூலால் ஒரு வஸ்திரம் போல் கோயிலின், கருப்பக்கிரகம், தகவு, ஒரு மணி, ஒரு சிகரம் துவாரபந்தங்கள் சுற்றிலும் பெரிய பெரிய மரங்கள், சிறிய சிறிய பூச்செடிகள் போன்றவற்றையும் பறவைகளையும் நிறுத்தியது. அது மட்டுமல்லாது பூசை சமயத்தில் 100 ஆயிரம் தலைகள் கொண்ட பூக்களாலே கடவுளுக்கு அர்ச்சனை செய்து கொண்டிருந்தது. மூன்று வேளையும் பக்தியோடு சிவனை விபூதியால் பூசை செய்து. கொண்டிருக்கும்போது, வந்த யானை சிவன் மீது இருக்கிற கூட்டைப் பார்த்து, இவ்வாறு செய்தது யார் என்று கூறி, தன் இரு பெரும் காதுகளை ஆட்டுகின்றதால் ஏற்படும் காற்றிலே அதனைத்தள்ளிவிட்டு. மறுபடியும் தன் தொப்பையில் கொண்டுவந்த தூய்மையான ஆற்று நீரால் அபிஷேகம் செய்து தான் கொண்டு வந்த தாமரை, அல்லி போன்ற மலர்களை தினமும் சாமிக்கு வைத்து மூன்று வேளையும் அது சிவனைச் சேவித்துக் கொண்டிருந்தது. இதனைப்பார்த்து மிகுந்த கோபமடைந்த சிலந்தி, நான் அழகாகக் கட்டியிருக்கும் இக்கோயிலையும், அர்ச்சனையையும் யாரோ கெடுத்து, அழித்துவிட்டனர். இந்த சிவ துரோகத்தை எவ்வாறு நான் பொறுத்துக்கொள்ள முடியும்? என்று ஓரிடத்தில் மறைந்து. யார் இதனைச் செய்யமுடியும்? என்று பார்த்துக் கொண்டிருந்தது. யானை வந்தவுடன், சிறிதும் பயமில்லாது, எப்படியும் அதனைக் கொலை செய்ய வேண்டும் என்று பார்த்துக்கொண்டிருந்தது. தும்பிக்கையின்

உள்ளே சென்று அதனைத் தொந்தரவு செய்ய ஆரம்பித்தது. சர்வசக்தியுடன் இருந்த அந்த மிகப்பெரிய யானையையும் மிகச்சிறிய சிலந்தி தோற்கடித்துவிட்டது. அதனால் அவன் எவ்வளவு பெரிய முரடனாய் இருந்தாலும் அவனை நான் விடமாட்டேன். அவனைக் கொல்லாமல் இங்கிருந்து நான் செல்லமாட்டேன் என்று தனக்குள் கூறிக்கொண்டு, தான் எங்கிருக்கிறோம் என்று யாருக்கும் தெரியாதபடி மறைந்து அங்கே காத்திருந்தார் முனிவர். கண்ணப்பர் தன்மீது கொண்டுள்ள அறியாமை நிறைந்த பக்தியும் எப்பொழுதும் முனிவரிடம் காணப்படும் தன்மீதுள்ள வைராக்யமான பக்தியையும் முனிவருக்கு உணர்த்தவேண்டும் என நினைத்து, முக்கண் கொண்ட சிவன் தன் வலது கண்ணில் தண்ணீர் கொட்டிக் கொண்டிருக்குமாறு செய்த அந்த சமயத்தில் எதார்த்தமாக அங்கு வந்த கண்ணப்பர், சிவனது கண்ணில் கண்ணீரைப்பார்த்து, மிகவும் பயந்து, அதிர்ச்சி அடைந்து அதற்கு முன் முனிவர் செய்திருக்கும் பூசைப்பொருள்களைத் தனது செருப்புக்காலால் தள்ளி, வழக்கம்போல் செய்யும் பூசையினைச் செய்கிறார். பின்பு, கண்களில் தண்ணீர் ஏன் அதிகமாயிற்று என்று பார்த்து, உன் கண்ணில் எதற்காய் தண்ணீர் வருகிறது? உன்மேல் நிந்தனை செய்ததால் கௌளி சாம்பலான போதும் கூட உன் கண்களில் ஈரம் தெரியவில்லை. பிராமணர் உன் ஆடையைக்கிழித்து எறிந்தபோதும் கூட உன் கண்களில் தண்ணீர் வரவில்லை. நோவெடுத்ததன் காரணத்தினால் உன் கண்களில் தண்ணீர் வரவில்லை. மண்வெட்டி வேலை செய்கின்ற போதும் உன் கண்களில் தண்ணீர் வரவில்லை. இன்று ஒரு காரணமும் இல்லாது உன் கடைக்கண்ணில் இருந்து கண்ணீர் தாரை தாரையாக வருவதற்கு என்ன காரணம்? மனைவி, குழந்தைகளை விட்டு காடு, மலை தாண்டி இவ்வாறு வந்துவிட்டாயென்று கவலைப்பட்டு, அழுதுகொண்டு இருக்கிறாயா? தனிமையாய் இருக்கிறேன், இந்த உலகத்தை எவ்வாறு காப்பாற்றப்போகிறேன் என்று தைரியம் இழந்து அழுது கொண்டு இருக்கிறாயா? பசி பொறுக்க முடியாது, நான் இன்னும் சாப்பாடு கொண்டு வரவில்லையே? என்று நினைத்து அழுது கொண்டிருக்கிறாயா? இக்காட்டில் பயங்கர மிருகங்களிடம் தன்னந்தனியாக மாட்டிக்கொண்டுவிட்டோம் என்று அழுதுகொண்

டிருக்கிறாயா? இவ்வாறு கண்ணில் தண்ணீர் வரும்படி அழுவது எதற்காக? எனக்குக் கூறுவாயாக என்று கூறி அவனை அணைத்துக் கொண்டு. என் போல மகன் இருக்கும்போது நீ எதற்காக அழுகிறாய்? என்று கண்களில் இருக்கும் கண்ணீரைத்துடைத்து என் அப்பனே! நீ அழாதே! சுவாமி! நீ அழாதே! எதற்காகத் தேவை இல்லாது அழவேண்டும்? உன்னுடைய அழுகையை நிறுத்திவிடு என்று கண்களில் உள்ள கண்ணீரைத் துடைத்து விடுவான் கண்களைத் திறந்துவிட்டு ஏதேனும் தூசிகள் இருக்கிறதா? என்று பார்த்து கண்ணிமை முடிகளை எடுத்து கண்களை ஊதி கண்ணீரைத் துடைக்க முயற்சித்தார் நாக்கினைக் கண்களில் வைத்தும் தூசிகளை எடுக்க முயற்சித்தார் துணியை வாயால் வைத்து எடுத்து ஒத்தடம் கொடுத்தார் கையைக் கண்ணில் வைத்து மூடியும் கண்ணீர் அதி விரைவாக வந்து கொண்டிருந்தது கண்ணீர் சிறிதும் குறையாத நிலையில் கண்ணப்பர் வாய்விட்டு அழ ஆரம்பிக்கிறார் சிவபெருமானின் கால்களில் விழுந்து வணங்குகிறார் கையைச்சேர்த்து எழுந்து நின்று வணக்கம் சொல்கிறார் திரும்ப உட்கார்கிறார் திரும்ப எழுந்து பார்க்கிறார் லிங்கத்தைச் சுற்றி வருகிறார் ஒரு வேளை ஆனந்தக்கண்ணீராய் இருக்குமோ? அவ்வாறு இருந்தால் உடம்பிலும் முகத்திலும் அவ்வாறான குறி ஒன்றும் தெரியவில்லையே வேர்வை என்று நினைத்தாலும் வேர்வை கண்களில் இவ்வாறு வரக்கூடுமா? இது கண்நோயாகத்தான் இருக்க வேண்டும் கண் வீக்கமா? கண்ணில் புரை ஏற்பட்டுவிட்டதா? கண்களில் ஏதாவது அழுக்கு பட்டுவிட்டதா? கெட்ட சதை வளர்ந்ததா? எப்படி இருந்தாலும் இது கண்களில் வந்த நோயாகத்தான் தெரிகிறது. அதில் சந்தேகமே இல்லை. எனக்கு இதற்கான மருந்து எது என்று தெரியாது என் அப்பனே! என் ஐயா! என் நண்பனே! என் உயிர் நாதனே! சங்கரா! நீ மூன்று கண் உடையவன் என்பதால் மூன்று லோகத்தைச் சேர்ந்தவர்களும் அஞ்சுவர் உனக்கு ஈடு இணையே கிடையாது உன் கண் இதுபோல் குறையுள்ளதேயானால் தேவர்கள் உன்னை ஏற்றுக்கொள்வார்களா? உன் கண் நெருப்பில் எரிந்தவர்கள், உன் கண்ணிற்கு இவ்வாறு ஆயிற்று என்றால் பயப்படுவார்களா? மறுபடியும்

மனதில் பயம் உண்டாகுமா? எவ்வாறு அன்பு இருந்தாலும் அங்கக் குறை இருப்பவனை யாரும் அனுகமாட்டார்கள். இதுபோல் உன்னைப்பார்த்து பக்தர்கள் சிரிக்கமாட்டார்களா? அன்று விஷ்ணுவிற்குக் கண் அளித்த மகிமை பெற்ற கண் இன்று எங்கு சென்றதோ? பசுமாட்டை புலி பாய்ந்து சாப்பிட்ட நிலை ஆயிற்றே? நான் எவ்வாறு பொறுக்க முடியும்? யாருக்குச் சொல்ல முடியும்? எங்கு செல்வது? என்ன செய்வது? ஒன்றுமே செய்யாது இந்தக் கொடுமையைப் பார்த்துக் கொண்டு என்னால் இருக்க முடியாது. என் கண்களுக்குப் பிறந்ததில் இருந்து இதுவரை ஒரு நோயும் வரவில்லை. எனவே, என் கண்ணில் இருந்து உன் கண்ணுக்கு மாற்றுகிறேன். என் கண்கள் தான் உன் கண்களுக்கு சரியான மருந்து என்று கூறியபடியே, தன் அம்பினை எடுத்து, அதன் மூலம் தன் கண்ணை வெளியில் எடுத்து, சிவனின் கண்ணீர் வந்த கண்ணின் மேல் வைத்தார். அந்த கண்ணில் வந்து கொண்டிருந்த நீர் உடனே நின்றது. பின், இடக்கண்ணில் இருந்து நீர் வர ஆரம்பித்தது. உடனே கண்ணப்பர் சிரித்துக்கொண்டே தன்னுடைய கண் சிவனுக்குக் கண்ணாக அமைந்ததைப் பார்த்து சந்தோஷப்பட்டு, இந்த இடது கண்ணிற்கும் என் இடது கண் தான் தக்க மருந்து, இதில் சந்தேகப்படுவதற்கு ஒன்றும் இல்லை என்று சொல்லி, தனது கட்டை விரலை, தனது இடது கண்ணில் விட்டு கண்ணைப் பார்த்து சிவனின் கண்ணில் பொருத்தினார். உடனே சிவன் கண்ணப்பரின் முன் தோன்றி, அவர் இரண்டு கைகளையும் பிடித்துக் கொண்டு, அருகில் நின்று பார்த்தவுடன், கண்ணப்பரின் இடது கண் முன்போல் ஆயிற்று, சிவன், அதற்கு முன் இருந்த அதே கண்ணைக் கொடுத்தாரா? இல்லை, தனது கண்ணைக் கொடுத்தாரா? கண்ணப்பரின் கண்களில் சிவனது கண்களைப் போல ஆனந்தக் கண்ணீர் உண்டாயிற்று, கைலாயத்தில் தேவர்கள், கீழே இராட்சசர்கள் நின்று வணங்கி சரணம் கேட்டனர். தனது கைகளில் தலையை ஒட்டி வணங்கி முனிவர்கள் துதி செய்து கொண்டிருந்தனர். துந்துபிகள் முழங்கின. பூலோகத்தில் பூமழை பொழிய (பிரமதகணங்கள்), தேவ கணங்கள் மகிழ்ச்சியில் ஆடிப்பாட, கண்ணப்பனுடைய அறியாமை பக்திக்கு அவருடைய குணங்களுக்கு, பக்தியோகத்திற்கு. சிவன் காட்சி தருவதனைப்

பார்த்து, அதற்கு முன் அவர்மேல் கோபம் கொண்ட முனிவர் வந்து பயத்துடனும் ஆனந்தத்துடனும் தரையில் விழுந்து வணங்கி. கண்ணப்பா! உன்னுடைய பக்தி தெரியாது. உனக்குக் கெடுதல் செய்ய நினைத்தேன். அந்தத்தவற்றை மன்னித்துவிடு. சொல்வதற்கு என்ன இருக்கிறது? நீதான் சிவன் இதுபோல் அறியாமை உடைய பக்தி, இதுபோல் வீரம் எங்கேயாவது இருக்கிறதா? வேத சாஸ்திரங்களில் இதுபோல் கேள்விப்பட்டு இருக்கிறோமா? மூவுலகிலும் எங்காவது பார்த்து இருக்கிறோமா? என்று பக்தியோடு அந்த முனிவர் அவரைப் புகழ்ந்து பேச, அருகில் இருக்கும் பார்வதி தேவி மிகுந்த ஆச்சரியப்படுகிறாள். கண்ணப்பரும், சிவனும் அன்போடு கண்களால் பார்த்துக்கொள்கிறார்கள். இருவரும் ஒருவரை ஒருவர் இவ்வாறு பார்த்துக்கொண்டு இருப்பது ஒன்றினுக்கொன்று இணையான பார்வையாக இருந்தது. கண்ணப்பதேவரின் கண்களில் நண்பனா? சிவனுடைய கண்களில் உடன்பிறப்பா? கண்ணப்பரின் கண்களின் பிரதிபிம்பமா? சிவனது கண்களின் பழங்களா? என்றபடி கண்ணப்பனுடைய கண்கள் சிவனுடைய கண்களாகவும் சிவனுடைய கண்கள் கண்ணப்பனுடைய கண்களாகவும் விளங்கி பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. இவை நான்கும் கண்ணப்பரது கண்களா? அல்லது சிவனுடைய கண்களா? சிவனுடைய மூன்றாவது கண்களுக்குக் கீழ் ஒவ்வொன்றும் இரண்டிரண்டாகப் பிரகாசித்துக் கொண்டிருக்க, தன் கண்களைத்தாமே பார்த்துக் கொண்ட விதமாகத் தோன்றியது. இந்தக் கண்ணில் பார்த்தால் திரிபுரங்கள் எரியுமா? இலக்குமியின் மகன் மன்மதன் உடல் திரும்பி வந்தால் இந்த கண்ணில் பார்த்தால் அந்த உடல் எரியுமா? இந்த உலகங்கள் எல்லாம் முடிகின்ற அந்தக் காலத்தில் இந்தக் கண்களைப் பார்த்தால் எரியுமா? கண்ணப்பனுடைய கண்கள் சிவனுக்கு இதற்கு முன்பே இருந்திருந்தால் என்று கூறியிருப்பார்களா? அந்த சமயத்திலேயே கண்ணப்பருடைய கண் இருந்திருந்தால் சிரியாளனிடம் விருந்து சாப்பிடக் கேட்டிருப்பாரா? அப்பொழுதே கண்ணப்பருடைய கண் இருந்திருந்தால் சின்னக்குழந்தையைக் கறி சமைக்கப் பொறுத்திருப்பாரா! இந்த அழகான கண் சிவனுக்கு இருந்திருந்தால் நிம்மவ்வா குழந்தை இறக்கப் பார்த்திருப்பாரா? இதுபோல அழகான

இந்தக்கண் இருந்திருந்தால் பூசாரி கண்கள் குருடாகுமாறு எதற்காகப் பார்த்திருப்பார்? இந்தக்கண் முன்பே இருந்திருந்தால், பாலகனைப் பாம்புப் புற்றிற்கு அருகில் செல்லவிட்டிருப்பாரா? இவருடைய கண்கள் இருந்திருந்தால் இது எதற்கு? அதிகமான கருணை உள்ளம் பெற்றவர் என்று புகழ் பெற்றிருப்பாரல்லவா? இந்தக் கண் இதற்கு முன் சிவனுக்கு இருந்திருந்தால் இவ்வுலகத்தில் சிவன் அழகானவன் என்று புகழ் பெற்றிருப்பாரல்லவா? இந்தக் கண் முன்பே இருந்திருந்தால் எப்படிப்பட்ட பெண்களையும் கவர்ந்திருப்பாரல்லவா? கண்ணப்பாது கண்களினாலே சிவன் நல்ல செல்வம் படைத்தவராகப் புகழ்பெற்றார். கண்ணப்பாது பாத அணிகளின் உணர்வினாலே பக்தவத்சலம் என்ற சிறப்புப் பெற்றார். பாத அணி பட்டவுடனே கங்கையும் புண்ணியத்தீர்த்தமாக மாறியது. கண்ணப்பர் செய்த அபிஷேகத்தினாலே சிவன் மிகுந்த பிரசித்தி அடைந்தான். சிவன் நிரந்தரமான தேகமுடையவன். கண்ணப்பர் வாயில் கொண்டு வந்த தண்ணீரில் அபிஷேகத்தினாலே சிவன் உலகத்திற்கு உயர்ந்தவன் ஆனார். இவருடைய பிரசாதம் சாப்பிட்டதனாலே சிரஞ்சீவி ஆனார். இந்தக் கடவுள் கண்ணப்பரின் பிரசாதத்தினைச் சாப்பிட்டதனால் வேத சாஸ்திரங்களின் பாண்டித்தியம் கிடைத்தது. சிவன் கண்ணப்பரின் எச்சிலைச் சாப்பிட்டு எல்லா விதி நிசேடங்களுக்கும் அப்பாற்பட்டவன் ஆனார். லிங்கத்தின் மீது கண்ணப்பரின் எச்சில் பட்டதனாலேயே அவருடைய உடல் சிறப்படைந்தது. உலகமே இத்தகு சிறப்பினைப் பார்த்து அதிசயிக்க, சிவன் கண்ணப்பனைக் கட்டித் தழுவி, நான்கு வர்க்க சாஸ்திரங்களை தர்ம, அர்த்த, காம, மோட்ச விதிகளின்படி வரம்கேள் தருகிறேன் எனக்கூற, கண்ணப்பர் சிரித்துக்கொண்டே கைகளாலே கும்பிட்டு, மோட்சம் என்ற பெயர் எனக்குத் தெரியாது. எனக்கு என்ன வேண்டும் என்பது தெரியாது. எப்படி வரம் கேட்க வேண்டும் என்பதும் தெரியாது. தெரியும். தெரியும். தெரியும். மும்முறையும் உன்னைத்தான் தெரியும். எனக்கென்று தீராத கோரிக்கை ஏதாவது இருக்குமா? என் தேவா! உன்னுடைய கருணை, தயவு என்ற பார்வை என்மீது விழும்படி என் பார்வை உன்பார்வையில் கலந்திருக்க அருள் செய்ய வேண்டும். எனக்கு வேறு வரம் வேண்டாம். பரமாத்மா! என்று கேட்டவுடன்,

சிவன் கண்ணப்பனுக்கு எதிராக நின்றவுடனே. இருவரும் ஆனந்த பார்வையில் இருக்கிறார்கள். இது உண்மை. கண்ணப்பர் வாய் தண்ணீரால் சிவனுக்கு அபிஷேகம் செய்தார். இன்றும் திருக்காளஉறஸ்தி கோயிலில் கண்ணப்பனுக்கு அபிஷேகம் செய்த தண்ணீரைக் கொண்டு சிவனுக்கு அபிஷேகம் செய்கின்றனர். கண்ணப்பனுக்குப் பிரசாதத்தைக் கொடுத்த பிறகுதான் சிவன் சாபபிடுவார். கண்ணைக் கொடுத்ததனால் எல்லா உலகிற்கும் கண்ணப்பர் என்ற பெயர் பெற்றார். முக்த பக்தி உடையவர்களுக்குக் கடவுள் கிருபை கொடுப்பது உலகம் அறிந்ததே என்று கூறி. பசவய்யா, முக்த பக்தர்களின் கதைகளைச் சென்ன பசவய்யாவிற்குச் சொன்னார்.

## கலியம்ப நாயனார் கதை

பழமை வாய்ந்த பக்தர்களிலே இவரும் ஒருவர். இந்த உலகத்திலே உங்களைச் சிரிக்க வைக்கவேண்டும் என்பதனை வரமாக வைத்திருந்து சிவபெருமானுடைய அருள் பெற்றார். அந்த சங்கமக் கூட்டத்தில் கூடியிருக்கும்போது. இவர் பக்தர்களைச் சிரிக்க வைத்து ஆனந்த சாகரத்தில் மிதக்க வைத்தார்.

## சகலேஸ்வரு மாதிராசய்யா கதை

இவர் நல்ல குணங்களை உடையவர், பெரியவர்களுக்குப் பெரியவர், சகல வித்தைகளிலும். வீணை வாசிப்பதிலும், வல்லவர். வேதங்களைக் கற்றவர், எல்லா நியமங்களையும் அனுஷ்டானங்களையும் செய்து கொண்டு இருப்பவர். கருணை உடையவர். நல்லவர்களிலே உயர்ந்தவர் என்று இந்த உலகத்திலேயே கூறப்படுபவர். அவருடைய மகிமை இவ்வுலகத்திற்கு ஆச்சரியத்தைத் தரக்கூடியது. ஈடில்லாப் புகழ்பெற்று 'நம்பை' என்ற ஊரை ராஜதானியாய் எடுத்து அதனை நன்றாய் ஆண்டு வந்தார். சங்கமர்களுக்குப் பூசை செய்வதை விரதமாக எடுத்துக்கொண்டு சிவபெருமானுக்கு அபிஷேகம் செய்து கொண்டிருப்பார். ஒவ்வொரு ராகத்திற்கும் ஒவ்வொரு வீணையை வாசித்துக் கொண்டிருப்பார். சிவனுக்கு எந்த ராகம் பிடிக்குமோ? அந்த ராகத்தை வாசிப்பார், ராவணஸ்தம்பு. பிரம்ம

விணை. லாவண்ய விணை. கைலாச விணை. ஆகாச விணை. பினாக்கி விணை சாரங்க விணை. கூர்ம விணை. சுவாயம்பு விணை. கௌரி விணை. கின்னரா விணை. ஐகை விணை போன்ற விணைகளிலே பல்வேறு இராகங்களை இறைவனுக்குப் பிடித்தவாறு வாசித்துக் கொண்டிருப்பார். கடவுளைப் பாராட்டி சப்தஸ்வரங்களிலே 22 சுருதிகளை வைத்து 7 கமகங்களைச் சேர்த்து, மந்த்ரா. மத்யா, தாரம் இந்த மூன்று லயங்களிலும் தேசாட்சி. தன்னாசி. மலகரி, குர்ஜரி. மேகாஞ்சி. வராளி. காம்போசி. கௌரிபஞ்சகம். கௌசிகா. மத்யமாவதி. தோடி. போன்ற பெண்ராகமும். ஆண் ராகமும் பாடி. எல்லா வாத்தியங்களும் முழக்கமிட. விடாது இரவும் பகலும் இந்த லிங்க அர்ச்சனையில் ஈடுபட்டு இருக்கிறார்.

இந்த ராஜபோகங்களில் ஈடுபடாது. மல்லரசு என்ற மன்னன் ஸ்ரீகிரிக்குச் சென்று வில்வமரத்தடியில் சிவனை நினைத்து தவம் செய்து கொண்டிருக்கிறார். சிவன் மீது அவர் கொண்டுள்ள பக்தியை மாதிராசய்யா கேள்விப்பட்டு. அவரைப் பார்க்க வேண்டுமென்று ஸ்ரீகிரிக்கு வந்தார். மலையழகைக் கண்டு மகிழ்ந்தார். வில்வமரத்தின் அருகில் எங்கு பார்த்தாலும் ருத்திராட்ச மலைகளாய் ருத்ராட்ச மரங்களாய். விபூதியும் நிறைந்து காணப்பட்டது. விபூதி ஆறுகளும் இருக்கின்றன. இலிங்க பர்வதம். இலிங்க விருட்சம் போன்றவைகளும், சங்கமபர்வதம். சங்கம் விருட்சம் போன்றவைகளும் காணப்பட்டன. உரையாடிக் கொண்டிருக்கிற மலைகள். உரையாடிக்கொண்டிருக்கிற செடி. கொடிகள். பாடிக் கொண்டிருக்கிற மலைகள், விலங்குகள், பறவைகள் ஆகியவையும் இருந்தன. அம்மலையில் இருக்கும் மரங்களும், சிலைகளும், செடிகளும் பல வண்ணமாய் இருந்தன. வீடு போன்ற மலைகள். செடி கொடிகள். மிருகம் போன்ற மரங்கள், மிருகரூப சிலைகள். பறவைகள். மனிதர்கள். தேவர்கள் போல மலைகள் ஒவ்வொரு நோக்கிற்கும் ஒவ்வொரு தோற்றம் கொள்வனவாய் இருந்தன. ஈரேழு உலகங்களிலும் எங்குமே காண இயலாத அபூர்வமான மலைகள் மரங்கள் இருந்தன. அந்த மலைகளின் மீது ஏறி எந்த ரூபம் வேண்டுமானாலும் எங்கு செல்ல வேண்டுமானாலும் செல்லலாம். எங்கு பார்த்தாலும் நிறைய சிவலிங்கங்கள் இருக்கின்றன. அங்குள்ள

காற்று சுற்றுப்புறத்தைத் தூய்மையாக்கிக் கொண்டிருக்கும். சிவாலயத்தைச் சுற்றி அருவி தண்ணீர் தெளித்துக்கொண்டிருக்கும். பயிர்கள் லிங்கத்தைச் சுற்றி கோலமிட்டுக் கொண்டிருக்கும். தீர்த்தங்கள் லிங்கத்திற்கு அபிஷேகம் செய்யும். சந்தன மரங்கள் சந்தனம் பூசும். மூன்று வேளையும் புஷ்ப மரங்கள் சிவபெருமானுக்குப் புஷ்பத்திலேயே அபிஷேகம் செய்யும். சாம்பிராணி மரங்கள் சுவாமிக்கு சாம்பிராணி தூபம் கொடுக்கும். சில மரங்கள், சுவாமிக்குத் தீபாராதனைகள் கொடுக்கும். சில மரங்கள் சுவாமிக்கு எல்லாவிதமான பழங்களையும் நைவேத்தியமாகக் கொடுக்கும். சில தாம்பூலம் கொடுக்கும். இதுபோல அங்கு இருக்கின்ற, செடிகள், மலைகள், மிருகங்கள், பறவைகள், மலர்கள், தீர்த்தங்கள், குளங்கள், முனிவர்கள், வேடர்கள், அனைவரும் சரணம், சரணம் என்று கூறியபடியே அம்மலையில் சிவபெருமானை வணங்கிக் கொண்டிருக்கின்றனர். அங்கிருக்கும் முனிவர்களுடன் எதனையும் ஒப்புமை கூற இயலாது. அவர்கள் மேல் புற்று, மலைபோல் வளர்ந்திருக்கும். செடிகள் பெரிய பெரிய மரங்கள் போல் அவர்கள் மேல் காணப்பட்டன. சிலர் சிலைகளாய் இருக்கின்றனர். சிலர் தலையைக் கீழே வைத்து, மேலே காலைத்தூக்கித், தவம் செய்து கொண்டிருக்கின்றனர். சிலர் விரலை மட்டும் ஊன்றியும், சிலர் பஞ்சாக்கினி மத்தியில், சிலர் தண்ணீர் மூழ்கியும் தவம் செய்து கொண்டிருக்கிறார்கள். ஆகாரமாக சிலர் இலைகளையும் சிலர் தண்ணீரையும் சிலர் காற்றையும் சிலர் கந்த மூலத்தையும் எடுத்து, தவம் செய்து கொண்டிருக்கிறார்கள். நிறைய தேவர்கள், யட்சர்கள், கின்னரர்கள் ஆகியோர் உலா வந்து கொண்டிருந்தனர். அங்கு விரோதமில்லாது மிருகங்கள் ஒன்றோடொன்று மகிழ்ந்து விளையாடிக் கொண்டிருக்கும். மல்லராசய்யா, மாதிராசய்யாவைத் தேடிக்கொண்டிருக்கிறார் மல்லிகார்ஜுனர் தன் உடம்பை விகாரமாக்கிக் கொண்டு அங்கே ஆகாயம், பூமி இரண்டும் ஒன்றாய் இணைந்ததுபோல் விழுந்திருக்கிறார். அவரைப்பார்த்து மாதிராசய்யா, இவர் பெரிய யோகியாய் இருப்பாரா? அல்லது விபூதி மலையா? ருத்ராட்ச மரமா? பெரிய ஜோதியா? சிவனே இந்த உருவத்தில் வந்து இருக்கிறாரா? அவருடைய தலை எந்தப்பக்கம் இருக்கிறது? என்று பார்த்து

அந்தப்பக்கமாக வந்து மூன்று வருடம் காத்து இருந்தார். ஆனாலும் ஒன்றுமே அவருக்குத் தெரிய வாவில்லை. திருவடிகளில் வந்து நிற்காது. தலைப்பக்கம் வந்தது தவறு என்று நினைத்து, கால்கள். இருக்கும் இடத்திற்குச் சென்று அங்கு எட்டு வருடம் காத்திருக்கிறார். எட்டு வருடம் கழித்து அவர் விழிக்கும்போது அவர் கால்களில் விழுந்து வணங்குகிறார். உடனே. மல்லிகார்ஜுனர் சுயரூபம் எடுத்து, உன் மனதை அறிந்து கொள்ள வேண்டும் என்று நினைத்து இவ்வாறு செய்தேன் என்று கூறினார். பின்பு அவரைத் தூக்கி நிறுத்தி கட்டியணைத்தார். என்னைப் பார்க்க எவ்வாறு இங்கு வந்தாய்? இதுபோன்ற சாகஸம் எங்காவது நடக்குமா? என்று கூறி, தன்னுடைய நிவாசஸ்தானத்திற்கு அழைத்துச்சென்று உபசரித்தார். அங்கு சிவபூசை செய்து முடித்த பின்பு. பிரசாதம் தந்தார். மீண்டும் சிவபக்தியைப் பற்றி இருவரும் பேசுகிறார்கள். இன்னும் கொஞ்சகாலம் இந்த பூமியிலே இருக்க வேண்டும் என்று மல்லிகார்ஜுனர் மாதிராசய்யாவைக் கேட்டுக் கொண்டார். உடனே மல்லிகார்ஜுனரைப் பார்த்து மாதிராசய்யா. ஆனந்த வடிவாய் இருக்கிற உன்னை விட்டுவிட்டு நான் எங்கு செல்ல முடியும்? பெரிய நிதியை விட்டு விட்டு கூலிவேலை செய்வதற்காக யாராவது செல்வார்களா? உங்களது திருப்புகழை நான் பார்த்தபின்பு. இனி நான் ஏன் திரும்பிச் செல்லுகிறேன் என்று கூறினார். மல்லிகார்ஜுனர் ஒரு தும்பி மரத்தை உருவாக்கி இங்கேயே தவம் செய்து கொண்டு இரு என்று கூறிவிட்டு, இடையன் போல மாறுவேடம் பூண்டு கொண்டார். கறிய நிறம் உடையவராய் மாறினார். நாயையும் உடன் அழைத்துக்கொண்டார், ஒரு கையில் கோடாரியை வைத்துக்கொண்டார். மற்றொரு கையில் கம்பும். சாப்பாட்டுப்பானையும் வைத்துக் கொண்டு, சில ஆட்டுக்குட்டிகளை கக்கத்தில் சேர்த்துக் கொண்டார். சில ஆடுகளைக் கூட்டி வந்து. அந்தத் தும்பி மரத்தில் இருக்கும் காய்களைக் கீழே விழும்படி செய்தார். அது மட்டுமல்லாது அம்மரத்தின் கிளையை வெட்டவும் துணிந்தார். உடனே. மாதிராசய்யா அவரைப்பார்த்து. மிகவும் கோபித்து, எதற்காக இம்மரத்தின் கிளையை வெட்டுகிறாய் எனக்கு நிழலாக இருக்கும் இம்மரத்தைத்தவிர வேறு மரமா இல்லை? உன் உடம்பில் கொழுப்பு

அதிகமாய் இருக்கிறது என்று அவரைக் கோபித்துத்திட்டிக் கொண்டிருக்கிறார். அப்பொழுது அந்த இடையன் சிரித்துக்கொண்டே. இதென்ன அதிசயமாய் இருக்கிறதே சன்னியாசிக்குக் கோபம் வரலாமா? அப்படி வந்தால் அது கோபித்துக் கொண்டவனுக்கு பாவமாகிப் போகும். கோபம் வந்தால் இதயத்தில் இருக்கும் சச்சிதானந்த பத்மமும் நசுங்கி காய்ந்து விடும். இந்த தாமச குணம் ஞானத்தினாலா? தியானத்தினாலா? மிகவும் யோசித்ததனால் வந்ததா? இந்தக் காட்டிலே உனக்கு அமருவதற்கு வேறு மரமே இல்லையா? நீ என்ன எனக்குச் சொல்வது? இதுபோல சாந்த குணம் உடையவர்கள் எங்கிருப்பார்கள்?

அறியாமையில் நெருப்பில் குதிப்பதற்காக ஒரு மூர்க்கன் உடையைச் சரிசெய்து கொண்டிருக்கிறானாம். எதுவுமே வேண்டாம் என்று வெறுத்து சன்னியாசி வேடம் இட்டுச் செல்பவன் வீட்டைப் பார்த்துக் கொண்டு பத்திரமாய் இருங்கள் என்று கூறுவது போல. கிணற்றில் விழுவதற்காகச் சென்று ஏணியைத் தேடிக் கொண்டிருக்கிற முட்டாளைப் போன்று, ஞானம் வந்த பிறகு, எல்லாப் பந்தங்களையும் விட்டபிறகும் கூட எனக்கு ஒரு ஆசிரமம் வேண்டும் என்று கேட்பதனைப் போன்று எனக்கு பைத்தியம் போயிற்று. உலக்கையைக் கொண்டு வாருங்கள். தலையில் சுற்றிக் கொள்கிறேன் என்றாற்போல. சம்சாரத்தை வேண்டாம் என்று விட்டுவிட்டு பிறகு சிறிது ஆசைப்பட்டாலும் அது தவறல்லவா? என்று பழைய உருவம் எடுத்து பேசிக் கொண்டிருக்கிற மல்லிகார்ஜுனரைப் பார்த்து, கண்களை மூடி, தலை வணங்கி மிகுந்த வெட்கப்பட்டு, மிகுந்த சோகத்தினால் முகமே கண்ணீரில் நனைய எனக்கு எங்கே முக்தி கிடைக்கப்போகிறது? எங்கு சென்றாலும் இந்த மாயை என்னை விடுமா? கர்மம் எதுவரை இருக்குமோ? என்ன நடக்குமோ? அதுபோலத்தான் நடக்கும். காயை மரத்திலிருந்து பிஞ்சாகப் பறித்தால் அதில் காய்தான் இருக்குமேயன்றி, பழம் இருக்காது. அழியாத கீர்த்தியும் ஈஸ்வரன் பக்தியில்லாது எப்படி தித்திக்கும்? என் போன்று கர்மத்தைச் செய்து கொண்டிருப்பவருக்கு வைராக்கிய பாவம் வருமா? என்று புலம்பிக் கொண்டிருக்கிற மாதிராசாவைப்

பார்த்து. அவனை அணைத்துக் கொண்டு நீ. துக்கப்படாதே. கர்மம் செய்தவனாய் இருந்தால் எப்படி எங்களிடம் வாழமுடியும்? நீ மறுபடியும் பூவுலகத்திற்குச் செல்வதற்காகத் தான் இந்த விளையாட்டு எல்லாம் நான் செய்தேன் இதற்கு என்ன காரணம் என்று கேள்!

சிவபெருமானின் ஆணையினால் இப்பூவுலகில் பக்தியை நிலைநாட்டுவதற்காகப் பசவண்ணா என்பவர் வந்திருக்கிறார். நீ அவரது கூடத்தில் சிவாச்சாரங்களைச் செய்து கொண்டு ஆனந்தமாய் இருக்க வேண்டும். நீ இங்கு வந்து 650 ஆண்டுகள் ஆயிற்று. இன்னும் 50 வருடத்திற்குப் பின்பு. உன்னை நானே இங்கே வரவழைத்துக் கொள்கிறேன். இது உண்மை. இங்கு வருவதற்கு 700 ஆண்டுகள் ஆவதற்குப் பின்பு தான் உனது எண்ணம் ஈடேறும். உனக்கு இப்பொழுது ஏதாவது வேண்டுமென்றால் கேள்! என்றார்.

உடனே. மாதிராசய்யா மல்லிகார்ஜுனனை வணங்கி. எனக்கு நிறைய செல்வம் வேண்டுமென்று கேட்டால் பிற பெண்களின் தொடர்பு வரும். நிறைய ஆயுள் வேண்டுமென்று கேட்டால். இந்த உலகமே மாயம். சொர்க்கம் வேண்டுமென்று கேட்டால் அது நிச்சயமில்லை. மோட்சம் என்பது சிவனுடைய பாதம். அதனால் எதுவுமே வேண்டாம் ஸ்வாமி உனக்குத் தெரியுமல்லவா? என்று கூறி. தரையில் விழுந்து வணங்கி. அவரைப்பார்த்து. அவருடைய கருணையினாலே. கல்யாண கடகத்திற்கு பசவண்ணா வரவே. அவரை வணங்கி மாதிராசா பணிவிடைகள் செய்து கொண்டு இருந்தார். இந்த உலகத்தில் மாதிராசய்யாவின் சரிதத்தைப் பெரிதுபடுத்தி எழுதினாலும் ஆர்வத்தோடு கேட்டாலும். அனைவருக்கும் நன்மைகள் வந்து சேரும்.



# நான்காம் அத்தியாயம்

## மடிவாலு மாச்சய்யா கதை

இவர் ஒரு சைவ விரத பக்தர். சங்கமர்களை எப்பொழுதும் ஆதரித்து வந்தார். சிவபக்தர்கள் அல்லாதவர்கள் போகின்ற வழியில் கூடபோகமாட்டார். அவரது தொழில் துணி துவைப்பது ஆகும். அவரைப் பார்க்கும்போது சிவனே மாறுவேடத்தில் வந்திருக்கிறாரோ என்று எண்ணத்தோன்றும். இறைவனது திருவடிகளையே நினைத்து இருக்கும். இவர் அப்பக்தர்களாகிய சரணர்களின் பாதத்தாமரைக்குத் தேனியைப் போல இருந்தார். 'உறிப்பாருகே' என்ற ஊரில் வாழ்ந்து கொண்டிருந்தார். அவர் சங்கமர்களைப் பார்த்தவுடனே ஆனந்தப்பட்டு, அவர்களுக்கு வேண்டிய அனைத்தையும் செய்வார். பக்தர்களின் அழுக்கான வஸ்திரங்களை எடுத்துக் கொண்டு அதிகாலையில் எழுந்து தனியாக அதற்கென ஓரிடத்திற்குச் சென்று அதனைத் துவைத்து, அவையனைத்தையும் மூட்டையாகக் கட்டி, வெள்ளிமலையையே தலையில் சுமந்து கொண்டு வருவதுபோல் வருவார். அவ்வாறு அவர் வந்து கொண்டிருக்கும்போது சிவபக்தர்களல்லாதவர்கள் வந்தால் அவர்களைக் கடுமையாகக் குத்துவேன் என்று கூறிக்கொண்டு மணியை ஆட்டிக்கொண்டே மடத்திற்கு வருவார். மடத்திற்கு வந்து வஸ்திரங்களை ஒன்றோடொன்று சேராது தனித்தனியாகப் பிரித்து மடித்துக் கொடுப்பார். அந்த சமயத்தில் யாராவது ஒரு சங்கமர் வந்து கேட்டால், அவர்கள் எதனைக் கேட்டாலும் இல்லையெனாது கொடுத்து வணங்குவார். அவரது சிவபக்தியை பசவண்ணா கேட்டு, அவரைப் புகழ்ந்து பேசுவார். இதுபோன்ற பக்தி, மகத்துவம், சாமர்த்தியம் வேறுயாரிடமும் இல்லை என்று பசவண்ணா புகழ்வார். இதுபோல் சிலநாட்கள் கழிந்த பிறகு, ஒரு நாள் வஸ்திரங்களை எடுத்துக்கொண்டு வந்திருக்கும்போது, தெரியாமல் வஸ்திரங்களின்மேல் ஒருவர் மோத உடனே அந்த நபரை மாதய்யா கொன்றுவிட்டு எப்பொழுதும்போல இருந்தார். உடனே அனைவரும் சேர்ந்து மன்னரிடம் சென்று வணங்கி, இந்த இடத்தில் ஒருவன், தான் ஒரு பக்தன் என்று சொல்லிக் கொண்டு தனது வேஷ்டியில்

ஒரு பெரிய கத்தியைக் கட்டிக்கொண்டு யாருக்குமே வழிவிடாது, யாராவது இந்த முட்டையின் மீது மோதினால் முதலில் அவர்களுக்குக் குத்து விழும் என்று வீரமாகப் பேசிக்கொண்டிருந்தார். இதனால் கடைகளில் வியாபாரம் எல்லாம் நின்று விட்டது. சாலையில் இங்கும் அங்குமாகச் செல்லமுடியவில்லை. புறவீதியில் யாராவது போய்க்கொண்டிருந்தால் அவர்களைப்பார்த்து ஓடிச்சென்று விரட்டியடிப்பார். அவர் எதிரே மாடு. குதிரை. யானை வண்டி எது வந்தாலும் செல்லப்பயந்து தூரமாய் அவரைப் பார்த்தவுடனே அருகே வராது வேறுபக்கமாய்ச் சென்றுவிடும். இன்று தெரியாமல். புதிய ஒருவர் சந்தைக்குச் சென்று கொண்டிருக்கும்போது அவரைத் தொட்டுவிட்டார். உடனே. இவர் அவர் மேல் ஏறி. அவரைக்குத்தி தூக்கி எறிந்து விட்டார். அவருடைய உடல் அங்கே இல்லை. அப்படியே மேலே சென்று விட்டதா? ஒன்றுமே தெரியவில்லை என்று அங்குள்ள மக்கள் அனைவரும் மன்னனிடம் சென்று தெரிவித்தனர். மன்னர் பசவண்ணரைப் பார்த்து, இது என்ன விபரீதம்? உங்களது பக்தரின் இச்செயலால் யார்தான் உயிரோடு இருக்க முடியும்? சாதாரண துணிகளைத் துவைத்துக் கொண்டிருப்பவன் கொழுப்புப்பிடித்து இந்த ஊரையும் உலகத்தையும் அமர்க்களப்படுத்திக் கொண்டு இருக்கிறான். ஒரு வண்ணானுக்கு ஏன் இந்த அட்டகாசச்செயல்? ஆட்களைப் பார்த்தவுடன் அவர்களைக் கடிப்பதற்கு வந்து கொண்டிருக்கிறான். இது போன்ற அதிசயத்தினை எப்பொழுதுமே கேட்டதில்லை. வஸ்திரங்கள் எங்காவது தொட்டால் கெட்டுவிடுமா? ஊரில் இருப்பவர்கள் அனைவரும் இவருக்குப் பயந்து கொண்டு இருக்கிறார்கள். வீதியில் நடமாடுவது கடினமாய் இருக்கிறது. வெளியூரில் உள்ளோர் நம் ஊருக்கு எப்படி வருவார்கள்? எங்கிருந்தோ வந்தவனைக் கொன்றிருக்கிறான். தொட்டாலே போதும் கொன்று விடுகிறான். மற்றவர்களை இதுபோல் சாகடிக்கலாமா? இந்த ஊரில் இருப்பவர்களிலே நான் தான் சிறந்த பக்தன் என்று மனிதர்களின் உயிரைப் போக்கிக் கொண்டிருக்கிறான். எனவே, ஊரிலுள்ள புரோகிதர்களிடம் ஆலோசித்து. தலையாரிகளைப் பார்த்து. அந்த வண்ணானை எங்கு பார்க்கிறீர்களோ? அங்கே கொன்று விடுங்கள் என்று மன்னன் ஆணையிடுகிறார். பசவண்ணா. மன்னனைப் பார்த்து இவ்விசயத்தைப் பற்றி முன்னும் பின்னும் ஒன்றுமே தெரியாது.

பேசிக்கொண்டு இருக்கிறாய். இந்த உலக மக்கள் காக்காய் போல் கத்திக் கொண்டு இருக்கிறார்கள். அவர்கள் பேச்சை நம்பிக் கொண்டு இருக்கிறாய். அதனால் வண்ணானைச் சாடுகிறாய் அவர் வண்ணான் அல்ல. நேராக வந்திருக்கிற லிங்கமூர்த்தி ஆவார். குலம் இருப்பவரும் குலம் இல்லாதவரும் அவர்தான்.

அந்த சிவனது ஆசியினாலே எல்லாச் செயல்களும் செய்ய வல்லவர். பிரம்மனது சடையைப் பூணூலாகப் போட்டு பிச்சை. எடுத்த பிராமணர் அவர். மோட்ச சாம்ராஜ்ஜியத்திற்குச் சகஜமாக வருகிற சத்திரியன் அவர்தான். பிறப்பு என்ற கடலில் கர்மம் என்ற படகைச் செலுத்திக் கொண்டிருக்கிற வைஸ்யன் அவர்தான். இந்தப் பிரமாண்டம் என்ற பெரிய பெரிய பானைகளைச் செய்து கொண்டிருக்கிற முதல் குயவன் அவனே. மீன் பிடிப்பதற்கான தூண்டிலில் விஷ்ணுவைத் தூண்டிலாகவும் ஆதிசேசனைக் கயிறாகவும் நரசிம்மனைக் கொக்கியாகவும் வைத்து இந்த உலகத்தையே சுமந்த வராகத்தை இரையாக வைத்துக் கூர்மம் என்ற பூமியும். மீன் என்ற காலத்தையும் ஒரே முறையில் உருவாக்கினார். இதுபோல விளையாடிக்கொண்டிருக்கிற மீனவன் அவர். கர்மம் என்ற சக்கரத்திலே ஜீவன்கள் என்ற அனைவரையும் சுற்றி வைக்கும் ஆசாரி அவர். ஜீவன் என்ற உலோகத்திற்கு ஞானம் என்ற நெருப்பினைக் கொடுத்து ஒளியைக் கொடுப்பவன் கொல்லன். பொய்யான உருவத்தை எடுத்துவிட்டு. மெய்யான உருவத்தைக் கொடுக்கும் கொல்லன் அவர். விஷ்ணு போன்ற தேவர்களை தன் கீழ் வைத்திருக்கும் பெரிய அரசனே. உலகச் செயல்களை நாடகமாக நடத்திவரும் சூத்திரதாரி இவரே.

பெரிய, பெரிய மலைகளைத் தூளாக்கி, சமுத்திரங்களின் தண்ணீரை இறைத்துப் பயிர்செய்து கொண்டிருக்கிற வேளாளர் அவரே. இந்த உலகம் ஒரே சமுத்திரமானபோது, பிரம்மா, விஷ்ணு ஆகிய இருவரையும் ஒரு பொருட்டாய் மதிக்காது, மாயையைத் துவைக்கின்ற வண்ணானும் அவனே. சிறந்த பக்தர்கள் அனைவருக்கும் நன்றாய்த் துவைத்து, சுத்தம் செய்து துணிகளைக் கொடுப்பதற்காக இப்பொழுது இவ்வுலகத்திலேயே மடிவாலு மாச்சய்யாவாக வந்திருக்கிறார். இத்தனையும் தானாக இருக்கிற அவருக்கு ஒரு

குலம் என்று சொல்வது நன்றாய் இருக்குமா? காரண ஜென்ம புருஷரான அவரது சரித்திரமும் மிகுந்த அதிசயமானது. அவர் பக்தர்களின் உடைகளைத் தவிர மற்றையவர்களின் உடைகளைத் தொடமாட்டார். பக்தர்களது உடைகளைப் பக்தியோடு பக்தர்களுக்கே கொடுப்பார். எந்த சங்கமர் கேட்டாலும் கேட்ட உடைகளைக் கேட்டபடியே கொடுப்பார். கெட்ட மனது உள்ளவர்களுக்கு அவரது மகிமை புரியாது. பக்தர்களின் உடைகளைத் தொட்டாலே தொட்டவர்களைக் கொல்லுபவர். நீ அவனைத் தண்டிக்கச் சென்றால் பேசாமல் இருப்பாரா? எதற்காக இவ்வாறு செய்கிறாய்? உன்னுடைய கௌரவத்தைக் காப்பாற்றிக்கொள் என்றார் பசவண்ணரைப் பார்த்து மன்னன். நீ ஏதேதோ கதை சொல்லிக் கொண்டு இருக்கிறாய். கடைகளில் எங்கும் வெளியில் செல்ல முடியாதபடி நிலை ஏற்பட்டுவிட்டது. தெருவில் யார் சென்றாலும் துரத்தித் துரத்தி தூரப்போகச் செய்து விடுகின்றார். அவருக்கு எதிராக ஒரு மாட்டு வண்டி ஏது வந்தாலும் கூட தூரமாக விலகிச் சென்று விடுகிறது.

இவரைப்பற்றி அறியாத ஒரு புதுமனிதர் கடைக்குச் செல்லும்போது இவரைத் தொட்டுவிட்டார். உடனே இவரைக் கத்தியால் குத்திவிட்டு ஆகாயத்தை எட்டும் அளவிற்குத் தூக்கி எறிந்து விட்டார். உடல் எங்கும் காணவில்லை. அதனை விழுங்கிவிட்டானோ? தெரியவில்லை. உங்களுக்குத் தெரிவிப்பதற்காக நாங்கள் வந்தோம் என்று கூறினர். உடனே பக்கத்தில் இருக்கும் பசவண்ணரைப் பார்த்து மன்னன் அதிகக் கோபத்துடன் இது என்ன அபூர்வமாக இருக்கிறது? இவ்வுலகிலே யார் பிழைக்க முடியும்? ஒரு துணி துவைக்கும் வண்ணான் மிகவும் திமிர் பிடித்து இந்த ஊரையும் உலகத்தையும் துன்பத்திற்குள்ளாக்கிக் கொண்டு இருக்கிறான். வண்ணானுக்கு இவ்வளவு சேட்டை எதற்கு? ஆட்களைக் கண்டால் அருகில் சேரவிடாது கடிப்பதற்கு வருகிறார். இதுபோல அதிசயத்தினை யாரேனும் எங்காவது கேட்பதுண்டா? தொட்டவுடனே எங்காவது துணிகள் கெட்டுப்போய்விடுமா? இவ்வூரில் இருப்பவர்களாலேயே சுதந்திரமாகச் சுற்ற முடியவில்லை. இந்நிலையில் வெளியூரிலிருந்து நம் ஊருக்கு எப்படி வருவார்கள்? எனவே, அவனை எந்த இடத்தில் பார்க்கிறீர்களோ அந்த இடத்திலே உயிரை எடுத்து விடுங்கள்

என்று தலையாரிகளிடம் மன்னன் ஆணை பிறப்பித்தான். மன்னனைப் பார்த்து பசவண்ணா. மன்னா உன் மானத்தை நீ போக்கடித்துக்கொள்ளாதே! நீ எந்தப் படையுடன் சென்றாலும் ஒன்றும் நன்மை பயக்காது, ஒரு விரலில் திசையைச் சுட்டிக்காட்ட முடியும் சுட்டு விரலை மடக்கிக் கொண்டு திசையைக் காட்ட முடியுமோ? இது எதற்காக? வேண்டாம்.

மன்னன் கோபமாக தலையாரிகளிடம் யானையோடு சென்று யானையை வைத்து மாச்சய்யாவின் உயிரை எடுத்து விடுங்கள் என்கிறான். தலையாரிகள் உற்சாகமாக யானைப்படையுடன் வர மாச்சய்யாவும் பயமில்லாது எதிரே அந்த வழியாக வந்து கொண்டிருக்கிறார். அவர் கையில் வைத்துக்கொண்டிருந்த மணியை அடித்தவுடன் யானைக்கு இருக்கும் பலம் அனைத்தும் மறைந்து போனது. யானையை ஓட்டி வந்தவர்கள் அனைவரும் கீழே விழுந்தனர். உடனே மாச்சய்யா தன் முதுகில் உள்ள துணிமூட்டைகளை ஆகாயத்தில் நிறுத்தி வைத்தார். பின்னர் யானைகளின் உயிரை எடுப்பதற்காக அவற்றின் தும்பிக்கையைப் பிடித்து தூக்கி எறிந்தார். வீரபத்திரன் விஷ்ணுவை எவ்வாறு துன்புறுத்தினாரோ அவ்வாறு செய்தார். கோபத்தில் விஷ்ணுவின் பாணத்தை சிவன் எவ்வாறு உடைத்தானோ அதுபோலச் செய்தார். உயிரை எடுத்தது மட்டுமல்லாது தோல் வேறு, தலை வேறாகப் பிரித்தார். அதைக்கண்ட பக்தர்கள் மாச்சய்யாவைப் புகழ்ந்தனர். யார் என் மீது யானையை ஏவிவிட்டார்களோ அந்த ராஜாவின் திமிரை நான் அடக்குகிறேன் என்று கூறி கூச்சலிட்டார். இந்த செயலைக்கேட்டு, பிஜ்ஜலன் பசவண்ணைப்பார்த்து, தலைகுனிந்து நின்றார். பசவண்ணா அப்போது ராஜாவைப் பார்த்து, வேண்டாம் வேண்டாம் என்று கூறினாலும் கேட்காது, கர்வத்தோடு மக்களின் பேச்சைக் கேட்டு யானைகளை அனுப்பினாய். யானை போனதோடு மானமும் போயிற்று இவற்றிற்கெல்லாம் மேலாக சிவத் துரோகம் செய்தவன் ஆகிவிட்டாய்.

## இருபதாண்டாரி கதை

மன்னனே! திராவிட தேசத்தில் நடந்த கதை ஒன்று சொல்கிறேன் கேள்! கரையூரிச் சோழ ராஜாவின் ராஜ்ஜியத்தில்

63 பக்தர்களில் இருபதாண்டாரி என்ற ஒரு பக்தர் இருந்தார். இவர் மிகவும் தைரியசாலி. இவர் சிறந்த சிவபக்தர். போர்க்களத்தில் எதிரிக்கு முன் வீரபத்திர அவதாரம் எடுப்பவர். எல்லாச் சாஸ்திரங்களையும் நன்றாகப் படித்து உள்ளார். சிவபக்தியிலே தோய்ந்து. எப்பொழுதும் வேதத்தில் சொல்லப்பட்டது போல, உத்திராட்சம் அணிந்து கொண்டிருந்தார். பக்தர்களுக்கு எப்பொழுதுமே சேவை செய்ய வேண்டும் என்ற எண்ணம் கொண்டு இருந்தார். சிவபக்தர்களுக்கு யார் யார் தீங்கு செய்கிறார்களோ? அவர்களை அழித்துவிடவேண்டும் என்ற கொள்கையும் கொண்டிருக்கிறார்.

இப்படிப்பட்ட காலத்தில் சோழமன்னனின் யானை மிகுந்த கர்வத்தோடு வேகமாகத் தப்பி வந்து கொண்டிருந்தது. ஒரு சிவபக்தர் அதிகாலையில் எழுந்து பூந்தோட்டப் பக்கம் சென்று, அங்கிருக்கும் பூக்களைப் பறித்துக்கொண்டிருந்தார். கீழே விழுந்த. மண்பட்ட, கிழிந்த பூக்களை விடுத்து நல்ல பூக்களைப் பறித்துக் கொண்டிருந்தார். அவற்றைப் பூக்கூடையிலிட்டு நிரப்பி, மன மகிழ்ச்சியோடு சிவபூசை செய்வதற்காக வந்து கொண்டு இருந்தார். எதிரே வந்த யானை அவரைப்பிடித்து தன் கொம்புகளால் நசுக்க முயற்சித்தது. அந்த பக்தர் 'சிவ சிவா' என்று கூச்சலிட்டார். அதைக்கேட்டு இருபதாண்டாரி, யாரோ ஒரு சிவபக்தர் ஆபத்திலிருக்கிறார் என்று நினைத்து யார் என்று பரிதாபமாகப் பார்த்தார். உடனே பெரிய கத்தியை எடுத்து, உன்னை இப்பொழுதே வெட்டிவிடுகிறேன் பார். எங்கும் ஓடாதே எனக் கூறிக்கொண்டு யானையின் உயிரை எடுத்தார். யானை மலைபோலே கீழே விழுந்து விட்டது. இந்த செய்தியினைச் சோழ மன்னன் கேள்விப்பட்டு அந்த பக்தரின் காலில் விழுந்து கும்பிட்டு, சிவபக்தரை யானை இவ்வாறு துன்புறுத்தியதா? சிவபக்தருக்கு முன்னே பிரம்மாவும், விஷ்ணுவும் ஈடாகார். எனவே, இந்த யானைக்கு ஏற்பட்ட கதி சரியே. யானை ஒரு விலங்கு தானே! அதற்கு என்ன தெரியும்? யானைக்கு உரிமையானவன் தான் துரோகி. அவன் தான் தவறு செய்திருப்பான். ஆகையால். நான் என் உயிரையும் போக்கி தூய்மையாக்கிக் கொள்கிறேன் என்று கூறிக்கொண்டே மன்னன் தன் தலையை

வெட்டிக்கொண்டார். சிவன் காட்சியாகி, மன்னனின் பக்திக்கும் இருபதாண்டாரியின் பக்திக்கும் மகிழ்ந்து. பக்தனுக்கு உயிர் கொடுத்தார். அது மட்டுமல்லாது பாகனுக்கும் யானைக்கும் உயிர்கொடுத்தார். மன்னனும் பக்தனும் கைலாயத்திற்கே வருமாறு செய்தார். யானை செய்த துரோகம் தன்னால் தான் நடந்தது என்று நினைத்து மன்னன் தனது உயிரைப் போக்கிக் கொண்டார் என்று கூறி மீண்டும் கதை கூற ஆரம்பிக்கிறார்.

## பாலூரி பிரம்மய்யர் கதை

ஒரு ஊரில் பாலூரி பிரம்மய்யா என்ற சிவபக்தர் இருந்தார். சத்தியத்தைத் தனது உயிராக நினைப்பவர். சிவபக்தர்களின் பாதங்களை வணங்கக்கூடியவர். விடிவதற்கு முன்னமே பூக்களைப் பறித்து மாலையாக்கி, சிவபக்தர்களுக்குக் கொடுப்பவர். ஒரு நாள் அவ்வூரிலிருக்கிற ராஜா மற்ற தேசங்களுக்குப் போய்வரும்பொழுது, இவருடைய பூந்தோட்டத்திற்கு அருகில் கிழக்குப்பக்கமாகச் சிறிது காலம் தங்கியிருந்தார். அந்த சமயத்தில் அவரது பட்டத்து யானை, பாகனைக் கீழே தள்ளி, பூந்தோட்டத்திற்குள்ளாகச் சென்று செடிகளையும் நாசமாக்கி, அங்குள்ள மனிதர்களையும் மிதித்து, உயிரை எடுத்தது. இவ்வாறு இடையூறுகள் செய்து கொண்டிருந்த யானையைப் பார்த்த பிரம்மய்யர் அருகில் சென்று அதனை விரட்டினார். உடனே, அந்த யானை பயந்து, பின்னாலேயே ஓடி, நதிக்கரையில் மூர்ச்சையாகி விழுந்து உயிரை விட்டது. அங்கிருக்கிற யானைப்பாகன் மன்னனிடம் சென்று முறையிட்டார். இதனையறிந்த மன்னன் பிரம்மய்யரை யானை எவ்வளவு துன்புறுத்தியதோ என நினைத்து வருந்தி, யானை செய்த தவறுக்காகத் தன்னை மன்னிக்க வேண்டும் என வேண்டினார். இதனை ஆச்சரியத்தோடு மக்கள் அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கையில் பிரம்மய்யர் பார்த்து யானைக்கு உயிர் கொடுத்தார். மன்னனும் பெருமையோடு செல்கிறார்.

பிஜ்ஜலனே! பக்தர்களின் சரித்திரம் இவ்வாறு இருக்கிறது. அவர்களை எதிர்த்தால் அவர்கள் பயப்படமாட்டார்கள். நீயே சரணம் என்றால் நம்மைக் காப்பாற்றுவார்கள். இவையெல்லாம் உனக்கு சொல்லத் தேவையில்லை. நீ உயிரோடு இருக்கவேண்டுமென்றால்,

எழுந்திரு. கலியுகருத்திரன் தான் மாசய்யா. சாதாரண மனிதனாக நீ அவனை நினையாதே. இது தான் நீ இப்பொழுது செய்ய வேண்டிய வேலை என்று கூறினான். உடனே, மன்னன் இதுதான் உண்மை என்று கூறிவிட்டு. எல்லோரும் பார்த்துக்கொண்டிருக்கும் வேளையில் சாஷ்டாங்கமாக மாச்சய்யாவை விழுந்து வணங்கி. அப்படியே அவர் பாதத்தில் விழுந்து கிடந்தார்.

பசவய்யா. மடிவாலு மாச்சய்யாவை வணங்கி. அவரைப்புகழ்ந்து. ஒரு வேண்டுகோள் விடுத்தார். பறவைக்காக பாசுபதாஸ்திரத்தை எடுக்க வேண்டுமா. இந்த உலகத்தில் ஈஸ்வரன் எப்படிப்பட்ட மகிமை உடையவர். பதினான்கு உலகத்திலும் உனக்கு எதிர்ப்பே இல்லை. நல்ல உள்ளம் படைத்தவனே! இவரது பிழையை நீர் பொறுத்தருள வேண்டும் என்றார். அப்படியே ஆகட்டும் என்று மன்னனை எழச்செய்து, அந்நேரமே உயிரில்லா உடம்புகளின் மீது விபூதியைத் தூவ அனைவரும் உயிருடன் எழுந்து மாச்சய்யாவை வணங்கினர். அதன்பிறகு மாச்சய்யா தனது கொள்கையில் எப்பொழுதும் மாற்றம் இல்லாமலே இருந்தார். ஒரு நாள் பசவண்ணா பாடல் ஒன்று பாடச் சொன்னார். இந்தப் பாடலைக் கேட்ட மாச்சய்யா சிவசிவா என செவிகளைப் பொத்திக் கொண்டார். இந்தப்பாடலை பக்தர்கள் கேட்டால் தோஷம் வருமே! இது போன்ற பாடல்களை என்னிடம் பாடாதீர்கள் என்று மாச்சய்யா கோபத்துடன் கூற. பசவண்ணா. மாச்சய்யாவைப் பயத்தோடு பக்தர்களுடன் வந்து வணங்கி. அவரைப் புகழ்ந்து பேசுகிறார். மீண்டும் அவர் மாச்சய்யாவின் காலில் விழுந்து வணங்கினார் என்றார். 4 இலட்சத்து 64 ஆயிரம் பாடல்கள் எழுதியிருக்கிறேன். இவைகளை நீங்கள் ஏற்றுக் கொள்ளாததனாலே எனக்குத் தவறு செய்த பாவம் வந்ததாயிற்று. அதனால் நான் இங்கேயே உயிரைவிடப் போகிறேன் என்று பரிதாபத்துடன் கூற, மாச்சய்யா அதைக் கேட்டும் கேளாதவாறு இருந்து. பின்பு கோபத்துடன் சிவபக்தர்கள் என்றால் அவ்வளவு குறைச்சலாக உனக்குத் தெரிகிறதா? உன்னைக் கேட்பவர்கள் யாருமில்லையா? யாசிக்கிறவர்களை பார்த்திருக்கிறேன்? உன் மாதிரி தியாகம் செய்பவர்களை நான் எங்கும் பார்க்கவில்லை. பக்தர்கள் பெருமையைப் பார் என்று கலசத்தில் இருக்கும் நீரை இறைக்கிறார். அவை

விலையுயர்ந்த நவரத்தினக் கற்களாக மாறின. அவரது காலில் விழுந்து எங்களைக்காப்பாற்று. இந்த உருவத்தில் வந்திருக்கும் சிவன் நீதான். நீ நல்ல உள்ளம் படைத்தவன். நான் தீயவன்; நீ அறிந்தவன்; நான் அறியாதவன்; நீ அமிர்தம் உள்ள உடம்பை உடையவன், நான் விஷமுடையவன். நீ வள்ளல் தன்மை கொண்டவன். நாங்கள் அப்படிப் பட்டவர்களல்லர் நீவிர் பசுபதி நாங்கள் பசுசீவிகள்: நீவிர் இவ்வுலகத்திற்கே மணி போன்றவர்; நான் இந்தப் பூமிக்கு மட்டுமே மணி போன்றவன். துர்க்குணங்கள் மட்டுமே சேர்ந்துள்ள என்னிடம் நல்ல குணங்கள் இருக்க முடியுமா? அதனால் கர்மம் சேர்ந்த என்னைக் காப்பாற்று. நான் செய்த நூறாயிரம் தவறுகளைப் பொறுத்து என்னைக் காப்பாற்று. உடனே, பசவண்ணா அவரை அணைத்து கருணைக்கடலில் மூழ்க வைத்தார். உலகத்தில் சேவகர்களைத் தேர்ந்தெடுக்கும்போது பார்த்துத்தான் தேர்ந்தெடுப்பார்கள். துணிகளில் அழுக்குப்பட்டால், துணிகளில் உள்ள அழுக்கை எடுப்பார்களேயன்றி, துணிகளைக் கோபிக்க மாட்டார்கள். அதுபோல, மாசய்யா, பசவய்யாவைப் புனிதமுள்ளவராகச் செய்தார். பொன்னை நெருப்பிலிட்டுக் காயச்சக் காய்ச்ச மெருகேறிக்கொண்டே செல்லும், கரும்பினைத் துண்டு துண்டாக வெட்டினாலும் அதன் இனிப்புச்சுவை குறையாது. இதுபோல, பசவண்ணாவின் உண்மையான பக்தி, உயர்நிலையை அடைந்தது. கை இரண்டையும் சேர்த்து வணங்கிக் கொண்டு, பசவய்யாவைப் பார்த்து மாசய்யா அகங்காரம் பக்தியாகுமா? பழம்சிவ பக்தர் ஒருவரின் கதையைக் கூறுகிறேன். நீ கேள் என்று கூறி, கதை கூறத் தொடங்கினார்.

### சங்கரதாசி கதை

ஒரு சிவாலயத்தில் சரணர் (அல்) சிவபக்தர் சங்கரதாசி என்ற பெயரிலே இருந்தார். இவர் சிவனின் அவதாரம் போன்று விளங்கக்கூடியவர். தன் பொருள்கள் எல்லாவற்றையும் விற்று காசாக்கி, சங்கமர்களுக்கு வேண்டிய உதவிகள் எல்லாம் செய்து கொடுப்பவர். இவரிடம் பணம் எப்பொழுதும் நிலையாக இருந்தது. இப்படி இவர் இருக்கும்போது தேடரதாசய்யா என்பவர் இவரைப் பார்க்க வந்தார். இருவரும் உரையாடிய பிறகு, திரும்பி தன்னுடைய மடத்திற்கு நல்லவனைப்போலச் சென்றான். சங்காதாசின் மகிமை அதிசயமாக

இருக்கிறது. அரிசியில் உமி இருந்தால் கூட ஈ! வரும். அது கூட இல்லை. அங்கே அவர் நிறைய பொருள் வைத்து இருக்கிறார் என்று வருத்தத்தோடு கூறி, அருகில் இருக்கும் ஒரு பெண்மணியிடம் ஒரு கூடை கொடுத்து அனுப்பினார். இவர் அதனைப் பார்த்து, இன்னும் என்னவெல்லாம் கேட்பாரோ? என்று நினைத்து அக்கூடையைத் தொட அந்த நிமிடமே அவரிடம் உள்ள பொருள் அனைத்தும் மாயமாகிவிட்டது. மருந்திற்குக்கூட சிறிது சாதமும் இல்லை. தானியக்களஞ்சியங்கள் அனைத்தும் காலியாயின. மிகுந்த சோகத்தோடு அழுதுகொண்டு. இருக்க தேவதாகவிடம் துக்களவ்வா, "உலகத்தில் யானையின் பல் பார்க்கிற மனிதன் உயிரோடு இருப்பானா? அவன் அழிந்து போவான். அதுபோல சிவபக்தர்களின் உண்மையான அறிவினைப் பரிட்சித்துப்பார்க்க உன்னால் முடியுமா? சங்காதாகவின் மகிமை உனக்குத் தெரியவில்லை. சிவனே பிரதட்சண்யமாகி, என்ன வேண்டும் கேள் என்றார். அப்படி இருந்தும் கேட்கவில்லை. அவர் செய்கின்ற தொழில் என்ன? அவர் அர்ச்சிக்கின்ற சங்கமர்களின் எண்ணிக்கை எவ்வளவு? அந்தத் தொழிலால் அவரிடம் உள்ள பணம் எப்பொழுதும் குறையாது இருக்கும் வண்ணம் செய்துகொண்டே இருப்பார். சங்கமர்களைத் திருப்தி அடையும்படி செய்பவர்களுக்கு எந்தக்குறையும் வராது. 'குறை' என்ற சொல்லையே சொல்ல வாய்ப்பு வராது. ஒரு நாள் சிவன் அவரது புகழ் வெளிப்படும்படி செய்ய நினைத்து, அவரிடம் என்ன வேண்டுமோ கேள் என்று சொன்னார். இவர் அவசரப்படாது. மந்தகாசப் புன்னகையோடு. இந்த உலகச் செயல்கள் அனைத்திற்கும் மூலமுதல்வன் நீயே. மூலப்பொருளாக நீ இருக்கும்போது இன்னொரு வரத்தினை நான் ஏன் கேட்க வேண்டும். எதுவும் கேட்காமல் இருப்பதும் நல்லதில்லை என்று வெட்கப்படுகிறேன். அதனால் கேட்கிறேன். பகலில் எவ்வாறு நூலினை ஊசியில் சேர்க்கிறோமோ, அதுபோல ஊசியில் நூலை இவ்வாறு சேர்க்க என் கண்களுக்குப் பார்வை கொடு என்றார். இதனைக் கேட்ட சிவன் மகிழ்ந்து, கூடுதலாக ஒரு கண்ணைக் கொடுத்தார். இவ்வாறு கிடைத்த கண்ணைப் பார்த்த தேவர்கள் அனைவரும் பயந்து போயினர். பக்தர்கள் அனைவரும் சிவபக்தர்களைச் சரணடைந்து அவர்களுக்கு

வேண்டியதைச் செய்து கொண்டிருந்தனர். தூய்மைப்படுத்துவது. மடத்திற்கு வேண்டிய வேலைகளைச் செய்வது போன்றவையே அவை. 18 யோக பீடங்கள் இவருக்குக் கப்பம் கட்டிக் கொண்டு வந்தன. இவரது புகழைக்கேட்டு, ஜகதேகமல்லன் என்பவர் அவர்மீது வெறுப்போடு சிறிய தேவர்கள் அனைவரையும் வேலை வாங்குவது அதிசயமா? சிவன் அருளாலே அவருக்குக் கண் வந்தது என்பது உண்மையானால் விஷ்ணுவை நேராகப் பார்த்து பயப்படாது இருப்பாரா என்று பார்ப்போம் என்று கூறி, கல்யாணபுரம் என்ற ஊரின் நடுவிலே விஷ்ணுவின் சிலையை உலோகத்தால் செய்கிறார். அதன் மீது பஞ்சலோகத்தினாலாகிய பூச்சு பூசி, அதனைப் பிரதிஷ்டை செய்து, இரவும் பகலும் பூசை செய்யும்படி ஏற்பாடு செய்தார். அந்த இடத்திற்கு சங்கரதாசு சிவபக்தரோடு வந்தார். அவரது மூன்றாவது கண்ணைப் பார்த்தவுடனே விஷ்ணுவின் சிலை உடைந்து தூள்தூளாயிற்று. அந்த உலோகம் கரைந்து போயிற்று. சிவபக்தர்களல்லாதவர்கள் பயந்து ஓடிப் போயினர். இவருடைய மகிமை சிவனுக்கு மட்டுமே தெரியும். இருக்கிற மதியும் கெட்டுவிட்டது போன்று உனக்கு இவ்வாறு கூறும்படி ஆகிவிட்டதே. எங்களுக்குத் தீங்கு நீதான். நாங்கள் உங்களுக்கு சமமாவோமா? நீங்கள் இதுபோலச் செய்யலாமா? நீங்கள் இங்கு வருகை புரிந்ததற்கு என்ன காரணமோ? இது போன்ற பக்தி, பயம் மற்றவருக்கு இருக்குமோ? நீங்கள் ஏதேனும் கொடுத்தால்தான் எங்களுக்கு வாழ்க்கை. உங்கள் செல்வமெல்லாம் எங்கு போயிற்று? எனக் கேட்டனர். அந்த மண் வெட்டியை எடுத்துக் கொண்டு வா. இங்கு தோண்டு. இங்கு செல்வம் இருக்கிறதா? என்று பார்ப்போம் என்றார். எல்லோரும் அதிசயப்படும்படி, அந்த இடத்தில் சுத்தமான தங்கம் கட்டியாக வெளிவந்தது. அனைவரும் அந்த அற்புதத்தைப் பார்த்துக் கொண்டிருந்தனர். தேடராசு, துக்களவ்வா, இருவரும் சங்கரதாசுவின் பாதத்தின்மீது விழுந்து வணங்கினர். அவர்களைத் தூக்கித் தனது கருணைக் கடலில் மூழ்கடித்தார். பக்தர்கள் அனைவரும் இவரைப் புகழ்ந்து பாராட்டினர் தேடரதாசய்யா முன்பிருந்த செல்வங்களைவிட அதிக செல்வம் பெற்று வாழ்ந்து வந்தார். கர்வமில்லாத பக்தி கொண்டிருந்தால் சகல செல்வங்களும் பெறலாம் என்று மாச்சய்யா, பசவய்யாவுக்குக் கூறினார்.

நிம்மவ்வா என்ற பெண் பக்தையொருவர் இருந்தார். இவர் விரசைவ விரதங்களைக் கடைப்பிடிப்பவர். இவர் சிவபக்தர்கள் வீட்டிற்கு பூசை சாமான்களைச் சுமந்து செல்வதனைத் தொழிலாகக் கொண்டவர். பக்தர்கள் வீட்டிலிருக்கின்ற பசுவை வைத்து, அதனை விருத்தி செய்து, அதில் கிடைக்கும் வருமானத்தில் சங்கமர்களுக்குப் பணிவிடை செய்து வாழ்ந்து வந்தார்.

### சிரியாளன் கதை

காஞ்சி என்ற பெயருடைய பட்டினத்தில் சிரியாளன் என்பவர் இருந்தார். இவர் தினந்தோறும் ஐந்து பேருக்கு (சங்கமர்) வேண்டிய உணவைக் கொடுத்து, மற்ற பொருள்களைக் கொடுக்கிற விரதத்தையும் கடைப்பிடித்து வந்தார். சிவன் சிரியாளனுடைய பக்தியின் ஆழத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று நினைத்து ஒரு போலிச்சாமியார் வேடத்தில் வந்தார். சிரியாள செட்டி அம்முனிவனைப் பார்த்து அவரது பாதங்களை வணங்கி, சுவாமி! எங்கள் வீட்டிற்கு நீங்கள் வரவேண்டும் என்று வேண்டினார். அப்பொழுது அந்த முனிவர் என் விருப்பத்தினை நிறைவேற்ற முடியும் என்றால் நல்லது. அதனைத் தவிர வேறு விருப்பம் என்ன இருக்கிறது? என்று கூறி, சிரியாளனிடம் எனக்கு நரமாமிசம் வேண்டும் என்றார். அதற்குச் சிரியாளன், உங்களுக்குப் பிடித்தமான எல்லா லட்சணங்களும் பொருந்திய மகன் ஒருவன் எனக்கு இருக்கிறான். நரமாமிசத்திற்காக மற்றவர் வீட்டிற்கு நான் போகவேண்டுமா? எங்குமே இல்லாத விரதத்தை நீங்கள் கொண்டிருக்கிறீர்கள். அந்த விரதத்தினை நான் இப்பொழுதே நிறைவேற்றுகிறேன் என்று அவரை வீட்டிற்கு அழைத்துச் சென்றார். பின், தன் மனைவியிடம் சாமியாரின் விரதத்தினைப் பற்றிக் கூறினார். அவரது மனைவியான சங்களவ்வா, நீங்கள் ஏன் பயப்படுகிறீர்கள்? என்று பள்ளியில் படித்துக்கொண்டிருந்த மகனை அழைத்து வந்து, நம் வீட்டில் இன்று பண்டிகை நாள் என்று கூறினாள். அவனை மிகவும் அழகுபடுத்தி, தாய், தந்தை இருவருமே நிறைந்த உள்ளத்தோடு அவன் உயிரைப்போக்கடித்து, அதனைக் கொண்டு சமையல் செய்து விதவிதமாகச் சமைத்து, மக்கள் யாருக்குமே தெரியாதபடி செய்து, அந்த சாமியாரை அழைத்து

அவரது பாதங்களை அபிஷேகம் செய்து, பாத நீரை பயபக்தியோடு குடித்து ஒரு ஆசனத்தின் மேல் அமரச்செய்து உணவினைப் பரிமாறினார்கள்.

தபசி, அவருக்குப் பரிமாறிய உணவைப்பார்த்து, தலைக்கறி இல்லாது போகவே, தலையை வைத்துக் கொண்டு, அதன் மூலமாக மகனைப் பார்த்துக் கொள்ளலாம் என்று நினைத்து, தலையை மறைத்து வைத்திருக்கிறீர்கள்? தலைமாமிசம் இல்லாது என் விரதம் முழுமையடையுமா? வேதத்தில், 'உடலின் எல்லா பாகங்களையும் விட தலையே பிரதானம்' என்று கூறியிருக்கிறார்களே! என்று கூறினார்.

உடனே, கணவனும் மனைவியும் பயந்து மகாத்மா! நீங்கள் இவ்வாறு கூறலாமா? முடியோடு இருக்கும் அதனைச் சமைத்தால் நன்றாக இராது என்று எண்ணி அதனைத் தவிர்த்து விட்டோம். சந்தனங்கா என்ற எங்கள் பணியாள் அதனைச் சமைத்து இருக்கிறாள் என்று கூறி, அம் மாமிசத்தை அவருக்குப் பரிமாறினார்கள். அப்பொழுது கழுத்தில் கறையுள்ள சிவபெருமான் கடைக்கண்ணிலே பார்த்து, உன்னைப்போல் பணிசெய்கிற யாரும் இவ்வாறு விருந்து செய்ய மாட்டார்கள். ஈடேயில்லாமல் எனது விருப்பத்தினை நிறைவேற்றியிருக்கிறாய். வலப்புறம் நான் அமர, இடப்புறம் நீர் அமர்ந்து ஒரே பந்தியில் சாமி பிரசாதம் சாப்பிடாவிட்டால் எனக்கு விருப்பமில்லை. நாங்கள் பெற்றெடுத்த மகனை எவ்வாறு நாங்கள் சாப்பிடுவோம் என்று நீங்கள் நினைத்தால் நான் போய் விடுகிறேன் என்று கூற, சிரியாளன் பயந்து மனைவியைப் பார்த்து, நீ எதற்காகத் தயங்குகிறாய்? இங்குவா என்று கூறினார். மனைவியும் வந்து உணவு பரிமாறினார். அப்பொழுது முனிவர் வீட்டில் உள்ள பிள்ளைகள் அனைவரும் சேர்ந்து உணவு உண்பது தானே விருந்துண்ணும் முறை? உங்கள் மகன் எங்கே? மகனில்லாத வீட்டில் உணவுண்ணுவது தகாத செயலாகும். மகனிலாதவர்க்கு மோட்ச கதியே இல்லை என்று வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மோட்ச பாக்கியம் இல்லாத வீட்டில் முனிவர்கள் உணவுண்பார்களா? அதனால், மகன் இருந்தால் அழையுங்கள். இல்லையெனில், இந்த வீட்டில் தண்ணீரும் அருந்தமாட்டேன், என்று கூற, சிரியாளன் தன் உடம்பெல்லாம் நடுங்க,

அவனை வணங்கி சுவாமி! நீங்கள் சொல்வது உண்மைதான் பையன் இருக்கிறான் எங்கோ படித்துக் கொண்டோ அல்லது விளையாடிக்கொண்டோ இருப்பான். உங்களுடைய பிரசாதத்தினை அவன் அப்புறமாக வந்து சாப்பிடுவான். நீங்கள் இந்த பதார்த்தத்தினை சூடு நீங்கும் முன்பு சாப்பிடுங்கள் என்று அவரை வேண்டினார்.

அப்பொழுது அந்த சாமியார் சிரியாளனின் மனைவியைப் பார்த்து. உன் பையனைக் கூப்பிடக்கூடாதா? தாய் கூப்பிட்டால் பிள்ளை வராமல் இருப்பானா? உன் மகன் இருக்குமிடத்திற்குச் சென்று சத்தமிட்டு அழை. நான்கு திக்கும் கேட்குமாறு அழைப்புவிடு, எப்படி வராது இருப்பான் என்றார். உடனே, அவருடன் வாதம் புரிய வேண்டாம் என்று நினைத்து கிழத்திசை நோக்கி நின்று முனிவர் கூறியபடி. சத்தமிட்டு மகனை கூப்பிடத்தொடங்கினார்.

பூர்வ ஜன்மத்தில் நான் செய்த பாவங்களைப் போக்கடிக்கிற மகனே வா! யமனின் கர்வத்தைப் போக்கடிக்கிற பிள்ளையே வா! பிறப்பு. இறப்பு என்ற துக்கத்தைப் போக்கடிக்கிற பிள்ளையே வா!, வடக்கு திசையை ஆள்கிற யோகேந்திரனாகிய சிவனின் மனத்திற்குப் பிடித்த மகனே வா! இன்று சுவர்க்கப்பதவி கிடைக்கப்போகிறது. வாஸ பாசம் என்ற பந்தத்தை விலக்கக்கூடிய மகனே வா! யமனுக்கு யமனாக இருக்கிற யோகேந்திரனாகிய தவம் செய்கிற முனிவர் மகிழ்ச்சி அடைய மகனே வா! வாழ்க்கைக் கடலைத் தாண்டும்படி செய்த மகனே வா! மோட்சம் என்ற பெண் அடையும்படியான பக்த சிகாமணியே வா! உன் தந்தையின் வலது புறம் துடிக்கிறது வா! சூரியன் மேற்குத்திசையை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறான் வா! சிவனிடம் பிரசாதம் வாங்க வேண்டும் சீக்கிரமாக வா! காதிலிருக்கும் குண்டலம் அசைய, தலையில் முடி அசைய, மணி (கொலுசு) சத்தமிட மோட்சம் என்ற பெண் வருவது போன்று அப்பையன் வர. முனிவர் பார்க்கிறார். தந்தை மகிழ்ச்சியில் பூரித்துப்போகிறார். தாய் இரு கைகளையும் நீட்டி அழைக்க மகன் ஓடி வருகிறான். சிவன் காட்சியளித்து நிற்கின்றார். சிரியாளன், மனைவி. மகன். அனைவரும் தரைமீது விழுந்து வணங்குகிறார்கள். கனவு கண்டு எழுந்தது போன்று தோன்றியது. மகா விஷ்ணு,

பிரம்மா, தேவேந்திரன், அனைவரும் வாழ்த்துச் சொன்னார்கள். சந்தனங்கா என்ற பணிப்பெண், உறவினர்கள் மற்றும் காஞ்சியைச் சேர்ந்த ஏழுதெரு சுற்றத்தார்களையும் கைலாயத்திற்குப் பொன் விமானத்தில் சிவன் அழைத்துச் சென்றார். அங்கு சிவனருகில் அமர்ந்திருக்கும் சிரியாளன் அங்கிருக்கும் தேவர்களைப்பார்த்து, பூலோகத்திலே மகனைக் கொன்று, சிவனருளாலே மீண்டும் மகனைப் பெற்று, கைலாசபதவியை அடைந்தவர்கள் யாரேனும் இருக்கிறார்களா! என்று கர்வம் அடைய சிவன் இதனை அறிந்து சிறுத்தொண்டரே! வா! என்று அழைத்து, நிம்மவ்வா என்ற அம்மையின் முன் இருவரும் நின்றார்கள்.

## நிம்மவ்வா கதை

நிம்மவ்வா மிகுந்த மகிழ்ச்சியோடு அவர்களின் திருவடிகளில் விழுந்து அபிஷேகம் செய்து, சங்கமர்களுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகள் அனைத்தையும் அன்போடு செய்தாள். சிவன், சிரியாளன் இருவரும் மிகுந்த களைப்பில் வந்ததால் தூங்கிக் கொண்டு இருப்பது போன்று பாவனை செய்கிறார்கள். அப்பொழுது நிம்மவ்வா, பூசை சாமான்களைக் கொண்டு வாசசெல்கிறாள். அப்பொழுது பசுக்களை எல்லாம் மேய்த்துவிட்டு அவள் மகன் பசியோடு வருகிறான். வீட்டிற்கு வந்து அம்மாவை அழைக்கிறான். அங்கு அம்மாவைக் காணாது, சுற்றிப் பார்க்க ஒரு வடை தென்படுகிறது. அதனை எடுத்து சாப்பிட்டுக் கொண்டேயிருக்கிறான். அப்பொழுது அங்கு நிம்மவ்வா வருகிறாள். மகன் வடையைச் சாப்பிடுவதனைப் பார்த்து, நாயே! சிவனுக்கென்று வைத்திருந்த வடையை எடுத்துச் சாப்பிட்டு விட்டாயே? இதனால் சிவதுரோகம் வந்துவிட்டதே என்று கூறி, விறகால் பையனின் தலையில் அடித்துக் கொன்று விட்டாள். உயிரில்லாத மகனைத் தரதரவென இழுத்து, மகனின் இறப்பு யாருக்குமே தெரியாதபடி செய்து, காடியில் அதனைப்போட்டு அதன் மீது புல்லைப்போட்டு மூடி, ஒன்றுமே அறியாதது போன்று சமையல் வேலை செய்து கொண்டிருந்தாள்.

சிவன் இதனை அறிந்து கொண்டு சிறுத்தொண்டா! இந்த விசித்திரத்தைப் பார்த்தாயா? தன் மகன் அறிந்தும் அறியாமலும்

செய்ததனை நினைக்காமல், தன் சொந்த மகனென்றும் பாராது, கொன்று விட்டாள் பார்த்தாயா? என்று சிவன் தன் கால்விரலால் புல்லை எடுத்து சிரியாளனுக்குக் காட்டுகிறார். உடனே, சிரியாளன் ஆச்சரியப்பட்டு அப்படியா! என்று தலையசைத்தார். சமையல் முடிந்த பிறகு நிம்மவ்வா அவர்களுக்கு ஸ்நானம் செய்து. பூசை செய்து. உணவு பரிமாறத் தொடங்குகிறாள்.

சாப்பிடும்போதே. சிவன் நிம்மாவாவிடம். பெண்ணே! உன் மகன் இதற்கு முன் மிகுந்த பசியோடு இங்கு வந்து உன்னைத் தேடிவிட்டு எங்கோ சென்றான். எப்படி இருக்கிறானோ! மிகுந்த சோர்வோடு இருப்பானோ! கருணையே இல்லாத பெண் போன்று இருக்கிறாயே! சாப்பிட கை எழவில்லை வீட்டில் சிறுபையனை வைத்துக்கொண்டு யாராவது சாப்பிடுவார்களா! அவனை விட்டுவிட்டு. எங்களுக்கு ஏன் பரிமாறினாய்? தடையில்லாது அந்த மகனைக் கூப்பிடு! என்று கூறினார்.

உடனே. நிம்மவ்வா. "இவள் சாதாரண பெண் தானே என்று நினைத்து பேசுகிறாயா? உன் மாயமெல்லாம் நான் அறிவேன். நான் பயந்தவள் அல்ல. ஏன் கதைத்துக் கொண்டு இருக்கிறாய்? என்னைப் பார்த்து சிரியாளன் என்று நினைத்தாயா? சாப்பிடாமல் இங்கிருந்து செல்ல முடியாது பையனைக் கொன்றுவிட்டு திரும்பிக் கூப்பிடுவதற்கு எனக்குத் தெரியாது என்று நினைத்தாயா? நீ கொடுக்கும் கைலாசபதவி எனக்கு வேண்டாம். அவன் செய்த துரோகத்தினால் அவன் அழிந்தான். மீண்டும் அந்தத் துரோகியை அழைக்கலாமா? அவனைச் சந்திக்கலாமா?" என்றாள்.

சிரியாளன் இதனைக்கேட்டு. சோகக்கடலில் மூழ்கினார். தலைகுனிந்து. வெட்கப்பட்டு. சிலைபோல நின்று விட்டார். சிவபெருமானின் மீது கொண்டுள்ள தூய்மையான பக்திக்கு மகிழ்ந்து. எமனுக்கு எமனான சிவபெருமான் சுயரூபம் எடுத்தார். இதுபோன்று செல்வது நன்றாக இருக்கிறதா? சிறிய குழந்தை பால் வேண்டுமென்று கூறி அழுது கொண்டிருப்பான். தாய் அதன் கையிலே எதாவது கொடுத்து தப்பிக்க நினைப்பாள். அதுபோல் இந்த இடத்திலிருந்து நீ தப்பிக்க நினைக்கிறாயா? இந்தச் சரீரத்தில் உயிர் சேர்ந்து

இருக்கிறது. உயிர் உடல், உடல் உயிர் இரண்டிற்கும் இணைப்பு இருக்கிறது. இது இல்லாமல் அது இல்லை. அது இல்லாமல் இது இல்லை. அதுபோல சங்கமர்கள் சிவனுக்கு ஒப்பானவர்கள். சிவனே பக்தர்கள், பக்தர்களே சிவன். எதற்காக இது போன்று வேறு பார்க்கிறாய்? தாக்குறைவாக எப்பொழுதாவது உன்னைப் பார்த்திருக்கிறேனா! மூன்று கண் உள்ளவர் சிவரூபத்தில் இருந்தாலும் மனிதரூபத்தில் இருந்தாலும் சிவபக்தர்கள் உயர்ந்தவர்கள் அல்லவா? இது போன்று ஏன் வருத்தப்படுகிறாய்? பயப்படாதே! "குண்டய்யா இளமையை அடைவதற்காக எந்த வேஷத்தில் போனாய்? கூறு! போகய்யா வீட்டிற்குச் சென்றபோது எந்த கௌரியுடன் சென்றாய்? தாசய்யாவிடம் வஸ்திரதானம் அடைவதற்காக எந்தச் சரஸ்திரனை அணிந்து போனாய்? மானக்கஞ்சாறன் வீட்டிற்கு எந்த நந்தி ஏறி நீ சென்றாய்? உன்னுடன் இப்பொழுது வந்திருக்கிறானே இந்த சிறுத்தொண்டன் வீட்டிற்கு எந்த நான்கு கைகளோடு போனாய்? அதனால், உன் விளையாட்டுக்களை விட்டுவிடு. உன் அற்புதங்கள் எல்லாம் எனக்குத் தெரியும். நீ இப்பொழுது சாப்பிட்டு விட்டுத்தான் செல்ல வேண்டும். உன் மீது ஆணை! என்று வற்புறுத்தி கூறியவுடன் சிவன் புன்னகைத்து, சரி! அப்படியே ஆகட்டும் என்று கூறி, உணவு பரிமாறிக்கொண்டிருக்கும்போது, சிரியாளனை பார்த்து பக்தியோடு இல்லாவிட்டால் அவர்கள் நண்பர்களாயினும் பெற்ற தந்தையாயினும் கொல்லுவது முறையாக இருக்கிறது. மீண்டும் அவர்களை சிவனருளால் உயிரோடு பார்ப்பதுவும் இருக்கிறது. அதுபோல நடந்தும் இருக்கின்றது என்று கூறினார்.

## நரசிங்க நாயனார் கதை

நரசிங்க முன்னயா நாயனார் என்பவர் இவ்வுலகத்தில் எனக்குச் சிறந்த சிவபக்தன். அவருடைய பட்டமகிஷி அவ்வூரிலுள்ள சிவாலயத்தில் சிவனைத் தரிசிப்பதற்காகச் சென்று கொண்டிருக்கும்போது, அங்கு பூசைக்காக வைத்திருக்கும் பூவை முகர்ந்து பார்க்க, அங்கிருக்கும் பூசாரி (பிரம்மச்சாரி) அந்த அம்மையின் மூக்கினை அறுத்து விட்டார். அந்த இடத்திற்குச் சோழ மன்னன் வந்தார். பட்டமகிஷியின் தோழியர் மன்னனை வணங்கி,

மன்னவா! பட்டமகிஷி ஒரு தவறும் செய்யவில்லை. பூசைக்காக இருக்கிற செங்கல்வமலரை முகர்ந்து பார்க்க, பூசாரி மூக்கை அறுத்து விட்டார் என்றனர். உடனே, மன்னன் பூசாரியை அழைத்து, அவரை மார்போடு அணைத்து, உன் பக்தி இவ்வளவுதானா? உன்னுடைய விவேகமெல்லாம் என்ன ஆயிற்று? பூவை முகர்ந்து பார்க்க எடுத்த கையை முழுவதுமாக முதலில் வெட்டிவிட்டு, அதற்குப் பின்னர்தானே மூக்குவரை செல்ல வேண்டும்? என்றார். பின் மனைவியை அழைத்து, பூசைக்காக வைத்திருந்த பூவை எடுத்தாயே!. அந்த கை எங்கே? பூவை எடுப்பதற்காக, கையை எவ்வாறு நீட்டினாயோ அவ்வாறு இப்பொழுது நீட்டு என்று கூறினார். முதலில் தொட்ட விரலை நறுக்கினார். பிடித்த மணிக்கட்டினைக் காட்டு, கையை நீட்டுவதற்குச் சென்ற புலத்தினை நீட்டு என்று கூறி, அவற்றை வெட்டி கொஞ்சமும் தயக்கமின்றி, துண்டு துண்டாக்கினார். அப்பொழுது சிவன் துண்டு துண்டாக விழுந்து கிடக்கிற பெண்ணின் கையையும் மூக்கையும் கொடுத்து, மன்னனுக்கு எப்பொழுதும் தன் அருகே இருக்கும் படியான மோட்சத்தினை அருளினார். மக்கள் அனைவரும் அவரை அதிசயமாகப் பாராட்டத் தொடங்கினர்.

சிவபெருமான் நிம்மவ்வா பக்திக்கு மகிழ்ந்து உனக்கு என்ன வேண்டும் கேள் என்று கூறினார். ஆனால் அந்த அம்மை ஒன்றும் கேட்கவில்லை. தன் மனத்தில் சிவன் மீது அதிக பக்தி கொண்டிருந்த காரணத்தினால் மகனைக் கொன்றாள். மகனையும் திருப்பிக் கேட்கவில்லை. இவளின் பக்தியின் மகிமையை என்னவென்று புகழ்வது? நான் கேட்டதால்தான் உன் மகனைக் கொன்றும் திரும்பக் கூப்பிட்டாய். நிம்மவ்வா! அவ்வாறும் அப்படி இருக்க நான் தான் பெரியதாக ஒன்றும் செய்யவில்லை. நான் பெரிய பக்தர் என்று கூறுவது சரியா? என்று பக்தர்கள் மீது அன்புகொண்ட சிவன் கூறினார். பின்பு, நிம்மவ்வாவின் மகனுக்கு உயிர் கொடுத்து கைலாயத்திற்கு அனுப்பி வைத்தார். சங்கமர்களுக்கும் பூசை செய்வதுதான் நான்கு வேதங்களைக் காட்டிலும் சிறந்தது என்று நிம்மவ்வா இவ்வுலகிலேயே இருந்து விட்டார். நல்ல காரியங்களைச் செய்யும்போது கர்வம் இருக்கக்கூடாது. அகங்காரம் இருக்கும்போது

பக்தி நிலையானதாக இருக்காது. என்று சிவன் சிரியாளனை விடாது அழைத்துச்சென்றார்.

## அலாயுதன் கதை

சிவன், சிரியாளன் இருவரும் பக்தர்களின் வேடத்தில் அலாயுதன் இருக்கும் ஊருக்குச் சென்றார்கள். அலாயுதன் பக்தியோடு அவர்கள் இருவருக்கும் வணக்கம் செலுத்தி. அவர்களுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்தார். இவ்வாறு அவர்களைத் திருப்தி செய்து. அவர்களிடம் பேசிக்கொண்டிருக்கும்போது. எவ்வளவு தொலைவில் இருந்து நீங்கள் வந்திருக்கிறீர்கள்? எனக் கேட்டார். உடனே. இவர்கள் இருவரும். இவ்வுலகத்தில் சங்கமர்கள் எங்கெங்கு இருக்கிறார்களோ அவர்களுடன் சேர்ந்து பக்தர்களைப் பார்ப்பதற்காகச் சென்று கொண்டிருக்கிறோம். பக்தர்களும் சிவனைப்போலவே நினைத்து அன்போடு உபசரிக்கின்றனர். திருநீலகண்டன். வரகுண்டபதி, கரிகால் சோழன். நரியம்ம மன்னன். எலய தங்குளி மாறன். ஏனாதி நாதன். சேதி மன்னன். வாகீசநாயனார், சோம சொவபசைய்யா, சோமாசிமாறன். பிள்ளை நயினார் இதுபோன்ற பக்தர்களிடம் நாங்கள் ஆராதனையைப் பெற்றவர்கள். இதுபோல இந்த உலகத்தில் நாங்கள் செல்லாத பக்தர்கள் வீடே கிடையாது. எங்களுக்குத் தெரியாத பக்தர்களே இவ்வுலகத்தில் இல்லை. எங்களது நாட்கள் பக்தர்களின் அன்பினாலே மதிப்புடன் கழிந்தது. எங்களது வாழ்க்கை யாராலும் கடைப்பிடிக்க முடியாத அரிய தன்மையது. நாங்கள் பிறந்து வளர்ந்தது. நிராலபுரம் என்பதாகும். இந்த உலகத்தில் தாய் தந்தையரை யாம் அறிவோம். என்ன சொல்லுவது? நிம்மலவ்வா என்னைக் குழந்தைபோல தூக்கி வளர்த்து பாலூட்டியதாலே நான் பெரியவனானேன். கெம்பாவி போகய்ய செட்டி என்பவரால் இந்த உலகத்தில் நடக்கக் கற்றுக்கொண்டேன். நம்பியின் மூலமாக படிக்க. எழுதக் கற்றுக்கொண்டேன். சென்னய்யாவின் தோழமையினாலே சாப்பிடுவதற்குரிய பணத்தினைச் சம்பாதிக்கக் கற்றுக்கொண்டேன். தாசய்யா என்பவராலே துணிகள் உடுத்தக் கற்றுக்கொண்டேன். மானக்கஞ்சாறன் என்பவர் தலையில் பின்னலிட்டார். பல்லகன் என்பவர் தன் பெண்ணை எனக்குக் கொடுத்தார். பெண் கொடுத்தற்காக பணம் கொடுக்க வேண்டியதால் மொன்னய்யதருடு மான்யம்

வழங்கினார். கைலாசத்தில் அந்தப் பெண்ணோடு சுகபோக வாழ்க்கை நடத்தி வந்தோம். திரும்பவும் பயணமாகி வந்து கொண்டிருக்கும் போது. சிரியாளன் வீட்டில் மகனைக் கண்டோம். என்னுடைய இன்பதுன்பங்களை உன்னைத் தவிர யாருக்குச் சொல்லப் போகிறேன்? ஒரு அதிசயம் சொல்லப் போகிறேன் கேள். நான் பார்த்துக் கொண்டிருக்கும்போதே. அந்த சிரியாளன். தன் மகனுடன் கைலாயத்திற்குச் சென்றார். சிரியாளன் என்ற சிறுத்தொண்டனுக்குச் சமமானவர்கள் எங்காவது இருக்கிறார்களா? சிவன் சிரியாளனின் பக்தியைப் பரீட்சை செய்து. தன்னுடைய சேவகர்களைப் பக்தர்கள் வேடத்தில் அவர்கள் வீட்டிற்கு அனுப்பியவுடன் வந்தவர்கள் அனைவருக்கும் பக்தியோடு கரும்புச்சாறு மற்றும் வேண்டிய பொருட்களை எல்லாம் குறைவில்லாது கொடுத்து சிவனைப் புகழ்ந்தார். அது மட்டுமல்லாது சிவன் 21 நாள் விடாதபடி மழை பொழியச் செய்தார்.

நாள் தோறும் சிவபக்தர்களுக்கு உணவு கொடுக்கிற விரதம் இருக்கும்போது. அந்தநேரத்தில் சிவன் தானே ஒரு முனிவர் வேடத்தில் வந்து. "பெற்றெடுத்த மகனை யாருக்கும் கொடுக்க முடியுமா? கர்வத்தோடு எந்தப்பேச்சையும் பக்தியினால் பேசலாம்" என்று சிவன் சிரியாளனைப் புகழ்ந்து பேசியவுடனே. 'சிவ சிவா' என்ன பேசவருகிறீர்களா? சிவன் மனிதனைச் சாப்பிடுகின்ற இராட்சசனா? தன் மகனை ஒரு விலங்குபோல நினைத்து கொல்லக்கூடிய பக்தஉறினனா இந்தச் சிரியாளன்? நீங்கள் மிகுந்த பக்தர்களானதாலே அலாயுதா கேள்! பழங்காலத்தில் மனைவிகளைக் கொடுத்த பக்தர்கள் கோடானுகோடி உண்டு. குழந்தைகளைக் கொடுத்து மீண்டும் பெற்றவர்கள் நூறுகோடி உண்டு. தங்களையே இறைவனுக்காய் அர்ப்பணித்தவர்கள் அநேகங்கோடி உண்டு. இப்படிப்பட்டவர்கள் இருக்கும்போது. இல்லையெனச் சொல்வது உனக்கு நன்றாய் இருக்கிறதா? சிவ பக்தர்களது மனதைப் பரீட்சை செய்வதற்காக அரிதான பொருள்களைக் கேட்டார். பக்தர்களும் அதனைப் பெரிதுபடுத்தாமல் மகிழ்வோடு கொடுத்தார்கள். இந்த உலகத்தில் பக்தி என்பது சிரியாளனின் தலைமேல் இருந்தா பிறந்து வந்தது? எந்த ஊரில் பார்த்தாலும் சிரியாளனின் புண்ணிய சரிதத்தைப்

பாடிக் கொண்டிருப்பார்கள். பாடல் மட்டுமல்லாது பதியமாகவும் காப்பியமாகவும் செய்து பாடிக்கொண்டிருப்பார்கள். நாடகமாய் எழுதியது மட்டுமல்லாது நடித்தும் உள்ளனர். வீடுகளிலும் தினமும் பாடப்பட்டு வந்திருக்கின்றது. நாட்டுப்புறப் பாடல்களாக விடியவிடியப் பாடிக் கொண்டிருப்பார்கள். இதில் சந்தேகப்படுவதற்கு எதுவும் இல்லை என்று சொன்னவுடன் அலாயுதனுக்கு அதிகமாகக்கோபம் வந்து, சிவன் எப்படி சிரியாளனின் மகனைக் கேட்டார்? சிரியாளனும் தன் மகனின் மாமிசத்தை எவ்வாறு பரிமாறினார்? பக்தர்களைக் காப்பாற்றுபவர் பக்தனை எவ்வாறு விழுங்கினார்? ஒரு பக்தர் இன்னொரு பக்தரை எவ்வாறு கொன்றார்? இந்த வெட்டிப் புகழுக்கா ஆசைப்பட்டு இவ்வாறு செய்திருப்பார். பக்தர்கள் யாருக்காவது நரமாமிசத்தைப் பரிமாறுவார்களா? அவரைப் பரீட்சை செய்ததில் தவறு ஒன்றும் இல்லை. சிவன் கூர்மையான புத்திசாலியாய் இருந்ததால் அப்பொழுதே சிரியாளனுக்கு வரம் கொடுத்திருக்க வேண்டும். புத்திரன் மீது அன்பிருக்கிறதா? என்றால் அதுவும் இல்லை. உண்மையான பக்தனாய் இருந்தால் தன் உயிரைக் காப்பாற்றிக்கொண்டு மகன் உயிரைக் கொடுத்திருப்பாரா? மகனாய் இருந்தாலும் அவன் சிவபக்தன் அல்லவா? சிறிதும் தயங்காது அவனது உயிரைப் போக்கடிக்கலாமா? அருகிலுள்ள வீடு நெருப்புப்பற்றினால் நம் வீடும் தீப்பற்றிக் கொள்ளும். சிவனுக்கு நரமாமிசம் தவிர மற்ற சாப்பாடு சாப்பிடப் பிடிக்காதா? இல்லை தொண்டையில் செல்லாதா? இது நன்றாகத்தான் இருக்கிறது. ஈசுவரன் மீது இவ்வளவு பக்தி கொண்டிருப்பவன் சிவனுக்குத் தன்னையே ஏன் இரையாகக் கொடுக்கக்கூடாது? இது பக்த உறிம்சை அல்லவா? மகனைக் கொன்று விட்டு என்னை ஏமாற்றினாய் என்று கூறுவதற்குப் பயந்து இறந்த குழந்தையை அப்பொழுது ஏன் அழைத்தார்? குழந்தையை அப்பொழுதே உனக்கு சமைத்து விட்டேன். இப்பொழுது ஏன் அழைக்கச் சொல்லுகிறாய் என்று சிரியாளன் கூறியிருக்கலாமல்லவா? இதுபோல வந்து கேட்டு, அந்தப்பையனை சிவன் சாப்பிடவில்லை. பக்தனை விழுங்குவதற்காக வந்த மிகப்பெரிய கொடுமையான ராட்சசன் சிவன். பக்தனைக் கொல்லுவதற்கு முயற்சி செய்கின்ற துர்மார்க்கன். இதனை ஒரு கதையாக எழுதிப் படிக்கிற

எண்ணற்ற மூடர்களை விலக்கி வைக்க வேண்டும் என்று சொல்லிக் கையில் இருக்கும் மணியை எடுத்து எல்லோருக்கும் அறிவித்தார்.

இதைப்பார்த்தவுடனே சிவன், சிரியாளன் இருவரும் பயந்து நடுங்கி, அலாயுதனின் கோபப்பார்வையைப் பார்க்க இயலாது பதுங்கிக் கொண்டனர். இதயம் அடித்துக்கொண்டது. அவர்களைப் பார்த்து அலாயுதன் சங்கமர்களாய் இருப்பதனால் உங்களை நான் குறை சொல்ல மாட்டேன். இனிமேல் சிரியாளனையும், சிவனையும் பற்றி எங்கள் பக்தர்களிடம் மறந்தாயினும் பேசினால் நீங்கள் அவர்களோடு சேர்த்து விலக்கி வைக்கப்படுவீர்கள் என்கிறார். உடனே சிவன் பயந்து. பதில் கூறாது பார்வதியை நினைக்கிறார். பார்வதி பக்தி என்ற பெண் உருவம் எடுத்து வந்தாற்போல வந்தாள். அவளுடன் சங்களவ்வாவும் சங்கம வேடத்தில் வந்தார்கள். அலாயுதன் அவர்களைப் பார்த்து வணங்கி, அவர்களுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளைச் செய்தார், பிரம்மா. விஷ்ணு ஆகிய இருவரும் தங்கள் மனைவியரை ஒருவர் முகத்திலேயும், மற்றொருவர் இதயத்திலேயும் வைத்திருக்கின்றனர். அப்படி இருந்தும் அவர்கள் தங்களுக்கு யார் பிடித்திருக்கிறதோ, அவர்களைத் தேடிச் செல்கிறார்கள் அவர்களின் குணத்தைப்பற்றி என்ன கூறுவது? தன் கணவனைத் தவிர மற்றவர்களைக் கனவிலும் நினையாதவர் கௌரி என்றாள். பின்பு பார்வதி, அலாயுதனைப் பார்த்து நாங்கள் இருவரும் பரம பதிவிரதைகள். நாங்கள் இருவரும் சிவனை மனதில் நினைத்துக்கொண்டு இருப்பவர்கள். அலாயுதன், பக்தர்கள் எது கேட்டாலும் கொடுப்பான் என்று பேசிக்கொள்வதனைக் கேட்டு, நாங்கள் வந்தோம். எங்கள் கோரிக்கையைப் பூர்த்திச் செய்து எங்கள் ஆசிர்வாதத்தினைப் பெறுவாயாக! என்று அலாயுதனைப் புகழ்ந்து பேசினர். அலாயுதன் மகிழ்ந்து பக்தர்களுக்கு நான் சேவகன். இதுபோல் என்னைப் புகழ்ந்து பேசலாமா? உங்களுக்குப் பிடித்த பொருள் ஏதாயினும் இருந்தால் கேளுங்கள் என்றார். உடனே பார்வதி இவள் சிறுத்தொண்டன் மனைவி, நான் சிவனின் மனைவி, கணவனைப் பிரிந்திருக்கிற பெண்களுக்கு பக்தி இருந்தும் சிறப்பு இல்லை. எனவே, கருணையோடு எங்களது கணவன்மார்களைப் பிச்சையாகக் கொடுத்து எங்களுக்கு சௌபாக்கியத்தைக் கொடு

என்று தாழ்மையாகப் பிரார்த்திக்கிறாள். சிறுத்தொண்டனின் மனைவியும் அலாயுதனை வணங்குகிறாள். அலாயுதன் சிவனுக்கும், சிரியாளனுக்கும் அபயம் அளிக்கிறார். உடனே, பிரம்மா, விஷ்ணு இவர்களுடன் சிவனும் தோன்றி தேவகணங்கள், ருத்ர கணங்கள் பக்தர்கள் அனைவரும் அவர்களைப் புகழ்ந்து கீர்த்தனை பாடுகிறார்கள். சிவனை நேரில் பார்த்தவுடன் அலாயுதன் கீழே விழுந்து கண்ணீரோடு வணங்குகிறான். முகமெல்லாம் கண்ணீரால் நனைந்து போயிற்று. மிகுந்த மகிழ்ச்சியோடு சிவன் அலாயுதனைக் கட்டியணைத்து அவருடைய பக்திக்கும் அவரது சாகசத்திற்கும் பாராட்டினார். நல்ல பிரகாசத்தைக் கொடுக்கிற அவர் ஆட்சிக்கு உட்பட்ட ஒம்பது பட்டினங்களையும் சேர்த்து கைலாயத்திற்குக் கொண்டு சென்றார். சிரியாளனின் கர்வத்தைப் போக்கடிப்பதற்காக சிவன் அலாயுதனின் பக்திச்சிறப்பை அனைவருக்கும் தெரியப்படுத்தினார். அகங்காரம் இருந்தால் பக்தி உயர்வைப் பெறாது.

## மிண்ட நாயனார் கதை

சத்பக்தியில் பெருமை வாய்ந்தவர் இவர். சங்கமர்களை ஆராதனை செய்கின்ற வேலையை மனதார ஏற்றுக் கொண்டவர். சிவனையே மனதில் வைத்துக் கொண்டவராதலால் தூய்மையான மனம் படைத்தவர். சேய்கொண்டா என்ற ஊரில் மிகுந்த பக்தியோடு மாதமாதம் சிவராத்திரி விரதத்தை மேற்கொண்டார். 12 வருடம் முடிந்து 13ஆவது வருடத்தின் இறுதியில் திருவாலூரில் இருக்கிற வால்மீகி நாதன் கோயிலில் சாகாரம் அணிந்து சிவபக்தர்களோடு கோபுரத்திற்குக் கீழ் அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்தார். அப்பொழுது உடைய நம்பி என்பவர் வால்மீகி நாதன் கோயிலுக்கு வந்து கொண்டிருந்தார். அவர் வரும்போது இருபுறமும் மக்கள் 'ஜெய ஜெய' என்று பாடிக் கொண்டே வந்தார்கள். கவிஞர்கள் பாடல், உரையாடல் கலந்து பாடிக்கொண்டே வந்தார்கள். இவர் கேட்டவர்களுக்கு கேட்டவைகளைக் கொடுத்து அங்கங்கே நின்று வந்து கொண்டிருந்தார். பொன்னால் செய்யப்பட்ட தடியைக் கையில் எடுத்துக்கொண்டு தள்ளாடியபடியே வந்து கொண்டிருந்தார். நாட்டியமாடிக்கொண்டு, தோழர்களுடன் நையாண்டி செய்துகொண்டு,

அகங்காரத்தில் யார் வந்தாலும் அவர்களை மதியாது, நம்பி பக்த கணங்கள் அனைவருடனும் சிவபக்தர்கள் யாரையும் வணங்காது நேராகக் கோயிலுக்குள் வந்து தனது மானியத்தை வாங்கிக் செல்வதற்காகக் கேட்டார். மிகுந்த கோபப்பட்டு, மிண்டநாயனார். யார் இவன்? பக்தர்களின் மகிமை தெரியாது இவன் போய்க் கொண்டிருக்கிறானே, வால்மீகிநாதன் சிவனுக்குத் துணையா? சிவன் கோபப்பட்டால் அவரைக்காப்பாற்ற முடியுமா? மகா பக்தர்கள் கூட்டம் கோபப்பட்டால் சிவனாலும் காப்பாற்ற முடியாது. மிகுந்த அகங்காரத்தோடு இருக்கிறான். கோயிலை விட்டு வெளியேற்றுங்கள் என்று கூறியவுடனே, அதனைக் கேள்விப்பட்டவர்கள் மிகுந்த ஆச்சரியப்படுகின்றனர். அங்கிருக்கும் பூசாரி அவரை வணங்கி, "சுவாமி! உமக்கு தெரியாதா! வால்மீகி தேவன் இவருடைய பக்திக்கு மகிழ்ந்தோ, பாராட்டியோ தெரியாது, தினமும் இவருக்கு மானியம் 100 பொற்காசுகள் தவறாது கொடுக்கிறார். மகன் என்று சொல்லி, செல்லமாகப் பார்த்துக் கொண்டு இருப்பார். தாசியின் வீட்டிற்குக் கூட இவரே, வேண்டிய பொருளெல்லாம் கொடுத்து அனுப்பி வைப்பார். சேவகனைப்போல் அவருக்கு என்ன வேண்டுமாயினும் செய்து கொண்டிருப்பார். சிவன், நம்பியிடம் விற்கப்பட்டு இருக்கிறார்.

இவர்தானா நம்பி! இவருக்காகவா, சிவன் மான்யம் கொடுக்கிறார். மிக நன்றாய் இருக்கிறது!, இவருடைய பக்தி நன்றாக இருக்கிறது. இவரது தோழமையும் நன்றாய் இருக்கிறது, நம்பியையும் சிவனையும் ஒதுக்கி வையுங்கள் என்று மிண்ட நாயனார் மணியடித்துத் தெரியப்படுத்தினார். அங்கிருந்தவர்கள் அனைவரும் ஆச்சரியப்பட்டு, பயந்து சென்றனர். அவையில் கூடியிருக்கும் பக்தர்களின் கோபத்தைக் கேட்டு பக்தரே நம் உருவமாகக் கொண்ட சிவன் நம்பிக்குத் தெரியப்படுத்துவதற்காக சிவன் நம்பியை ஐயா! என அழைக்க, ஏன் சுவாமி! என்று நம்பி கேட்டார். இருவரும் ஒருவரையொருவர் தழுவிக்கொண்டனர்.

உருவம் எடுத்து நடுங்கிக்கொண்டே வால்மீகி நாதர் உடைய நம்பியைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, பக்தர் சமூகத்தில் போகப் பயந்து, சப்தம் செய்யாது, மெல்ல மெல்ல அடிவைத்து

விளக்கின் ஒளி தம் மீது பட்டால் மற்றவர் பார்த்துவிடக்கூடும் என்று நினைத்து, பயந்து சப்தம் போடாது. மறைந்து சுவரை அடையாளமாக வைத்து நடந்து நகர்ந்து, பூந்தோட்டத்திற்கு அருகே சென்று யாரும் போகாத வழியில் போய் வெளியேறி விட்டனர். அந்தத்தெருவில் யாரேனும் வருகிறார்களா நம்மைப் பிடித்துக்கொள்வார்களா என்று பயந்து கோயிலுக்குப் பின் சென்று மறைந்து கொண்டு சில இடங்களில் வேகமாக ஓடி, காட்டிற்குள் சென்று, எப்பொழுதும் செல்லுகிற வழியைவிட்டு, வேறு வழியில் சென்று, அங்கு ஒரு குளத்தைக் கண்டனர். அங்கு நிறைய மரங்கள் இருந்தன. தூரத்தில் இருந்து பார்க்கும்பொழுது கோயில் போன்று தோற்றம் தருகிறது. குளிர்ந்த மரத்தடியில் சென்று, சிவன் அந்த மரத்தடியில் அமர்கிறார். பெருமூச்சு விட்டுக்கொள்கிறார். உடம்பெல்லாம் வியர்த்துக் கொண்டிருக்க, அதனைக் கையால் துடைக்க, கொஞ்ச நேரம் காற்று படும்படி ஓய்ந்திருந்தார். நம்பிக்கு அப்பொழுதுதான் கர்வம் குறைந்தது. பக்தி, பயம் சிவனிடம் தோன்றியது. ஐயா! இது என்ன? உன் உள்ளத்தில் பயம் வருவதற்கு என்ன காரணம்? என்று கேட்டார். அதற்கு வால்மீகி நாதர், வேத, வேதாந்த புராண சாஸ்திரங்களைப் பார்க்கும்போது, எனக்கும் பக்தர்களுக்கும் பேதம் எங்கும் சொல்லப்படவில்லை. பக்தனுக்கு நான்தான் உயிர். எனக்கு பக்தர்களின் உடல்தான் முக்கியமானது என் பக்தர்களுக்குச் சேவை செய்வது, என் திருவடிகளுக்கும் சேவை செய்வது போலவாகும். என் பக்தர்களின் உடல் என்னுயை உடல், என்னுடைய பக்தர்களைப் புகழ்வது என்னைப் புகழ்வது போலவாகும். என்னுடைய பக்தர்களை நிந்தை செய்வது, என் தத்துவத்தை நிந்தை செய்வது போன்றதாகும். சங்கமர்களுக்குப் பணி செய்யாவிட்டால் சிவபூசை செய்தாலும் பயன் இல்லை. வேதங்களிலும் இது போலத்தான் சொல்லப்பட்டிருக்கிறது. பக்தர்களுக்கு நான் அடிமை. பக்திக்காகத்தான் நான் இதுபோல செய்கிறேன். இது உலகோர் அறிந்ததே. அது எப்படியென்றால், வீரமாகேசுவா பக்தியிலே பாணன் என்ற பக்தன் இருந்தான். இலிங்க வடிவத்தில் இருக்கிற சிவனுக்கு முறைப்படி 1000 தடவை தினமும் நியமத்துடன் பூசை செய்து கொண்டிருந்தார். அவ்வாறு இருக்கும்போது, அவாது அன்றாட

காலைக்கடன்களைச் செய்யமுடியாது தவித்தார். அதனால் இறைவன் அவருக்கு ஆயிரம் கரங்களைக் கொடுத்தார். பின்பு, ஒரே முறையில் ஆயிரமாயிரம் பூசை செய்து கொண்டிருந்தார். உலகத்தில் இருக்கும் பக்தர்கள் அனைவரும் பாணனின் பக்தியைப் பாராட்டினர். மக்கள் இவருக்குச் சிவன் ஆயிரம் கரங்களைக் கொடுத்திருக்கிறார் என்று இவரைப்பார்ப்பதற்காக வந்து கொண்டிருந்தனர். இதுபோல சிவபக்தர்கள் வந்து கொண்டிருந்ததனால் இவர் பூசை செய்வதற்கும் சாப்பிடுவதற்கும் நேரமில்லாது இருந்தார். எனவே, பூசை செய்து பிரசாதம் சாப்பிடும்போது, நான் வாசலில் காவல் இருந்தேன். இது உலகத்தில அனைவருக்கும் தெரியுமல்லவா?

### பிட்டவ்வா கதை

அது மட்டுமல்லாது முதிகொண்ட என்ற ஊரிலே கரிகால்சோழன் காவேரிக்குக் கரை கட்டிக் கொண்டிருந்தார். ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொருவர் வெட்டி வேலைக்குச் சென்றனர். உனக்காக நான் செல்கிறேன் என்று பிட்டவ்வாவின் பக்திக்காக நான் வெட்டி வேலைக்குச் சென்றேன்.

### கலிக்காம தேவன் கதை

கலிக்காம தேவன் என்பவர் திருவாலூரில் இருக்கிற பக்தர்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறார். உடைய நம்பி என்பவர் சிவனுக்கு நோவு எடுக்குமே என்று பயப்படாது, எல்லா வேலையையும் செய்து வைத்துக் கொண்டிருந்தார். தாசி வீட்டில் எடுபிடி வேலை செய்ய பயன்படுத்தி இருந்தார். வேறு யாரையாவது செய்யச்சொல்லவேண்டும். அல்லது சிவனைச் செல்லாது இருக்க செய்ய வேண்டுமல்லவா? என்றார் கலிக்காமர். இவ்வூரைப்பற்றி யாராவது குறை கூறினாலோ அவர்களை நான் கொன்றுவிடுவேன் என்று கட்டளையிட்டார். அவரிடம் சென்று உங்கள் தாத்தாவிடம் எங்கள் தாத்தா கடன் வாங்கியிருக்கிறார். கடனை வருங்காலத்தில் தீர்த்து விடுகிறேன். அதனாலே கேட்கும்போது, பணம் கொடுப்பது இது போன்ற செயல்களைப் பக்தி காரணமாகச் செய்து கொண்டிருந்தேன். அதனால் என்னுடைய பக்தர்களிடம் கர்வத்துடன் பேச நீ யார்? பக்தர்களுக்கும் எனக்கும் மனதில் சங்கடம் ஏற்பட்டது.

நிறைய உதாரணங்களைச் சிவன் நம்பிக்குப் புரியுமாறு தெளிவாகத் தெரியப்படுத்தினார். பக்தர்களின் மகிமை, பெருமை, போக்கு இவையெல்லாம் அவருக்குத் தெரியப்படுத்தி, உண்மையான பக்தர்களின் வழியைத் தெரியப்படுத்தினார். உடனே, உடைய நம்பி, சுவாமி! என் உள்ளத்தில் இருக்கிற கர்வத்தை எல்லாம் நீ போக்கி, எனக்கு நல்வழி காட்டியதால் நான் புண்ணியம் பெற்றவன் ஆனேன். அதனால், இப்பொழுது நான் பக்தர்களிடம் சென்று அழுது, மன்றாடி, புகழ்ந்து பேசி, காலில் விழுந்து, சேவகனாய் இருந்து ஆடிப் பாடி, எப்படியாவது பக்தர்களின் கருணையை நான் அடைகிறேன். உனது மகனின் செயலை இனிமேல் பார். ஒவ்வொரு இடத்திலும் கீழே விழுந்து, பக்தர்களின் கதைகளைப் பாடவைத்து இசையோடு சேர்த்து எல்லோரிடமும் கூறுகிறேன் என்று சொன்னார்.

### எணுமூர்த்தி நாயனார் கதை

இவர் தனது பிராணலிங்கத்திற்கு மூன்று வேளையும் சுத்தமான சந்தனத்தைச் சமர்ப்பித்து வந்து கொண்டிருந்தார். சந்தனத்திற்காகத் தனது பொருள் அனைத்தையும் செலவழித்தார். இதனால் வறுமை வந்து சேர்ந்தது. எங்குமே சந்தனம் கிடைக்கவில்லை. அதற்காகப் பணமும் சம்பாதிக்க முடியவில்லை. செல்வத்தைப்பற்றி நினைப்பது எதற்கு? பக்தி என்பதுதான் செல்வம். மற்றவையெல்லாம் செல்வமா? பக்தி என்பது என் மனதில் இல்லாவிட்டால்தான் வறுமை வரும். உடலும் மனமும் இருக்கும்போது நான் பயந்தால் சிவன் என்னைப் பாராட்டுவாரா? அதனால் என் உடலையே சந்தனமாக அரைத்து சுவாமிக்குத் தினமும் சமர்ப்பிக்கிறேன். இரத்தம் வந்தாலும் பரவாயில்லை என்று கூறி, சந்தனம் உரைக்கும் கல்லை எடுத்து தனது வலது கையைச் சந்தனமாக அரைத்து சிவனுக்கு அர்ச்சனை செய்தார். உலகத்தில் இருக்கும் மக்கள் அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே அந்த உடலோடு கைலாயத்திற்குச் சென்ற எணுமூர்த்தி நாயனாரின் அடிமை நான்.

### கடமலநம்பி கதை

தனது பிராணலிங்கத்திற்குத் தினந்தோறும் ஆயிரம் விளக்குகள் ஏற்றிவைத்து வழிபடுவதனை ஒரு விரதமாகக் கொண்டிருந்தார்.

இவர். இதனால் இவரிடம் இருந்த பணம் அனைத்தும் செலவழிந்து விட்டது. உடல் தவிர பணம் எல்லாம் தீர்ந்து விட்டது. அதனால் இந்த உடலையே சுவாமிக்கு நிவேதனம் செய்கிற நேரம் வந்தாயிற்று தலையையும் உடலையும் எரித்து விளக்கேற்றுகிறேன் என்று தலையை எரிக்க முயற்சி செய்கிறார். அப்பொழுது சிவன் அதற்கு மகிழ்ந்து அவருக்கு மோட்சம் தருகிறார். அதுபோல மோட்சம் பெற்ற கடமலநம்பியின் அடிமை நான்.

### குக்குலு களயாரு நாயனார் கதை

இவர் தினமும் மூன்று வேளையும் தூபம் போடுவதை விரதமாகச் செய்து கொண்டிருந்தார். மனைவியின் மாங்கல்யத்தைக்கூட இதற்காகவே செலவு செய்தார். திருப்பாநந்தாமத்தில் இருக்கிற சிவன் நாக கன்னிகள் பாட, கீழே விழுந்தார். மன்னனிடம் குங்கிலியக்கலையர் சென்று நான் சிவனை நேராக நிறுத்துகிறேன் என்று கூறி, அங்கு மன்னனின் அங்கீகாரம் பெற்று, வஸ்திரத்தை சிவனின் பக்கம் கெட்டியாகக் கட்டிக்கொண்டு மறுபக்கம் தன்னுடன் வாளால் கட்டிக்கொண்டு உடனே வாளை கழுத்தில் மாட்டிக்கொண்டு அது இழுக்கும்படி பின்னால் இழுத்தார். சிவன் நேராக நின்றார். அவருக்குக் காட்சி கொடுத்து கருணை செய்தார். சிவனருள் பெற்ற குக்குலு களயாரு நாயனாரின் அடிமை நான்.

### அரிவாள் நாயனார் கதை

இவர் தினமும் தனது பிராணலிங்கத்திற்கு மூன்று வேளையும் மிகவும் உயர்ந்த ரக அரிசியில் பால்சாதம் செய்து, சமர்ப்பணம் செய்தார். [redacted] இருந்த பணமெல்லாம் தீர்ந்து விட்டது. அரிவாள் எடுத்து வேலைக்குச் சென்று உயர்ந்த ரக அரிசியை அறுத்து விரதத்தை நிறைவேற்றினார். சிலநாள் கூலி கூட அவருக்குக் கிடைக்கவில்லை. பட்டினியாகச் சில நாள் கழித்தார். சிறிது நாள் கழித்து அரிசி கிடைத்து. அவை கீழே கொட்டி எடுக்க முடியாது போன காரணத்தால் வருந்தி சிவனே! உனக்காக அர்ப்பணம் செய்ய கொண்டுவந்தேனே கீழே விழுந்து விட்டதே என்று கூறி, தன் உயிரைப்போக்கடித்துக்கொள்வதற்காக, அரிவாளால் கழுத்தை

நறுக்க முயற்சிக்கையில் சிவன் அதனைத்தடுத்து, அவரது விரதத்தைப் பாராட்டி அவரிடம் அன்பு கொண்டார். மறுபடியும் உயிர் கிடைக்கப் பெற்ற அரிவாள் நாயனாரின் அணுக்கமான அடிமை நான்.

## அடிபர்த நாயனார் கதை

பாண்டி மண்டலத்தில் அடிபர்தர் என்ற மீன் தொழிலாளி இருந்தார். இவர் மீன்பிடிக்கும் தொழிலை மட்டுமே அறிந்தவர். தான் மீன் பிடிக்கும்போது முதலில் கிடைக்கின்ற மீனை சிவனுக்காக விட்டுவிடுவார். மறுபடியும் கிடைக்கும் மீன்களைக் கடையில் விற்று, அதில் வரும் பணத்தால் சங்கமர்களுக்கு ஆராதனை செய்து வந்தார். இவ்வாறு நாட்களைக் கழித்து வந்தார். இப்படி ஒருநாள் மீன்பிடிக்கச் செல்ல, மீன் எதுவுமே கிடைக்கவில்லை. மறுநாள் பொன்மீன் ஒன்று கிடைத்தது. அதனை மீண்டும் தண்ணீரிலேயே விட்டுவிட்டார். வேறு இடத்திற்குச் சென்று மீன்பிடிக்க அங்கும் அந்த மீனே கிடைத்தது. பகலெல்லாம் அந்த மீனே வந்த காரணத்தால் பிடித்துப் பிடித்து விட்டுக் கொண்டேயிருந்தார். வீட்டிற்குச் சென்று மறுநாளும் வந்து மீன் பிடிக்க அம்மீனே கிடைத்தது. மறுமுறை இம்மீனை நான் பிடிக்கமாட்டேன் என்று கூறிவிட்டு, வலையைப் போட அவ்வலையில் சிவன் காட்சியளித்தார். மேலுலகப்பதவியை அவருக்கு அளித்தார். மேலுலகப்பதவியால் நிரந்தர பரமானந்த சுகத்தில் இருக்கிற அடிபர்த நாயனாரின் அடிமை நான்.

## ஏனாதிநாதன் கதை

இவர் ஏலாபுரம் என்ற தேசத்திற்கு மன்னன் ஆவார். எப்பொழுதுமே விபூதி ருத்திராட்சம் அணிந்திருப்பவர்களைத் தனது பிராணலிங்கமாய் நம்பிக்கொண்டிருந்தார். அவர் நிறைய குறுநில மன்னர்களை வென்று அவர்களிடம் கப்பம் வாங்கிக்கொண்டிந்தார். குறு நிலமன்னர்களுக்கு இவரைப்பார்த்தாலே அம்பு மார்பில் பாய்ந்ததனைப் போலத் துன்பம் உண்டாகும். அவர் மற்றவர்க்கு அச்சம் தரும் வகையிலே வாழ்ந்து வந்தார். மன்னர்கள் அனைவரும் கூடி, தங்களுடைய படைக்கு ஒரு தளபதியை ஏற்படுத்தி அவரைச் சேனையுடன் ஏனாதிநாதர் முன்பு அனுப்பிவைக்கிறார்கள்.

ஏனாதிநாதரும் தனது படையுடன் மோத வருகிறார். அந்த எதிரி விபூதி ருத்ராட்சம் அணிந்து இருந்தார். அதனைப்பார்த்து இவர் வாளைக் கீழே போட்டுவிட்டு அவரது அருகில் வந்து கீழே விழுந்து வணங்கினார். அப்பொழுது நீ என்னிடமிருந்து எங்கும் செல்ல முடியாது என்று கூறி, தன் கைவாளை ஏனாதி மீது செருகினான். வாள் பூமாலையாகமாறி அவரது தோளில் விழுந்தது. அப்பொழுது சிவன் காட்சிகொடுத்து அவருக்கு என்றும் அழியாத தன்மையினைக் கொடுத்தார். இவ்வாறு இவ்வுலகத்தில் புகழ்பெற்ற ஏனாதி நாயனாருக்கு நான் அடிமை.

### சேதிராசர் கதை

இவர் விபூதி, ருத்ராட்சம் அணிந்திருப்பவர். அனைவருமே சிவன் என்று எண்ணி பக்தியோடு இருந்தார். இவரது எதிரிகள் இவரிடம் போர் செய்து தோற்றுபோய் ஓடிப்போனார்கள். அவ்வாறு ஓடிச்சென்றவர்கள் சிவபக்தர்கள் போல பஞ்சமுத்திரை இட்டு, விபூதி, ருத்ராட்சம் அணிந்து சிவனை அனுப்பி விட்டனர். இவர் அவர்கள் மீது பாணத்தினை அனுப்பாது. சிவனாக நினைத்து அவரை வணங்கினார். சிவன் காட்சி அருளி கைலாயபதவியை வழங்கினார். அப்படி புகழ்பெற்ற சேதிராசரின் அடிமை நான்.

### கரையூரிச் சோழன் கதை

இவர் சோழ மன்னன், பஞ்சமுத்திரை யாரிடம் இருக்கிறதோ அவர்களைப் பார்த்து மிகவும் அன்புடன் நடத்தினார். தன் எதிரிகளின் 30 பேரின் தலைகளை ஒரே நேரத்தில் வெட்டிக்கொண்டு வந்தார். முப்பது தலைகளுள் ஒரு தலையில் சடை இருந்ததனைப் பார்த்து 'சிவசிவ' என்று கூறி தன் தலையை வெட்டி, அந்த உடம்பில் பொருத்தினார். அப்பொழுது சிவன் காட்சியருளி, மோட்சத்தினை அருளினார். இவர் இதற்கு முன்னர் சிவபக்தருக்காகத் தன் தலையைக் கொடுத்தவர் என்று புகழ்ந்தார்கள். அப்படிப்பட்ட கரையூரிச் சோழனின் அடிமை நான்.

### கலியம்ப நாயனார் கதை

ஒரு ஊரில் ஓர் அடிமையின் மகன் வேலை செய்யாது சோம்பேறியாய்ச் சுற்றி அலைந்தான். அவன் தன் கழுத்தில்

சிவலிங்கத்தைக் கட்டிக்கொண்டு திரிந்தான். அவனைக் கலியம்பர் பார்த்து. அடிமையின் மகன் என்று எண்ணாது. அவன்தான் சிவன் என்று எண்ணி. அவன் பாதங்களைக் கழுவுவதற்காக தண்ணீரை எடுத்து ஊற்றிக் கொண்டிருக்கிறார். அருகிலிருந்து கலியம்பனாரின் மனைவி இவன் சிரியக்காலின் மகன் மல்லன். இவனுக்கு அபிஷேகம் செய்கிறீர்களே? என்று கேட்டாள். பின். காலைக் கழுவுவதற்குத் தண்ணீர் கூட ஊற்றாமல் நின்று கொண்டிருந்தாள். அப்போது கலியம்பா "நீ சிவனைக் கேலி செய்தாயல்லவா" என்று மனைவியின் கைகளை உடனே வெட்டி சிவனின் கருணைக்குப் பாத்திரமானார். அப்படிப்பட்ட கலியம்ப நாயனாரின் அடிமை நான்.

## இருபதாண்டாரி கதை

சிவன் இவரிடத்தில் சிவபக்தர் வேடத்தில் வந்து அவரிடம் வஸ்திரம் முதலியவற்றைக் கொடுத்து வைத்திருக்கச் சொல்லி விட்டு சென்று விட்டார். பின். அவை அனைத்தும் மாயமாக மறையும்படிச் செய்துவிட்டார். மறுபடியும் தன் உடைமைகளைத் திருப்பிக்கேட்டார். எங்கே வைத்தாரோ அந்த இடமெல்லாம் தேடிப்பார்த்தார் இருபதாண்டாரி. சுவாமி! வஸ்திரம் காணவில்லை என்றார். உங்கள் வஸ்திரம் எவ்வளவு எடை இருக்கிறதோ அவ்வளவு எடைக்கு வஸ்திரம் கொடுத்து விடுகிறேன் என்று கூறினார். தராசின் ஒரு தட்டில் வைத்தார். சமமாகவில்லை. தன் வீட்டிலுள்ள எல்லாப் பொருள்களையும் வைக்க. அது சமமாகவில்லை. தானும் அதில் அமர்ந்தார். உடனே தராசுத் தட்டு சமமானது. இதனைக் கண்டு சிவன் அவருக்கு கைலாய பதவியை வழங்கினார். இதுபோன்ற அடியவராகிய இருபதாண்டாரியின் அடிமை நான்.

## அங்குலி மாறய்யா கதை

சிவபக்தர்களாகிய சங்கமர்களுக்கு அவர்கள் வேண்டிய பொருள்களை எல்லாம் கொடுத்து வருவதனை நியமமாகக் கொண்டிருந்தார். ஒரு நாள் இரவிலே சிவன் மாறுவேடத்தில் மழையில் நனைந்து இவரது வீட்டிற்கு வந்தார். தபசி ஒருவர் நம் வீட்டிற்கு வருகிறாரே என்று அவரை நன்றாய் உபசரித்து. குடிசையை எரித்து

அவரைக் குளிர்காயச் செய்தார். நெல்லைத் தண்ணீரில் ஊற வைத்திருந்தார். தபசி, பசி என்று கூறியவுடன், அந்த நெல்லை எடுத்து தண்ணீரை வடித்து, வறுத்து, உரலில் போட்டு இடித்து மனைவியும் இவரும் சேர்ந்து உற்சாகமாகச் சமையல் செய்து, பக்தியோடு கொடுத்தார்கள். இதுபோல, பக்திகொண்ட அங்குலி மாறய்யாவின் அடிமை நான்.

### கணபாலன் கதை

இவர் ஒரு மன்னன். தனது நாட்டில் சிவபக்தர்களைத் தவிர வேறு யாரும் இருக்கக்கூடாது என்ற நியமத்தினை வைத்திருந்தார். எனவே, அனைவரையும் சிவபக்தராக மாற்றினார். சிவபக்தராகாதவரிடம் வேதங்கள், சாஸ்திரங்கள் அனைத்தையும் கூறிச் சிவபக்தராகச் செய்தார். சிலருக்கு வேண்டிய பொருள்களையெல்லாம் கொடுத்துச் சிவபக்தராக மாற்றினார். இந்த வழிகளிலெல்லாம் சிவபக்தராகாவிட்டால், அவர்களைக் கொன்று விடுவதனை விரதமாக வைத்து இருந்தார்.

ஒரு நாள் சிவன் இவரது விரதத்தைப் பரீட்சை செய்வதற்காக ஒரு சிவபக்தரல்லாதவர் போன்று தோற்றம் கொண்டு அந்த ஊருக்கு வந்தார். தலையாரிகள் அவரைக் கணபாலன் வீட்டிற்கு அழைத்து வருகிறார்கள். மாறுவேடத்தில் வந்த சிவன் 'நான் யாரிடமும் கடன் வாங்கவில்லையே, எந்தத் தவறும் செய்யவில்லையே எதற்காக என்னை இழுத்து வந்தீர்கள்' என்றார். மன்னன் அவரிடம் நான் உனக்கு எல்லா மானியமும் தருகிறேன். நீ சிவபக்தனாக மாறிவிடு என்றார். உடனே, அவர் நான் பக்தியை ஏற்றுக்கொள்ள முடியாது. என் குலத்தில் பூர்வீகமாக யாரும் பக்தராக இருந்ததில்லை. இப்படியே என்னை விட்டுவிடுங்கள் என்றார். உடனே, மன்னன் நீ இப்படியே இருக்கவேண்டாம். உன் வாழ்க்கைக்கு எந்தக்குறையும் வராதபடி நிறைய செல்வத்தைக் கொடுக்கிறேன். என் மனதை உனக்குக் கொடுக்கிறேன் நண்பனாக ஏற்றுக்கொள்கிறேன். என் அரசாட்சி முழுமையும் உனக்குக் கொடுக்கிறேன். நீ சிவபக்தனாக மாறிவிடு என்று கூறுகிறார். அந்த வேடதாரி என்னால் முடியாது என்று

கூறினார். உடனே, மன்னன் தனது வாளினை எடுத்து அவனது தலையைக் கொய்ய முயற்சிக்கிறார். அப்பொழுது சிவன் காட்சியருளி, மன்னனைப்பார்த்து உனக்கு யாது வேண்டும்?' என்று கேட்கிறார். உடனே மன்னன் நீ கொடுக்கும் வரத்தை நான் ஏற்றுக்கொள்ளமாட்டேன். முதலில நீ சிவபக்தனாக மாறிவிடு என்றார். பின்னர் சுவாமிக்கு லிங்காதரணம் செய்தார். சிவன் அவருக்குக் கைலாய பதவியை அருளினார். பிரமத கணங்களில் ஒருவராக கணபாலன் ஆனார். அவாது அடிமை நான்.

## கும்மரி குண்டய்யா கதை

பெனுப்பட்டப்புலூரு என்ற ஊரில் ஒரு பெரிய கோயில் இருக்கிறது. அதற்குத் திருநீலகண்டர் கோயில் என்று பெயர். ஒரு நாள் கும்மரிகுண்டய்யா கோவிலுக்குச் சென்று இறைவழிபாடு முடித்துத் திரும்புகையில் இரவாகிவிட்டது. அந்த சமயத்தில் ஒரு பெண் மாடியில் இருந்து ஒரு கிண்ணத்தில் எச்சில் நீரை எடுத்துக்கீழே இறைத்து விட்டார். அது இவர் மீது தெறித்து விழவே, 'சிவசிவ' என்று கூச்சலிட்டார். அந்தப்பெண் ஓடிவந்து கீழே விழுந்து வணங்கினாள். வீட்டிற்குள் அவரை அழைத்துச் சென்று அவருக்கு அபிஷேகம் செய்து, மீண்டும் மன்னிப்புக்கேட்டு அவரை அனுப்பி வைக்கிறார். அவர் மனைவி சந்தேகப்பட்டு நீ வேசி வீட்டிற்குச் சென்று விட்டு வருகிறாயா?' என்று கோபப்படுகிறார். அவர் மனைவியின் முந்தானையைப் பிடித்து இழுக்கவே, அவரது மனைவி, 'திருநீலகண்டர் மீது ஆணை என்னைத் தொடக்கூடாது' என்கிறார். இதனால் மனைவியைத் தொடாது மனைவியின் கட்டளைப்படியே எண்பதாண்டுகாலம் வாழ்ந்து வந்தார்.

ஒருநாள் சிவன் பக்தர் வேடத்தில் வந்து கும்மரிகுண்டய்யாவிடம் ஒரு பிச்சைப்பாத்திரத்தைக் கொடுத்து விட்டுச் சென்றுவிட்டார். அவரே அப்பாத்திரத்தை தன் மாயையால் தொலைந்து போகுமாறு செய்துவிட்டு, மறுபடியும் வந்து கேட்கிறார். குமரிகுண்டையாவுடன் அவரது மனைவியும் சேர்ந்து தேடிப்பார்க்கின்றனர். கிடைக்கவில்லை. முனிவரின் பாதத்தில் விழுந்து வணங்குகிறார்கள். நான் உங்களின்

பேச்சை நம்பமாட்டேன். என் முன்னே வந்து சபதம் செய்யுங்கள் என்கிறார். பின்பு, அவ்வூரில் இருக்கும் மக்கள் அனைவரும் பார்க்கும்போது, அவ்வூரில் உள்ள குளத்தில் மூழ்கியவுடன் இருவரும் இளமையைப் பெறுகிறார்கள். உடனே, சிவன் காட்சிகொடுத்து இருவரும் எண்பது வயது வரை பூமியில் சுகமாய் இருக்கும்படிச் செய்து, பின்பு கைலாயபதவியைக் கொடுத்தார். அதுபோன்ற புகழ்பெற்ற கும்மரிகுண்டய்யாவின் அடிமை நான்.

**பூசலநயனார் கதை**

விக்கிரம சோழன் என்ற மன்னன் பொன்னைக்கொண்டு கோயில் ஒன்றைக்கட்டி அதில் லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்திருக்கிறார். பூசல நாயனாரும் இரத்தின விமானம் அமைத்து கோபுரம் ஒன்றைக் கட்டினார். சிவனிடமும் பாராட்டைப் பெற்றார். அதுபோன்ற பூசல நாயனாரின் அடிமைக்கும் அடிமை நான்.

**மற்றும் சில கதைகள்**

இந்த உலகத்தில் அரசாட்சியே வேண்டாம் என்று கூறி, சடையெல்லாம் வளர்த்துக்கொண்டு சிவனை நினைத்துக் கொண்டிருக்கும் திருப்பாலனின் அடிமை நான்.

திருநாவகபுரியில் இருக்கிற சிவன் அருளாலே பிராணலிங்கத்தை எப்பொழுதுமே நம்பி இருக்கிற திருகுருவி அடிமை நான்.

ரோகிணியும் தானும் சிவனின் அருளால் மோட்சமடைந்த திருவூரி திருமூலதேவனின் அடிமை நான்.

ஆயிரக்கணக்கான பக்தர்களின் கூட்டத்தில் இருந்து சிவபூசை செய்து முக்தியடைந்த சிறுப்புலி என்பாரின் அடிமை நான்.

தினந்தோறும் சிவனருளால் ஒரு காசு மானியமாக அடைந்து வாங்கி வந்த சிறுத்தொனா என்பவரின் அடிமைக்கும் அடிமை நான்.

புராணகாலத்தில் இருந்த பக்தர்கள் அனைவருக்கும் அடிமை நான். இப்பொழுது இந்தக்காலத்தில் இருக்கிற பக்தர்களுக்கும்

நான் அடிமை. இனிமேலும், சிவனைப் பிரார்த்தித்து, சிவபூசை செய்து அவர்கள் எண்ணங்களையெல்லாம், ஈடேற்றிக் கொண்டிருக்கிற சிவபக்தர்களுக்கும் நான் அடிமை என்று பக்தர்களின் கதைகள் அனைத்தையும் திருப்பாவாக அமைத்து, அதனைப்பாடிக்கொண்டு யாரைப்பார்த்தாலும் அவர்களை வணங்கி, அவர்களுக்கு வேண்டியன செய்பவர்களுக்கும் நான் அடிமை என்னைக் கருணையோடு பாருங்கள் என்று பாடிக்கொண்டு பக்தர்கள் வீட்டிற்கு வந்து சேருகிறார். இவர் பின்னால் சிவனும் வருகிறார்.

எல்லோரும் நம்பியை ஏற்றுக்கொண்டு, சிவனுக்கு எதிராகச் சென்று அவர் காலில் விழுந்து வணங்கினார். மிருமிண்ட நாயனாரின் பக்தியினைப் பாராட்டி அவருடன் இருக்கின்ற அனைவருக்கும் சிவன் கைலாய பதவியினை அருளினார். நம்பியைப் பூலோகத்தில் மகிழ்ச்சியாக இருக்கும்படிச் செய்தார். பக்தன் கர்வத்தோடு இருந்தால் பக்தி உயருமா? பசவனே கூறுவாயாக! என்று மடிவாலு மாச்சய்யா பக்தர்களின் கதைகளைக்கூறி, அவருக்கு நிறைய அறிவுரையும் கூறி, கர்வம் அனைத்தையும் போக்கடித்து, கண்களைக் கூசச்செய்யும் இரத்தின மலைகளை அங்கிருக்கும் சங்கமராகிய பசவண்ணனுக்குக் கொடுத்து, அனுப்பி வைக்கிறார். பக்தர்களோடு அவரும் தனது ஊருக்குத் திரும்பி வருகிறார். அவ்வூரில் இருக்கிற மக்கள் அனைவரும் மடிவாலு மாச்சய்யாவிற்கு வணக்கம் செலுத்தினர். இவர்தான் கடவுள் என அவரை மரியாதையாக வழிநடத்தினர். மடிவாலு மாச்சய்யாவின் கதையை யார் கேட்டாலும் படித்தாலும் எல்லாச் செல்வங்களும் கிடைக்கும். எண்ணற்ற சிவபக்தரது திருவடித்தாமரையில் வண்டுபோலச் சங்கமர்களுக்குச் சேவை செய்வதில் கிடைக்கும் சுகக்கடலில் இருக்கினற பால்குருகி சோமநாதனால் இயற்றப்பட்டு, காஸ்தலி விஸ்வநாதர் என்ற என் குருவினால் கொடுக்கப்பட்ட அருளாலே பசவபுராணம் என்ற கதையில் 4வது அத்தியாயம் முழுமை பெற்றது.



# ஐந்தாம் அத்தியாயம்

பக்திக்கடலில் மூழ்கியவரும் நல்ல குணத்தினை உடையவரும் ஆன சங்கனாமாத்யா! இந்த உலகத்தில் இன்னும் சில பக்தர்கள் இருக்கிறார்கள். அதில் கின்னரபிரம்மய்யா என்பவர் எப்பொழுதும் சிவ சமயத்தில் போற்றப்பட்டு, பாராட்டப்பெற்றவர். நிறைய தொழில் தெரிந்தவர். நிறைய கல்வி கற்று பண்டிதத்துவம் உடையவர். உலக உயிர்களின் மீது இரக்கமும் கருணையும் உடையவர். பக்தர்களில் சிறந்தவர். நிறைய தொழில்களைச் செய்து, அதில் வருகின்ற. பணத்தைச் சிவபக்தர்களுக்காகவே செலவு செய்தார். விளையாட்டிற்காக வீணையில் பாடல் உண்டாகுமாறு செய்தார். அப்பொழுது சிவன் காட்சிதந்து அவருக்குக் கின்னரபிரம்மய்யா என்ற பெயரைக்கொடுத்து, அவருக்குத் தினந்தோறும் மானியங்கள் கொடுத்தார். இது போன்று மக்கள் அனைவரும் புகழும்படி சங்கமர்களுக்குச் சேவை செய்து வந்தார்.

## கின்னர பிரம்மய்யா கதை

பசவண்ணனின் பக்தி என்ற நறுமணம் உலகெலாம் பரவியது. பிரம்மய்யா அதனை அறிந்து அவரைப் பார்க்கப் புறப்பட்டுச் சென்றார். பசவண்ணா கின்னரபிரமய்யா வருவது தெரிந்து சங்கமேஸ்வரம் என்ற இடத்தில் அவரைச் சந்தித்து, அவரை வணங்கி, அவருக்குப் பாதபூசை செய்து. அவருடன் சிவபக்தி பற்றியதைப் பேசிக்கொண்டிருந்தார்.

ஒருநாள் பிரம்மய்யா விளையாட்டிற்காக சந்தோஷமாக திரிபுராந்தக தேவரின் சிவன் கோவில் கோபுரத்தின் அருகே அமர்ந்து இருந்தார். ஒருவர் ஒரு ஆட்டினை விலைகொடுத்து ஒரு தாசிக்காக வாங்கி, அதனை வெட்டுவதற்காகக் கயிறு கட்டி, தெருவில் இழுத்துக்கொண்டு சென்றார். கயிறு அறுந்துவிடவே, அந்த ஆடு கோயிலின் உள்ளே சென்றது. அதனைக் கொண்டு வந்தவனும் அதனைப்பிடிப்பதற்காகவே உள்ளே சென்றான். அப்பொழுது கின்னரபிரம்மய்யா அவனைப்பார்த்து, ஓடாதே நில்? அந்த ஆடு உயிருக்குப் பயந்து உள்ளே ஓடி வருகிறது.. அதனை வெட்டுவது

தவறு. இதன் விலையைக் கூறிவிட்டு பணத்தினை எடுத்துச்செல். சரணம் என்று யார் வந்தாலும் அவர்களைக் காப்பது சிவபக்தர்களின் கடமை. நடமாடும் உயிர்களுக்கு இறப்பு, துன்பம், நோய் சமானமே. இதனைக் கொல்ல வேண்டுமென்று விரதமா? அந்தபெண் இதன்மேல் முத்திரை இட்டிருக்கிறாளோ? என்று கூறினார். இதுபோன்ற அறிவாளி உலகத்தில் யாரேனும் இருப்பார்களா? அறிவாளி என்று பேசிக்கொண்டு இருக்கிறாய். ஆடு கோயிலுக்குச் சென்றாலும் குளத்தின் உள்ளே சென்றாலும் வயலின் உள்ளே சென்றாலும் காசு கொடுத்து வாங்குபவர்கள் விடுவார்களா? வழிபார்த்துக்கொண்டே அது வருமா? வழி தவறித்தான் செல்லும். இந்த உலகத்தில் நீதான் நீதிமான் போன்று பேசுகிறாய்? நான் இதுபோல் எப்பொழுதும் கேள்விப்பட்டது இல்லை. தாசி கொஞ்சம் காலதாமதமானாலும் கோபமடைவாள். பணம் கொடுத்தவனைப்போல பேசுகிறாயே? இது போல் கருணை உள்ளம் படைத்தவர்கள் எங்கிருப்பார்கள்? உயிர்கள் அனைத்திற்கும் இறப்பு, நோய், துன்பம் சமம் என்று சொல்கிறாயல்லவா? மனிதர்களின் உயிருக்கு 1000 வராகன் விலை மதிப்பிட்டிருக்கிறார்கள். அதனால் 1000 வராகன் கொடுத்து இந்த ஆட்டினை நீ விடுவித்துக்கொள் என்று கூறிக்கொண்டே இவன் கோயிலுக்குள் செல்ல முயற்சிக்கிறான். உடனே, நீ உள்ளே செல்லாதே என்று கூறி 1000 வராகன் கொண்டு வந்து அவனிடம் கொடுத்து இனிமேல் இந்த ஆட்டின்மேல் முத்திரை இட்டு விடுகிறேன் என்றார். அவனும் அப்படியே ஆகட்டும் என்று கூறி. அவர் கொடுத்த வராகனை எடுத்துக்கொண்டு, தாசியின் வீட்டிற்குப்போக மனமின்றி, திரும்பவும் ஒரு ஆட்டினைப் பணம் கொடுத்து வாங்கிக் கொண்டு போனான்.

வேசி, அவனைப் பார்த்து "போ! போ! வீட்டை விட்டுப்போ! எல்லோருமே சிரிக்கும்படி என் வீட்டின் உள்ளே வருவதற்கு உனக்கு வெட்கமாயில்லை. பேச்சுமட்டும் அதிகமாகப் பேசுகிறாய். இந்தத் தெருவில் நான் எப்படித் தலைகாட்ட முடியும்? பார்ப்பவர்கள் சிரிக்க மாட்டார்களா? என்னுடன் இருக்கும் பெண்கள் என்னைப்பற்றி என்ன நினைப்பார்கள்? நான் மிகவும் ரோசமானவள் என்பது தெரியுமல்லவா?" என்றாள். அதற்கு அவன் நான் ஆயிரம் ஆடு கூட கொண்டு வருகிறேன் என்று கூறினான். நீ ஒன்றும் கவலைப்படாதே என்றான்.

தாசி, பணம் கொடுத்து வாங்கிய ஆட்டை வைத்து நாங்கள் பண்டிகை கொண்டாடாவிட்டால் கடவுள் கோபித்துக் கொள்வார் என்று கூறினாள். அவன் கோயிலருகே வந்து அந்த ஆட்டைப்பிடிக்க முயற்சிக்க, அவர் கோபப்பட்டு ஓடிவந்து, அதனைப் பிடிக்காதே அது சிவபக்தர்களிடம் சரணடைந்த ஆடு. அதனைப்பிடித்தால் உன் தலையை வெட்டிவிடுவேன் என்று கூறி, அவன் அருகில் வந்தவுடன் தனது வாளினை எடுத்து, அவன் தலையைக் கோயிலுக்கு அந்தப்பக்கம் விழும்படி வெட்டினார். பேச்சுத்தவறிய இவன் இருப்பது தவறு எனும்படியாக அவனது தலை கீழே விழுந்தது. அந்த உடலைத்தூக்கி அகழியில் போட்டுவிடச் செய்தார். அங்கிருக்கும் மக்கள் அனைவரும் அதிசயமாகப் பார்த்தனர். அத்தலையை மன்னரிடம் கொண்டுவந்து, இவர் ஒரு தவறும் செய்யவில்லையே? கின்னரபிரமய்யா வாளால் வெட்டிவிட்டார் என்று மன்னனிடம் சென்று கூறினர். மன்னன் மிகுந்த கோபத்துடன் பசவய்யாவைப் பார்த்து, சிவபக்தர்கள் மிகுந்த கருணை உடையவர்கள் என்று கூறினார்களே! ஆனால் ஒரு தவறும் செய்யாதவர்களைக் கொன்று விடுகிறீர்களே! உலகத்தில் மனிதர்களை வாழவிடாது செய்கிறீர்களே! உங்களுக்கும் ஆட்டிற்கும் என்ன தொடர்பு? எங்கள் மீது யாரும் குற்றம் கூற முடியாது என்று இவ்வாறு செய்து கொண்டிருக்கிறீர்களா? காலால் உதைப்பது, இறைவனுக்கு இறைச்சியைக் கொடுப்பது, சிறுவனைக் கொல்வது, குலமில்லாது அனைவரும் சேர்ந்து சாப்பிடுவது, தந்தையின் தலையை வெட்டுவது, மனைவியைக் கொடுப்பது, நீங்கள் செய்வது அனைத்தும் தர்மமாகும் என்று கூறுகிறீர்கள் இந்த நாட்டை நீங்களே ஆண்டு கொள்ளுங்கள் என்றார்.

பசவண்ணா, என்ன நடந்ததென்று தெரியாது, இதுபோல பேசுவது பெரியவர்களுக்கு நல்லது அல்ல சிவபக்தர்கள் அல்லாதவர்கள் தர்மம் செய்யாது இருக்கிறார்கள். ஆனால், சிவபக்தர்கள் எப்பொழுதும் தர்மத்தைக் கடைபிடித்துக்கொண்டு இருக்கிறார்கள். ஒன்றும் செய்யாது இருப்பவரைக் கொல்லுவதற்கு கின்னரபிரமய்யா சிறுவனா? இவ்வுலகத்திலே காளை கன்று ஈன்றது என்று கூறியவுடனே அதனைக் கட்டிப்போடு என்று கூறுகிறவர்கள் இருக்கிறார்கள். என்ன நடந்தது என்று தெரிந்து கொண்டு பின்பு

பேசுவது நல்லது. நடந்த விஷயத்தினைத் தெரிந்து கொள்வதற்காக என்னுடன் சிலரை அனுப்பிவை என்றார்.

மன்னர், மந்திரிகள் சிலரை அவரோடு அனுப்பி வைக்கிறார். அவர்கள் திரிபுராந்தகக் கோயிலுக்குச் சென்று இறைவனைப் பார்த்து வணங்கி, உன்மேல் பக்தர்கள் இது போன்று கொடுமைப் படுத்துவதற்கு என்ன காரணம்? குடும்ப வாழ்க்கை நடத்துபவரிடம் ஏன் விரோதத்தினை வளர்த்துக்கொள்ள வேண்டும்? உன் மீது தேவையில்லாத பழி வந்துவிட்டதே? இதுபோன்ற பயனில்லாத மக்களிடம் உனக்கு ஏன் தொடர்பு? ஆடுகூட ஏன் தொடர்பு வைத்துக் கொண்டாய்? இது பற்றி ஆராய்வதற்காக மன்னன் எங்களை அனுப்பி வைத்திருக்கிறார் என்று கூறினர்.

உடனே, இவர் நடந்தவற்றினை விளக்கி, தவறு யார் மீது? என்று கேட்டார். நடந்த அனைத்திற்கும் திரிபுராந்தகனே சாட்சி. அவனை நான் பேசவைக்கிறேன் என்று கூறினார். வந்தவர்கள் அனைவரும் மன்னரிடம் சென்று நடந்தவற்றைத் தெரிவித்தனர். இதுபோன்ற பக்தரைப் பாருங்கள்! மாயாஜாலம் அன்றி இது போன்று எப்பொழுதாவது கேள்விப்பட்டு இருக்கிறோமா? நான் சிவனைப் பேசவைக்கிறேன் என்று எல்லாரும் கேட்கும்படி கூறுவது உண்மையாய் இருக்குமா? பார்க்கலாம் என்று பிஜ்ஜலன் அங்கிருக்கும் பிரதானிகளை அழைத்துக் கொண்டு பசவண்ணாவிடம் வருகின்றார்கள். கோயில் பூசாரி கோயிலைப் பூட்டிவிட்டு சாவியினை எடுத்துக்கொண்டு சென்று விடுகிறார். கின்னரபிரமய்யா வருத்தப்படாது, சிரித்துக்கொண்டு கதவு பக்கத்தில் நகர்ந்து பார்த்தார். உடனே சிவன் பயந்து கதவைத் திறந்தார். முற்காலத்தில் தேவதாசிக்குப் பயந்து கதவைத்திறந்தார் என்று கேள்விப்பட்டு இருக்கிறோம். இப்பொழுது மெய்யாகக் காண்கிறோம். கோயில் கதவை பார்த்தவுடனே அது திறந்து விட்டது. இவர் சிவனைப் பேசச் செய்வார் என்று அனைவரும் புகழ்ந்து கொண்டிருந்தனர்.

உடையநம்பி தாசியுடன் இருக்கும்பொழுது, இவர் தாசமய்யா விவாதத்தில் எரும்பில் இருந்து கொண்டு குரல் கொடுத்த சிவனே! பாலூரி பிரமன்னா என்பவருக்குப் பதில் கொடுத்துச் சோளமாகவே

இருந்த சிவனே! எனக்காகவே நீ இப்பொழுது பேசு! என்று சொல்லி கின்னரபிரமய்யா சிவபக்தர்களைப் பிரார்த்தித்து, சிவனை எதிர்நோக்கி, திரிபுராந்தகா? என்று அழைத்தவுடன் ஓ! என்று குரல் கேட்டது. கோயிலின் உள்ளேயிருந்து இந்த சத்தம் கேட்டவுடன் சங்கமர்களைத் தவிர மற்றையவர்கள் மூர்ச்சையாகி விழுந்து விட்டனர். சிலரின் உயிரும் போய்விட்டது. உலகமே கலங்கி விட்டது. பூமி நடுங்கிற்று சூரியாஸ்தமனம் ஆகிவிட்டது. நட்சத்திரங்கள் கீழே விழுந்தன. பர்வதங்கள் நடுங்கின. கடல்நீர் வற்றிப்போனது. ஆகாயம் கீழே சாய்ந்து விட்டது. உற்சாகமாக பக்தியோடு கின்னர பிரம்மய்யாவை எல்லோரும் வணங்கினார்கள். அதன் பிறகு இரவும் பகலும் 7 நாட்கள் தொடர்ந்து குரல் வந்து கொண்டே இருந்தது. பக்தர்கள் அனைவரும் கின்னரபிரம்மய்யாவிடம் வந்து இவர் ருத்திரமூர்த்தியே ஆவார் என்று கூறி, எங்கள் மீது கருணைகாட்டு என்று வேண்டினார். பசவண்ணாவைப் பார்த்து சிரித்துக் கொண்டே கின்னரபிரம்மய்யா சிவனை நோக்கி, நிறுத்து? என்று பொருள் படும்படி 'ஊேற' என்று கைகாட்ட முன்போலவே எந்த குரலும் இல்லாது நின்று போயிற்று. உலகம் முன்போலவே அமைதியாயிற்று. ஜீவன்கள் அனைத்திற்கும் உயிர் வந்தது. பிஜ்ஜலன் கின்னர பிரம்மய்யாவிற்குத் தலைவணங்கி உங்கள் மகிமையினை என்னால் தெரிந்து கொள்ள முடியுமா? அறியாமையால் நாங்கள் தவறு செய்திருக்கிறோம். உன்னுடைய ஆணையை ஏற்றுக்கொண்டு சிவனே ஓ! என்று குரல் கொடுத்தார். நீ நிறுத்து என்று சொல்லியவுடன் நிறுத்திவிட்டார். இதற்கிடையிலே 14 உலகத்திற்கும் சோகநிலை ஏற்பட்டது. இப்பொழுது அனைவரும் இன்பம் கொண்டனர். இகலோகத்திற்கும் பரலோகத்திற்கும் நீதான் சங்கரன், தண்ணீரில் விழித்தாலும் பாலிலே விழித்தாலும் நீர் தான் எங்களுக்கு வழியாவீர். இவ்வுலகத்தில் உள்ள அனைத்து உயிர்களையும் நீர் தான் அடைக்கலமாய்க் காத்தருள வேண்டும். அதனால் கருணை என்ற பார்வையிலே எங்களைக் காப்பாற்ற வேண்டும் என்று கூறியவுடன். தலை வெட்டப்பட்ட மனிதன் உயிருடன் வந்தான். அனைவரும் கின்னரபிரமய்யாவைப் போற்றினர். இந்தக்கதையை யார் படித்தாலும் கேட்டாலும் பக்தியும், சகல பொருள்களின் மீது பற்றில்லாது, அவனது ஆசையும் நிறைவேறும்.

## கலகேத பிரம்மய்யா கதை

இவர் சங்கமர்களைத் தனது உயிர்போல பார்த்துக் கொண்டிருப்பார். உலகமெல்லாம் புகழ்பெற்றவர். அற்புதங்கள் படைத்தவர். இவர் சிறுதுளி அளவுகூட உலகத்தின் மீது பற்றில்லாது இருந்தார். இவர் விதூஷகன் போல வேடமிட்டார். தட்சனது தலையில் இருக்கும் கொம்பைப்போல செய்து தனது தலையில் வைத்துக்கொள்வார். மணியினை அணிந்துகொள்வார். கையில் பெரிய கம்பு வைத்திருப்பார். பக்தர்களின் வீட்டிற்குச் சென்று பிற சமயங்களைச் சாம்பலாக்கக்கூடிய ருத்ரனின் நெருப்பு வந்திருக்கிறேன் என்பார்.

துக்களவ்வாவின் மகன் வந்திருக்கிறேன். முகி சங்களப்பாவின் தம்பி வந்திருக்கிறேன். அம்மாமாரே! அக்காமாரே! என்று கூறி, அவர்களை நகைப்புக்கடலில் ஆழ்த்தி, அவர்கள் தரும் பொருள்களை வாங்கிச்சென்று சங்கமர்களுக்குக் கொடுத்து வந்தார். ஒருநாள் ஒரு பக்தர் கின்னரபிரமய்யாவைப் பார்க்க வந்து கொண்டிருந்தார். அவர் வெகுதொலைவில் இருந்து வந்த காரணத்தால் நடக்கமுடியாது அங்கே விழுந்துவிட்டார். உடல் சோர, கால்கள் புண்ணாக, பிணம் போல விழுந்து கிடந்தார். கலகேதபிரமய்யா, இது போன்று நீ கஷ்டப்பட வேண்டயது என்ன? என்றார். வந்த பக்தர் அவரைப்பார்த்து ஒரு பக்தர் வந்தார். சிவனது மக்கள் அனைவருக்கும் மானியம் கொடுத்தார். இப்பொழுது கின்னரபிரமய்யாவிற்குக் கொடுத்து வருகிறார்கள் என்று உலகமெங்கும் பேசிக்கொள்கின்றனர். அதுபோன்று என்னுடைய வறுமைத் துயரத்தை அவர் போக்கடிப்பார் என்று வந்தேன். நான் அவரைப் பார்க்க வேண்டும் அவர் எங்கிருக்கிறார். அவரிருக்கும் மடம் எவ்வளவு தூரம் இருக்கிறது? கூறுங்கள் என்றார். அவரைப்பார்த்தால்தான் எனது தாகம் தீரும் என்றார். அதற்கு கலகேதர், அவர் கைக்கூலிதான் வாங்கிக்கொண்டிருக்கிறார். கூலிக்கு வேலை செய்பவர்களுக்குத் தனது கூலியைத்தவிர, தானியக்குவியல் அப்படியே கிடைக்காது. இது செய்தால் இது கிடைக்கும் என்று எண்ணிப்பார்க்கிற அன்பர்களுக்கு தொடர்ச்சியான அன்பு, சுகம் கிடைக்காது. இது மாதிரி சோர்ந்து போய் அவ்வளவு தூரம் நீ எப்படிச் செல்லமுடியும்?

எவ்வளவு பணம் வேண்டுமானலும் நீ எடுத்துக்கொள் என்று, தனது கையில் வைத்திருந்த கம்பினை அருகில் இருந்த குப்பையின் மீது வைத்துக்காட்டினர். அங்கிருந்த கற்கள் ஆவாரம் பூவின் நிறத்தை ஒத்த பொன்னாக மாறியது. வந்த பக்தர் தன் தோளின் மேல் போட்டிருந்த துண்டினைக் கீழே போட்டு, கண்களில் கண்ணீர் வடிய அவற்றினை எடுத்துக்கொண்டார். அதை எடுத்துக்கொண்டு பசவன்னர் இருக்கும் ஊருக்கு அப்பக்தர் வந்தார். அவரது வீட்டின் முன் அந்த மூட்டையை இறக்கி வைத்து, நடந்த விஷயத்தைப் பசவன்னருக்கும் கூறினார். பசவன்னா! பிரமய்யா எனக்குக் கொடுத்த செல்வத்தை என் ஒருவனால் சுமக்க இயலவில்லை. இன்னொரு சேவகனை எனக்கு அனுப்பவேண்டும் என்று கூறினார். பசவண்ணா மிகுந்த ஆச்சரியப்பட்டு, இவரது மகிமையைக் கற்பக விருட்சத்திற்கு ஒப்பிட்டுச் சொல்ல நினைத்தால் அது கொடுக்கும் செல்வம் நிலைத்த தன்மை உடையதன்று. மேலும் மலையை ஒப்பிடலாம் என்றால், அதில் ஒன்றையும் சாப்பிட முடியாது. காமதேனுவும் நித்யமானது அன்று. அதுவும் யார் அன்பு செய்கிறார்களோ அவர்களின் அவாவினைத்தான் நிறைவேற்றும் ஆனால் பிரமய்யாவின் மகிமை இவை எல்லாவற்றிலும் உயர்ந்தது. இவர் சாட்சாத் சங்கமேஸ்வரரே ஆவார். இவர் தன்னுடைய சுயரூபம் தெரியாதவாறு இந்த ரூபத்திலே இருக்கிறார் என்று நினைத்து அந்த பக்தருக்கு ஒரு சேவகனைக் கொடுத்து அவரை அனுப்பி வைத்தார்.

பின்பு, பிரம்மய்யாவைப்பார்க்க வேண்டும் என்ற ஆசையினாலே, அவரிருக்கும் இடம் தேடிச் சென்று அவரைப்பார்த்து, இருகரங்களையும் சேர்த்து வணங்கி, புகழ்ந்தார். பிரமய்யா பசவன்னனைப் பார்த்து "பசவா! கின்னரபிரம்மய்யா போன்ற பக்தர் இந்த உலகத்தில் இருக்கிறார்கள் இதற்கு முன்னர் உடையநம்பிக்கு மானியம் கொடுத்து வந்த சிவன். இப்பொழுது கின்னரபிரமய்யாவிற்கு மானியம் கொடுத்து வருகிறார். பேசவைப்பது, மானியம் வாங்குவது இவை இரண்டும் அவர்களது வேலை. சாமியைப் பூசை செய்த பலன் இவ்வாறு இருக்கவேண்டும். ஆனால், இத்தனை நாளும் நான் சுவாமியை வணங்கி, எந்த பலனும் கிடைக்கவில்லை. ஒரு வாய்ச்சோறு கூட நான் வாங்கவில்லை. சிவபூசை செய்பவர்களுக்குப்

பொன் கிடைப்பது ஒன்றும் அதிசயமில்லை. வண்டிகளை ஆயிரக்கணக்கில் அனுப்பிவையுங்கள் தேவையான செல்வங்களை நான் கொடுக்கிறேன் என்று கூறி" அங்கிருக்கும் சாம்பலைக் கையில் எடுத்தார். உடனே அது பொன்னாகப் பிரகாசித்தது. கின்னரபிரம்மய்யா இதனை அறிந்து இவரது காலில் விழுந்து வணங்குகிறார். அவரைக் கட்டியணைத்து, விருந்தாளிகளை உபசரிப்பதுபோன்று பசவன்னாவையும் கின்னரபிரம்மய்யாவையும் அனுப்பினார். பிரம்மய்யாவின் சரித்திரத்தை யார் படித்தாலும் கேட்டாலும் அவர்களுக்கு சிவனின் கருணையினால் அந்த நிமிடமே வேண்டியது எல்லாம் நிறைவேறும்.

## மோலிக மாறகையா கதை

மோலிக மாறகையா என்ற சிவபக்தர் தினந்தோறும் காட்டிற்குச் செல்வார். அங்கிருந்து விறகினைக் கட்டிச் சுமந்து வருவார். அதனைக் கடையில் போட்டு, அதில் கிடைக்கும் பணத்தை வைத்து சங்கமர்களுக்கு ஆராதனை செய்து வந்தார்.

ஒருநாள் பசவன்னாவின் வீட்டிற்கு பக்தர்கள் சென்று சுவையான பதார்த்தங்களை நிறைய சாப்பிட்டு விட்டு, செல்லும்போது, பசவா! மாறகையாவைப்போல பக்தர்கள் யாரேனும் இருக்கிறார்களா? உன் வீட்டிலிருக்கிற சுவையான பதார்த்தங்கள் அனைத்தும் அவர் வீட்டிலிருக்கிற கஞ்சிக்கு ஈடாகுமா? அவரது தொழிலில் வருகின்ற வருமானம் கொஞ்சமே. இருந்தாலும், இன்று, நாளை என்று சொல்லாது ஜங்கமர்கள் எல்லோரையும் திருப்தியாக்கி அனுப்புவது அதிசயமாய் இருக்கிறதல்லவா? அவருடைய பக்தி மிகவும் அதிசயமானது. என்று பசவய்யாமுன் மாறகையாவைப்பற்றிப் புகழ்ந்து பேசுகிறார்கள். மாறகையாவின் வீட்டிற்குப் பசவய்யா மாறுவேடத்தில் வந்து அவரது மனைவியைப் பார்த்து, சரணம்! என்று கூறி அந்தம்மையாரின் காலில் விழ முற்பட, அதற்கு முன்னதாக, அந்தம்மையார் பசவய்யாவின் காலில் விழுகிறார். பின்பு, பசவய்யா, பிராணலிங்கத்திற்குப் பசிக்கிறது. உணவு தேவை என்று பிராணலிங்கத்திற்குத் தேவையான பூசையைச் செய்து, தாம்பூலத்தில் 2000 வராகன்களை மறைத்து வைக்கிறார். அந்தம்மையார் பிரசாதம் கொடுக்கிறார். பசவண்ணா அதனை

வாங்கிச் சாப்பிட்டு மிகுந்த மகிழ்ச்சிடைந்து, மிகுந்த செல்வத்தைப்பார்த்த ஒருவன் எவ்வாறு சந்தோஷப்படுவானோ அதனைப்போல சந்தோஷப்பட்டு, பிறப்பு என்ற துயரத்திற்கு இதுதானா மருந்து?' 'பக்தி' என்ற தபசுக்கு இதுதான் விளைச்சல். இதுதான் மோட்சத்திற்கு வழி என்று நினைத்து, வெளியே நின்று இவரது வீட்டைப் பார்க்கிறார். உடனே, எல்லா தோசமும் பறந்து போயிற்று. இந்த வீட்டின் வாசல் வழியாக எந்த மனிதன் வருகிறானோ அவன் மோட்சத்தினைப் பெறுவான். இந்த இடத்தில் இருக்கிற விலங்குகளின் பாக்கியத்தை வருணிக்க முடியமா? இந்த வீட்டில் சிறிய தூசியினை எடுத்து நெற்றியில் பூசிக்கொண்டாலும் பக்தி உண்டாகும். கொடும்பாவமும் இந்த பிரசாதத்தைச் சாப்பிட்டால் தீர்ந்து விடும். கொஞ்சம் தண்ணீர் குடித்தாலும் எந்தக் கெடுதலும் வராது என்று மகிழ்ச்சியோடு, பசவன்னா சென்று விட்டார். மாறகையா காட்டிற்குச் சென்று விறகு எடுத்துக்கொண்டு வந்து வீட்டிலே போடுகிறார். மனைவி அவருக்குப் பாதாபிஷேகம் செய்கிறார். மாறகையா சிவபூசைக்காக அமர்கிறார். பூசைசெய்யும்போது தட்டிலே இருந்த வராகையைக் காண்கிறார். இதனை யார் கொண்டு வந்து வைத்தார்கள்? எப்படிவந்தது? என்று மனைவியைக் கேட்கிறார். அதனைக்கேட்ட அவரது மனைவி, சுவாமி ஒருவர் வந்து நம்வீட்டில் பூசை செய்து சாப்பிட்டார். அதுதான் எனக்குத்தெரியும் மற்றது ஒன்றும் தெரியாது என்கிறார். மாறகையா, பசவன்னாதான் வந்திருப்பார். பணம் வைத்திருக்கும் பக்தர்கள், பணமில்லாத பக்தர்களைக்காப்பது கடனல்லவா? அதனால் வந்திருப்பார். அவரைத்தவிர வேறு யார் நம்மைக் காப்பற்றுவார்? நம்மைக் குழந்தைகளாக நினைத்து இங்கு வந்திருக்கிறார். அதுவே நமக்குப் போதும். நமக்கு இருப்பது நமக்குப்போதும் என்று, அங்கிருக்கும் ஜங்கமர்களை அழைத்து ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வராகை கொடுத்து பாதாபிஷேகம் செய்தனர். அந்தத்தண்ணீரைத் தெளித்ததும் அந்த இடமெல்லாம் பொன்னாக மாறியது, மிகுந்த சந்தோசப்பட்டு அதனை வாட்டி ஒவ்வொரு சங்கமருக்கும் ஒவ்வொரு தங்கத்துண்டாக வெட்டிக்கொடுத்தார். அவர்கள் மிகவும் அதிசயப்பட்டு, பசவன்னாவிடம் சென்று மாறகையாவைப்போன்று யார் பக்தர்கள் இருக்கிறார்கள்?

என்று பாராட்டினர். பசவன்னா அதிர்ச்சியடைந்து நேராக வந்து, என்னைக் காப்பாற்ற வேண்டும் என்று கூறி, வணங்கினார். அதனைப் பார்த்து, இதுபோல எதற்குச் சொல்லுகிறாய்? இதுபோல் உன்னை ஏதாவது கூறியிருக்கிறேனா! பக்தர்களில் வசதி இல்லாதவர்களை நீதான் காப்பாற்றுகிறாய். உன் போன்ற பக்தர்கள் இந்த உலகத்தில் யார் இருக்கிறார்கள். என் போன்ற பக்தர்கள் இருப்பது உன்னுடைய அருளாலேதான். தாம்பூலத்தில் இருப்பதனை உன் கருணையினால் அறிந்து கொண்டோம் என்றார். பசவன்னாவிற்கு எப்பொழுதும் இல்லாத சோகம் தாக்கியது. காகத்திற்குப் பொன்மலையின் பெருமை பற்றித் தெரியுமா? உன் போன்றவர்கள் எதனைத்தொட்டாலும் பொன் ஆகிவிடும். இரும்பிற்கு இதுபோன்றதன் குணம் தெரியுமா? நீ நல்லகுணம் படைத்தவன்; நான் துர்க்குணம் படைத்தவன். தீண்டத்தகாதவர் இருக்கும் ஊரில் வேதநாதம் இருக்குமா? மண் பாண்டங்கள் செய்கின்ற சூளையில் செப்புப்பாத்திரங்கள் கிடைக்குமா? அடுப்பு நெருப்பில் தாமரை வேர் முளைவிடுமா? அதனால் என்னை மன்னிக்கவேண்டும் என்கிறார். அவரை மாறகையா அணைத்து, நல்வார்த்தைகள் பேசி வழியனுப்பிவைக்கிறார். மாறகையா முன்போலவே சிவபக்தியைக் கடைப்பிடித்து வாழ்ந்து வந்தார். இவரது கதையை யார் படித்தாலும் எல்லா விதமான பாக்கியங்களும் கிடைக்கும்.

### கன்னட பிரம்மய்யா கதை

இவர் மற்றவர்கள் வீட்டிலே கன்னமிட்டு அதனால் கிடைக்கும். பொருள்களை சங்கமர்களுக்குக் கொடுப்பதனை விரதமாகக் கொண்டவர். யாருக்கும் தெரியாது சிவபக்தர்கள் வீட்டிற்குச் சென்று, தெரிந்த பிறகு அவர்களைப் பாதாபிஷேகம் செய்து மன்னிப்புக் கேட்டுச் சென்று விடுவார். ஒரு நாள் அவர் கையில் வாளை வைத்துக்கொண்டு, காவிவஸ்திரம் கொண்டு கத்திரி, மணல், அட்சதை, முள்ளால் செய்யப்பட்ட பந்து, நீல நிறத்துணி, மந்திரம் செய்த மயில், பாணம், ஒட்டகத்தின் தோளால் செய்யப்பட்ட செருப்பு, விசில், மயானத்தில் இருக்கும் சாம்பல், நாய் கடிக்காமல் இருப்பதுபோன்று செய்யக்கூடிய பொருள், கட்டில் கயிறு போன்றவற்றை

எடுத்துக்கொண்டு பகலென்றும் கவலைப்படாது. மன்னனின் கஜானாவைக் கன்னமிட்டு எடுத்துக்கொண்டு வருகிறேன் என்று சொல்லிச் சென்றார். பசவன்னா இவரது காலில் விழுந்து வணங்கினார். பசவன்னாவைப் பார்த்து, நீயும் வாளை எடுத்துக்கொள் என்று உடன் அழைத்துச் சென்றார். அதிகமாகப் பழக்கப்பட்டவர்கள்போல கஜானாவுக்குச் சென்றார்கள். பசவன்னா அவரைக் கூட்டிச்சென்று கஜானா இருக்கும் இடத்தைக்காட்டி, இவர் கன்னமிட்டு அங்கிருக்கும் பொருளையெல்லாம் எடுத்து வந்தார். இவரிடம் இருக்கும் சாம்பல் எங்கெல்லாம் விழுந்ததோ அங்கெல்லாம் பொன்னாக மாறியது. காவலர், கன்னட பிரமய்யா பணம் எடுத்துச் செல்வதைப்பார்த்து. மன்னனிடம் சென்று கூறிவிட்டார். மிகுந்த கோபப்பட்ட மன்னன், 'சிவபக்தர்' என்று கூறிவிட்டு இதுபோலச் செய்கிறாரே. பட்டப்பகலிலேயே இப்படி கன்னமிட்டு இருக்கிறாரே? எவ்வளவு, பணம் வேண்டுமென்று கேட்டாலும் நான் கொடுத்திருப்பேனல்லவா? விசுவாசிபோல நடந்து இதுபோலச் செய்தாரே? இனிமேல் இதுபோல என்ன செய்யப்போகிறாரோ எவ்வளவு பணம் வேண்டுமென்று கேட்டாலும் கொடுத்திருப்பேனல்லவா? என்று கண்ணீரோடும் கோபத்தோடும் வருகிறார். அங்கு கன்னம் வைத்த இடத்தில் தங்கம் குப்பைகுப்பையாக இருப்பதனைப் பார்த்து, ஆச்சரியப்பட்டு, கோபம் எல்லாம் தீர்ந்து, பசவன்னாவிடம் இந்தப் பொன்னெல்லாம் எங்கிருந்து வந்தது? யார் கன்னமிட்டது? என்று எனக்குத் தெரியப்படுத்து என்கிறார். கன்னட பிரம்மய்யா என்ற சிவபக்தரின் செயல்தான் இவையெல்லாம் என்றார் பசவன்னா, அவரது கால்விரலே கற்பக விருட்சங்களுக்கொல்லாம் ஆதாரம். அவருடைய பார்வை கருணை மிகுந்த ஆலயம். அவரது கைவிரல்களில் ஏற்படக்கூடிய உணர்வு எதைத்தொட்டாலும் பொன்னாக்கக்கூடிய தன்மை உடையது. அவரது திருவடிகள் மோட்சத்திற்கு இருப்பிடம். அவருடைய கோபம் சம்உறாரக் காரணம். கன்னமிடுவதால் கிடைக்கும் பணத்தைத் தவிர மற்றையதனைத் தொடமாட்டார். இதுவே அவரது விரதம், இது ஒரு பக்தியா? என்று கூறாதீர்கள். இது நல்ல வழிதான். எப்படியென்றால், சூதாடி பாண்டவர்கள் தோற்றதுபோல, வேட்டையாடி இராமன் மனைவியைத் தொலைத்ததுபோல, சிவபதவி

கிடைத்தது. மற்றவர்களின் மனைவிக்காக மன்னர்கள் தங்கள் உயிரை விட்டனர். மற்றவரின் மனைவிக்காக ஆசைப்பட்ட நம்பிக்கு சிவபதவி கிடைத்தது. பொய் சொன்ன பிரம்மனுக்கு உலகத்தில் இருப்பிடமே இல்லை பொய்சொல்லி சிறுத்தொண்டன் உடலோடு கைலாசம் சென்றார். ஆட்டைத்திருடிய திருடன் என்று சூத்ரகன் வெட்டப்பட்டான். வழிப்போக்கனாய் இருந்து திருடிய கணநந்தி சிவபதவி அடைந்தார். அராசட்சி மாயம் என்று சேரர், சோழர் இருவரும் முக்தி அடைந்தார்கள். அதனால் இது நல்ல வழியல்ல என்று சொல்லக்கூடாது. இது ஈஸ்வரார்த்தம் என்று நினைக்கவேண்டுமே அன்றி, இதனைக் கெட்ட வழி என்று கூற முடியாது. கன்னட பிரமய்யாவின் பெருமை என்னவென்றால், எப்பொழுது ஜங்கமர் வீட்டிற்கு வருகிறாரோ அப்பொழுதுதான் திருடுவதற்காகச் செல்கிறார். இரவு, பகல் என்று அவர் பயம் கொள்ள மாட்டார். சிவபக்தர் வீடாய் இருந்தால் அவர்களிடம் மன்னிப்புக்கோரி வந்து விடுவார். சிவபக்தர் அல்லாத வீட்டிற்குச் சென்று அங்கிருக்கும் செல்வத்தினைக் கொண்டுவந்து, சிவபக்தர்கள் முக்தி அடையும்படி செய்வதற்காகவே பிறந்த நல்ல மனிதன் இச்சிவபக்தர். இவர் எதனைத் தொட்டாலும் எங்கே அடியெடுத்து வைத்தாலும் அந்த இடம் பொன்னாகி விடுகிறது. உன்னைக்காப்பதற்காகவே பிரமய்யா இங்கு வந்தார். இங்கிருக்கும் பொருள்கள் அனைத்தையும் கணக்குப்பார். அதிகமாகவே இருக்கிறது என்று பசவன்னா கஜானாவில் இருக்கும் பொருள்களை ஒவ்வொன்றாக அடுக்கி வைக்கிறார். மன்னன் முதற்கொண்டு அனைவருமே ஆச்சரியப்பட்டனர். கன்னட பிரம்மய்யா வீட்டிற்கு வந்து மனைவியோடு சங்கமர்களுக்கு உதவி செய்து முன்பு போலவே வாழ்ந்து வந்தார். கன்னட பிரமய்யாவின் பெருமை பொருந்திய சரிதத்தை யார் கேட்டாலும் படித்தாலும் அதனை விரிவாக்கி எழுதினாலும் சிவன் அருளாலே அவர்களுக்கு வேண்டிய செல்வங்களெல்லாம் கிடைக்கும்.

### முசிடி சவுடய்யா கதை

இவர் வீரபத்திரருடன் சமம் என்ற அளவிற்குப் புகழ்பெற்றவர். முசிடி என்ற ஊரில் வாழ்ந்து வந்தார். பசவன்னனின் பக்தியைக் கேள்விப்பட்டு அவரைப்பார்க்க வேண்டும் என்ற ஆவலோடு பக்தர்கள் கூட்டத்தில் சேர்ந்து போய்க்கொண்டிருந்தார். அங்கு காடு ஒன்று

இருந்தது. அது மணல்பாங்கான காடாகும். ஊமத்தங்காய் அங்கே நிறைய இருந்தது. இது சாமிக்கு உகந்தது என்று கூறியவுடனே நேரே அந்த காய் இருக்கும் இடத்திற்குச் சென்றார். அதனைச் சிவனுக்குப் படைத்தார். அதனால் முசிடி (ஊமத்தங்காய்) சவுடய்யா என்ற பெயர் பரவட்டும் என்று அங்கிருந்தவர்கள் ஆசீர்வதித்தனர். இவர்கள் அனைவரும் மகிழ்ச்சியாகப் பேசிக்கொண்டு கல்யாணம் என்ற ஊருக்குச் சென்றனர். அங்கே, பசவன்னா சவுடய்யாவைப் பார்த்து, பக்தியோடு உபசரித்து சங்கமேஸ்வரத்தில் வேண்டியதெல்லாம் செய்து மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்தார். ஒரு கல்யாணத்தின் பொருட்டு இவர் சென்று கொண்டு இருக்கும்போது, தவராசு என்ற பக்தரைப் பார்த்தார். இவரிடம் ஆசிர்வாதம் வாங்காது செல்வது நன்றாய் இல்லை என்று நினைத்துக் கையில் கத்தியை எடுத்துக்கொண்டு அவரிடம் சென்று சரணம்! சரணம்! என்கிறார். அவரும் ஆசிர்வதிக்கிறார். முசிறி சவுடய்யா அவரைப்பார்த்து எங்கு செல்கிறாய்? என்னுடன் வா என்று கூறி, இருவரும் கல்யாணத்திற்குச் சென்றனர். அங்கே வழியில் பெரிய பெரிய மரங்கள் இருந்தன. மரத்தடியில் மாடு மேய்ப்பவர்கள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அந்த விளையாட்டில் பசவன்னாவின் ஆலமரம் தான் நம் இருவருக்கும் இடையில் அடையாளமாக இருக்கும். கிருஷ்ணன் மீது ஆணை என்று கூறிக்கொள்கிறார்கள். ஆலமரத்தின் அருகில் போய்க்கொண்டே சவுடய்யா மாடு மேய்ப்பவர்களிடம் என்ன என்று கேட்டார். மாடு மேய்ப்பவர்களில் பெரியவர் ஒருவர், பசவன்னாவின் செய்தி எனக்குத்தெரியும். எங்க தாத்தாவிற்கு அவரது தாத்தா கூறியிருக்கிறார். முற்காலத்தில் இரண்டு பெரும் காளைகள் 7 நாட்கள்தொடர்ந்து சண்டையிட்டன. அவற்றின் இரத்தம் நதிபோல ஓடியது. அப்பொழுது அதில் ஒரு காளை இறந்து விட்டது. அந்த இடத்தில் ஒரு ஆலமரம் வளர்ந்து விட்டது. அதற்கு பசவமரம் என்று பெயர். அது மட்டுமல்லாது அங்கு ஒரு அதிசயம் நடந்தது. அம்மரத்தின் காயைக்கடித்துப்பார்த்தால் மாமிசம் போலவும் பழத்தினை உரித்துப்பார்த்தால் இரத்தமாகவும் பால் கொட்டும். எங்காவது ஆலமரத்தின் பால் உரித்துப்பார்த்தால் இரத்தமாக வருமா? என்று கேட்டு, இதெல்லாம் உண்மை என்றார். உடனே,

அங்கிருப்பவர்கள். இது எல்லாம் பழங்காலத்துக்கதை அதனை விடுங்கள் என்றார்கள். பழமை, புதுமை எதுவாயினும் பசவண்ணா இறந்து விட்டதனைக் கேள்விப்பட்டபிறகு, பசவண்ணா இல்லாது நாங்கள் திருமணத்திற்குச் செல்லமாட்டோம் என்று கூறி, அவர் அங்கேயே நின்று விட்டார். அப்பொழுது விருஷபேந்திரா புறப்படு என்ற ஒரு சத்தம் கேட்டது. அந்தச் சத்தம் கேட்டவுடன் மரத்தின் வேர்ப்பகுதியில் இருந்து காளை ஒன்று பூமியே அதிரும்படி தோன்றியது. அது பயங்கரமாக வெளியே வருவதனை அனைவரும் அதியசப்பட்டுப் பார்த்தனர். அக்காளை பயங்கரமாக வாலாட்டிக்கொண்டே குதித்தது. காலால் மண்ணைக் கீறியது, கொம்பால் தரையைத் தடவியது. உடம்பை ஆட்டியது. காலால் வேகமாக அடிஎடுத்து வைத்தது. அக்காளைக்கு அட்சதை போடப்பட்டிருந்தது. உடம்பில் சந்தனம் பூசப்பட்டு இருந்தது. சலங்கை கட்டப்பட்டிருந்தது. அது சலங்கை ஒலி கேட்கும்படியாக அருகில் வந்தது. சவுடய்யா மகிழ்ச்சியடைந்து அதன் கழுத்தைப் பிடித்துக்கொண்டு, அதற்குத் தீபாராதனை செய்து, நெய், பால் பரிமாறி நந்திஅண்ணா! நீ முதலில் கிளம்பு. நீ இல்லாது நான் கிளம்பமாட்டேன் என்றார். பின்பு அவர்கள் பயணத்தைத் தொடங்கினர். அப்பொழுது வழியில் 'உறித்துரா' எனும் நதி கரைபுரண்டு ஓடிக்கொண்டிருந்தது. அப்பொழுது இவர், "இந்த சமுத்திரங்கள் அனைத்தும் ஒருவரின் கையில் அடங்கிப்போயிருக்கிற விஷயம் உங்களுக்குத் தெரியாதா? தாசய்யா என்ற பக்தர் இந்த உலகம் பார்த்துக்கொண்டிருக்கும்போது ஒரே முறையில் தாவினார். கங்கேஸ்வரு மசனய்யா என்பவர் சிவபூசை செய்து கொண்டு தன்னை மறந்த நிலையில் நதியின் நடுவில் இருக்கும்போது, அவர் மேலே வருவதற்குப்பயந்து, இரண்டாகப்பிரிந்து நீ பாய்ந்தாயல்லவா? அதனால் இப்பொழுது எனக்கு வழியை விடு" என்று சவுடய்யா கையில் கத்தியை எடுத்துக்கொண்டு அதனைப் பயமுறுத்த, தண்ணீர் மலைபோல் ஆகாயத்திற்குச் சென்றுவிட்டது. ஆகாயகங்கையிடம் சிவனின் பக்தியைப்பற்றித் தெரிந்து கொள்வதற்காக அது போய்விட்டது இதுபோல அந்த ஆறு முசிடி சவுடய்யாவிற்கு வழிவிடவே, நந்தி முன்னே செல்ல, சவுடய்யாவும் செல்ல. அவர்

பின்னே அனைவரும் சென்று கரையைத்தாண்டி, மகிழ்வோடு திருமணத்திற்குச் சென்று, திருமணத்தை முடித்துவைத்து, மறுபடியும் கல்யாண நகரத்தை நோக்கி வந்து கொண்டிருக்கிறார்கள்.

அப்பொழுது ஒரு பெண் சவுடய்யாவைப்பார்த்து தன் தலையாலே அவரது பாதங்களைத்தொட்டு வணங்கினாள். உடனே சவுடய்யா, அப்பெண் 100 வருடம் சந்தோஷமாக வாழ வேண்டும் என்று வாழ்த்திவிட்டு தன் இடத்திற்குச் சென்றார். மறுநாளே அப்பெண்மணி இறந்துவிட்டாள். பெற்றோர்கள் அப்பெண்ணின் உடலை எடுத்துக்கொண்டு சவுடய்யா இருக்கும் இடத்திற்கு வந்து, நேற்று தான் நீங்கள் ஆசிர்வாதம் செய்தீர்கள். உங்கள் ஆசிர்வாதம் தவறாகுமா? என்றார்கள். பின் அவரது காலில் விழுந்து வணங்கினர். அவர் யாரும் அழாதீர்கள் என்றுகூறி உடலைக்கீழே வைக்கச்சொல்லி, கையில் கூர்மையான வாளை எடுத்து, குழந்தையே எழுந்திரு என்று கூறி, கூப்பிட்டவுடன் கட்டியிருக்கும் கட்டுக்கள் அறுந்து கீழே விழ, தூக்கத்தில் இருந்து எழுவது போல எழுந்து சவுடய்யாவிற்கு வணக்கம் செய்தாள். பெற்றோர் மகிழ்ச்சியோடு, சுவாமி! உயிர் கொடுத்தவர்களுக்கு பக்தி உபகாரம் நாங்கள் என்ன செய்ய முடியும்? உங்கள் அடிமைகளாக எங்களை ஏற்றுக்கொண்டு காப்பாற்ற வேண்டும் என்றனர். சவுடய்யா அந்தப்பெண்ணிற்கு நூறுவருடம் ஆயுள் கொடுத்து ஆசிர்வதிக்கிறார்.

அன்னதானம் கொடுப்பது எல்லோராலும் முடியும். ஆனால் முசிடி சவுடய்யா மட்டுமே இதுபோன்று உயிர் கொடுத்தார் என்று கூறியவுடன் அவரது புகழ் உலகமெங்கும் பரவியது. அந்நிய மதத்தினைச் சார்ந்த சிலர். இவருடைய மகிமையைக் காணலாம் என்று கெட்ட எண்ணத்தோடு மனித உருவம் செய்து, அதற்கு விபூதி பூசி, ருத்ராட்சம் அணிவித்து பூணூலும் அணிவித்து சடையிட்டு, அதன்மீது ஒரு துணியைப்போட்டு அந்த உடம்பைப் பழங்கோயிலின் அருகே போட்டுவிட்டனர். ஒன்றும் தெரியாதவர்போல இங்குமங்கும் 1 2 தூரமாக நின்று கொண்டு, அக்கோயிலின் அருகே, முனிவரின் உடல் யாருமே இல்லாது தனியே கிடக்கிறது. பணமில்லாத காரணத்தினாலே அவரிடம் யாரும் வரவில்லை. இதுபோன்ற அதர்மத்தை எவ்வாறு பார்க்கமுடியும்? என்று சிலரை அழைத்து

அந்த உடலை எடுத்துக்கொண்டு சவுடய்யா இருக்கும் வழியாக வந்து கொண்டிருப்பதைப்பார்த்து, அது பொய்யான பொம்மை என்று நினைத்து, இந்த உலகத்தினை யார் அழிக்க வேண்டும் என்று நினைத்தாலும் அவரிடமிருந்து இவ்வுலகத்தைக் காப்பாற்றக்கூடிய சிவபக்தர்களின் மகிமைக்கு இது ஒரு பெரிய அதிசயமில்லை. இந்த உருவத்திற்கு நான் உயிர் கொடுக்கிறேன் என்று கூறி, சிவபக்தர்களின் பாதங்களை நினைத்து, பிரார்த்தனை செய்து அந்த இடத்திற்குச் சென்று, பொய்யான உருவத்தின் கையைப்பிடித்து, முனிவரே எழுந்திரு என்று கூப்பிடவும் அவர் உயிர்பெற்று எழுந்தார். அங்கிருப்பவர்கள் அனைவரும் விழுந்து வணங்கினர். "நீயே சிவன், நீயே என் குரு. என்னைக் காப்பாற்ற வேண்டும்" என்று அவரது காலில் விழ, அவரைச் சவுடய்யா லிங்கதாரண்யம் செய்து, இந்தச் செயலை யார் செய்தார்களோ, அவர்களை வெட்ட வேண்டும் என்று நினைத்தவுடன் அவர்கள் பயந்து தரையில் விழுந்து நமஸ்காரம் செய்து எங்களைக் காப்பற்ற வேண்டும். எங்கள் குற்றங்களை மன்னித்துக்காப்பற்ற வேண்டும் என்று அபயம் கேட்க, அவரும் சம்மதித்து, சைவசமயத்தில் அவர்களைச் சேர்த்து, எப்பொழுதும்போல இந்த உலகத்திலே வாழ்ந்தார். முசிடி சவுடய்யாவின் ஈடில்லாத இக்கதையை யார் கேட்டாலும் எழுதினாலும் படித்தாலும் சிவனது கருணையும் தேவ பதவியும் கிடைக்கும்.

### சூரிய சவுடய்யா கதை

இவர் கல்யாண கடகத்தில் வாழ்ந்த சிவபக்தர். இவர் இன்று, நாளை என்றில்லாது மூன்று வேளையும் அர்ச்சனை செய்து, பஞ்ச பதார்த்தங்களை அன்போடு கொடுத்து உபசரித்து வந்தார். ஜங்கமர்கள் சாப்பிட்ட பிறகு, தனது பிராணலிங்கத்திற்குப் பூசை செய்ய வேண்டும் என்று, தன் இதயத்தைக் கூர்மையான ஆயுதத்தால் அறுத்து, அங்கிருக்கும் பிராணலிங்கத்திற்கு தயாராக வைக்கப்பட்டு இருந்த பதார்த்தத்தைக் கொடுத்தார். சிவன் அதனை வாங்கி மகிழ்வோடு சாப்பிட்டார். இதுபோன்று மூன்று வேளையும் சவுடய்யா சுவாமிக்குப் பூசை செய்து வந்தார். கரிகால் சோழன் என்ற மன்னன் சிவனுக்கு தினமும் 360 படி அரிசி, மிளகு முக்குறுணி, காய்கறிகள் இவையும் இன்னும் பிறவும் சேர்த்து இறைவனுக்குப்

படைக்கிறார். அந்த பதார்த்தங்களின் பெயர் கூட சுவாமிக்குத் தெரியாது. அந்த உணவினைச் சிவனுக்குப் பரிமாறி, கையில் கத்தியை எடுத்து அங்கே ஒரு புறமாக நின்று கொண்டு இருப்பார். சிவன் சாப்பிடும் சத்தம் மட்டுமே தெரியவந்தது. இதுபோலக் கேள்விப்பட்டிருக்கிறோம். மாதா சென்னய்யா என்றவர் முதல் நாள் கஞ்சியைத் தன்னுடைய நாக்கைப் பாத்திரமாகச் செய்து, சிவனுக்கு அர்ப்பணம் செய்ய சிவன் சாப்பிட்டார் என்ற புகழை நாம் கேள்விப்பட்டு இருக்கிறோம். தாட்சாராமத்தில் வீர சோடவ்வா என்ற பெண்மணி, தாசியிடம் ஒரு பாத்திரத்தில் பொங்கலைக்கொடுத்து அனுப்ப, சிவன் அன்போடு கையில் எடுத்து அதனைச் சாப்பிட்ட பின் கோயிலுக்கு அந்தப்புரமாக அந்தப்பாத்திரம் விழும்படி போட்டு விட்டார் என்பதனையும் கேள்விப்பட்டு இருக்கிறேன். இப்பொழுது கல்யாண கடகத்தின் சவுடய்யா கொடுக்கிற சாதத்தைச் சிவன் சாப்பிடுகிறார், என்பதனைக் கண்ணால் காண்கிறோம். அங்கே பக்தர்கள் அனைவரும் அவரைப் புகழ்ந்து பாராட்டினர். இதுபோன்ற பக்தரான சவுடய்யாவின் கதையை யார் கேட்டாலும் படித்தாலும், மதித்தாலும் அவர்களுக்கு எல்லா பாக்கியங்களும் கிடைக்கும்.

## தெலுங்கு சொம்மையா

கல்யாண கடகத்தில் இவர் லிங்கார்ச்சனை செய்து கொண்டு வாழ்ந்து வந்தார். ஸ்ரீசைலத்தின் சிவானந்தன் என்கிற முனிவர் யாருமே இல்லாத இடத்தில் தபம் செய்து கொண்டிருந்தார். தபம் செய்து கொண்டிருக்கும்போது காலின் நகங்கள் மிகுதியாக வளர்ந்து, பூங்கொடி போன்று படர்ந்தன. இவரது தலைமுடி நீளமாய் வளர்ந்து உடம்பெல்லாம் மறைத்தது. நீலமலை போல அவர் தோற்றம் அளித்தார். அவருடைய சிஷ்யர் ஒருவர் தேவையான போது கந்த மூலங்களைக் கொடுத்து விடாது பார்த்துக்கொண்டு வருகிறார். கந்தர்வபெண்களும் அவர்களது கணவன்மார்களும் அங்கே வந்துபோகும்போது என்ன? விநோதமாய் இருக்கிறதே! வெள்ளைக்கொடி போலவும் கறுப்பாயும் இருக்கிறதே. சிலை என்று நினைத்தால் சிலையில் கொடி எப்படி இருக்கும்? கரடியாக இருக்குமோ? வயதான காரணத்தால் அங்கும் இங்கும் நகரமுடியாது இருக்கின்றதோ? என்று நினைத்துக் கொண்டிருந்தனர். அருகே

வந்து ஆராய்ச்சி செய்தனர். இது கண்ட சிஷ்யருக்குக்கோபம் வந்தது. பார்த்தால் தெரியவில்லையா? இவர் பரமயோகானந்த மூர்த்தி. வேறுவழியாக இவரை நீங்கள் நினைக்கலாமா? இவரை விலங்காகப் பார்த்த தவறுக்கு இந்தப்பூமியில் நீங்கள் விலங்காகப் பிறக்கவேண்டும் என்று சாபம் கொடுத்தார். அவர்கள் பயந்து அவரது காலில் விழுந்து சுவாமி! நாங்கள் கூறியது தவறுதான். நாங்கள் நையாண்டி செய்யவில்லை. இது எங்களது அஞ்ஞானத்தினாலே ஆயிற்று. எங்கள் கர்ம பலனை நாங்கள் அனுபவித்துத்தான் ஆக வேண்டும். எங்களுக்கு சாப விமோசனம் எப்பொழுது? எப்படி கிடைக்கும்? அதனைச் சொல்லி எங்களுக்குக் கருணைகாட்டவேண்டும் என்றனர். அதற்கு சிஷ்யர், எனது சாபம் உறுதியாக நடக்கும். சொல்வதற்கு இனி என்ன இருக்கிறது? உடனே விலங்காகப்பிறவி எடுங்கள். கல்யாண கடகத்தின் அருகில் உள்ள காட்டிலே நீங்கள் விலங்காகத் திரியும்போது, சிவபக்தரான தெலுங்கு சொம்மையா கையால் உங்களுக்கு இறப்பு நிகழ்ந்தால், உங்களுக்குச் சாபவிமோசனம் கிடைக்கும். இறந்த மாத்திரத்திலேயே நிரந்தர மோட்சம் உங்களுக்குக் கிடைக்கும் என்று கூறியவுடன் அப்படியே ஆகட்டும் என்று கூறி, அவர்கள் அந்தக்காட்டிற்குச் சென்று மிருகங்களாய்ப் பிறப்பெடுத்து, சொம்மையாவை எதிர்நோக்கி வாழ்ந்து கொண்டிருந்தனர்.

அப்பொழுது ஒருநாள் சொம்மையா சிவபூசைக்கு வில்வ மலர்களைக்கொண்டு வருவதற்காகக் காட்டிற்குச் சென்றார். இந்த விலங்குகள் அவரைப்பார்த்தவுடன் இவராகத்தான் இருக்க முடியும் என்று நினைத்து, அவரைச் சுற்றிக்கொண்டு கதற ஆரம்பித்தன. ஒரு விலங்கு மட்டும் வாய்திறந்து இறப்பு உங்களால் கிடைத்தால்தான் சாபவிமோசனம் கிடைக்கும் அதைத்தவிர எங்களுக்கு சாப விமோசனம் இல்லை என்று முன்பு நடந்தது அனைத்தையும்கூறினர் நாங்கள் கந்தர்வர்கள். ஒரு விளையாட்டிற்காவது வேட்டையாட வா என்றனர். நீ நம்பாவிட்டால் ஒரு நிகழ்ச்சி நடக்கும். உன் கையினால் எங்களுக்குச் சாப விமோசனம் கிடைக்கும்போது ஒரு விமானம் மேலேயிருந்து வந்து, இம்மக்கள் அனைவரும் காணும்படியாக எங்களை அழைத்துச்செல்லும். உண்மையில் அவரது சாபம் எங்களுக்கு வரமாகத்தான் தெரிகிறது. நாங்கள் முதலில்

கந்தர்வலோகத்தில் இருந்தோம். இப்பொழுது உன்கையில் எங்களுக்குச் சாபவிமோசனம் கிடைக்கும் என்று புகழ்ந்து பேசியது. ஞான திருஷ்டியினால் அதனை உண்மை என்று அறிந்து கொண்டு சொம்மையா வீட்டிற்கு வந்தார். வீட்டிற்கு வந்து தலைக்குப்பச்சைத் தலைப்பாகையைக் கட்டிக்கொண்டு, அம்பு போன்றவற்றை எடுத்துக்கொண்டு, தன்னுடன் நிறைய ஆட்களை அழைத்துக்கொண்டு சிங்கத்தைப்போன்று வலிமையுள்ள நாயுடனும் காட்டிற்குள் நுழைந்தார். காட்டிற்குள் நுழைந்தவுடனே மிருகங்கள் சந்தோஷப்பட்டு அவரது அருகில் வந்தன. இவர் பாணத்தைப்போட்டவுடன் அவை அனைத்தும் சாபவிமோசனம் பெற்றன. கந்தர்வர்களாக மாறின. அவரை வணங்கி திவ்யவிமானத்தில் ஏறி சிவலோகம் செல்ல ஆரம்பித்தனர். இதனைப்பார்த்து உடன் வந்திருப்பவர்கள், இவர் தான் மகாபுருஷன் இவர் தான் இவ்வுலகத்தின் சிவன் என்று அவரைப் பாராட்டத் தொடங்கினர்.

குருதியானம் என்ற ஆயுதத்தில் சம்சாரம் என்ற சிங்கத்தைக் கொன்று, பக்தர்களைத் தரிசித்தல் என்ற கதையில் பூர்வஜன்மத்தில் செய்த பாவம் என்ற புள்ளிமானை கொன்று, 'சத்பக்தி' என்ற கத்தியாலே 'மாயாபிரபஞ்சம்' என்ற காட்டெருமையைக் கொன்று, புகழ்பெற்ற 'சிவாச்சாரம்' என்ற கத்தியால் 'சைனசமயம்' என்ற சிறுத்தையை வெட்டி, விமல பிரசாதம் என்ற வில்லை நன்றாக இழுத்து, இந்திரியங்கள் என்று சொல்லப்படுகின்ற மானைக் கீழே விழச்செய்தார். அம்பினை எடுத்து மனைவி, மக்கள், பணம் என்ற ஈசனாத்திரையம் என்ற கரடியின் கண்களைக்குத்தினார். பரமதங்களைச் சொல்கின்றவர்களை வெட்டிய இவருக்கு இது பெரிய விசயமில்லை. இவரது காலடியில் விழுந்து இறந்துபோன இந்த விலங்குகளுக்கே மோட்சம் கிடைக்கிறது எனில், அவரிடம் பாணம் போடப்பட்டவர்கள் சிவலோகத்திற்குச் செல்வது அதிசயமா? என்று பசவண்ணா அவரைப்புகழ்ந்து பேசினார். கல்யாண கடகத்தில் வாழ்ந்து வந்த தெலுங்கு சொம்மய்யாவின் புனிதமான இக்கதையைக் கேட்டவர்க்கு இராஜாபிஷேகம் கிடைக்கும், சிவபதவியும் கிடைக்கும். சிவனது பாதத்தாமரைகளுக்கு வண்டு போல் இருக்கிறவனும், சங்கமர்களை எப்பொழுதும் மகிழ்விக்கிறவனுமாகிய பால் குரிகி சோமநாதர் எழுதிய 5வது அத்தியாயம் முடிந்தது.

# ஆறாவது அத்தியாயம்

## ஏகாந்த இராமய்யா கதை

இவர் தினமும் சிவார்ச்சனை முடித்தபிறகு தேவலோகத்திற்குச் சென்று, அங்கே வீரபத்திரன் முதலான தேவகணங்களை வணங்கி, அவர்களைப் புகழ்ந்து பாடி, ஏகாந்த சுகத்தை அனுபவித்து மீண்டும் பூமிக்கு வருவார். மூன்று வேளையும் இது போன்று அவர் செய்து வந்தார்.

பசவனது சிவபக்தியைப் பற்றி தெரிந்து, மாறுவேடத்தில் அவர் இருக்கும் இடத்திற்கு ஏகாந்த ராமய்யா வந்தார். பசவனைப்பார்த்து, கடகம் என்ற ஊரிலே, ஏகாந்த ராமய்யா தனியாகப் போய்க்கொண்டிருக்கும்போது சமணர் ஒருவன் செருப்பினைக்கழற்றாது, நேரடியாகச் சிவன் கோயிலுக்குள்ளாக நுழைந்தான். ராமய்யா இதனைப்பார்த்து, கோபமடைந்து, என்னடா? இந்தப் பாவத்திற்கு என்ன நிவர்த்தி இருக்கிறது? இந்த சிவாலயத்திற்குள்ளாக செருப்புக்காலுடன் போவது தவறு. தெரியாது வந்து விட்டேன் என்று கூறிவிட்டு, செருப்பினைத்தூரமாகப் போட்டுக் கீழே விழுந்து சிவனை வணங்கு. அப்படிச் செய்யத்தவறிவிட்டால் யமனுடைய இடத்திற்குச் சென்று துன்புறுவாய். செருப்புடன் இங்கேயே இருந்தால் உன்னைத் துண்டு துண்டாக வெட்டுவேன் என்றார்.

அதற்கு அவன், எதற்காக இப்படி கோபப்பட்டுக் கூச்சலிடுகிறாய்? நீதான் சிவன் கோயில்களை எல்லாம் காப்பாற்றுபவனா? நீதான் உண்மையான பக்தனா? உனக்காக நான் ஏன் பயப்படவேண்டும். கோயில் என்றால் பள்ளி தான், தெய்வம் என்றால் மகாவீரர் தான். நீ எதுவும் பேசாதே. இல்லையென்றால் உனது தலையை வெட்டிவிட்டு சிவனருளாலே மீண்டும் பெறுவாயா? பார்க்கலாம். அப்படிச்செய்தால் நீதான், பக்தன், இந்தச் சிவன்தான் கடவுள் என்கிறான்.

உடனே, இவர் இவனைக் கொல்லுவது பக்தியாகாது. இவன் சொன்னபடி எனது தலையைக் கொடுத்து சைன சமயத்தை அழிக்கிறேன் என்று தனக்குள்ளே கூறிக்கொண்டு, அவனைப் பார்த்து, பரமதங்களைச் சார்ந்தவனே! தலையைக்கொடுத்துத்

திரும்பப்பெறுவது அதிசயமல்ல, எங்கள் பக்தர்களின் புகழினை நீ கேட்பாயாக!.

சம்பூர் மகாகாளன் என்ற சிவபக்தன் தலையைச் சிவனுக்குக் கொடுத்து, இந்த உலகமறிய மறுபடியும் பெற்றார். அந்தச் செய்தியைக் கேட்டு கோபமடைந்து, கல்யாண கடகத்தில் இருக்கிற கோவிந்த பட்டாரகன் என்ற சிவபக்தன் சிவனுக்குக் கொடுத்த தலையை மறுபடியும் வாங்குவது தவறு என்று கூறி, தன்னுடைய தலையைக் கொடுத்து, மூன்றாவது நாள் வேறொரு தலையைப் பெற்றார். இன்னொரு பக்தராகிய மொரடத வங்கய்யா என்பவர் மூன்று நாள் சிவன் அங்கு இருந்தானா? இல்லையா? என்று கூறி, தலையை வெட்டி, சிவனுக்குக் கொடுத்தார். தலை திரும்பவும் முளைத்து வந்தது. திரும்பவும் வெட்டினார்; முளைத்து வந்தது. இதுபோல தலை கீழே திரும்பவும் விழவே. சிவன், அதிர்ச்சியடைந்து, என்னால் மூச்சே வாங்க முடியவில்லை. நான் தோற்றுப் போனேன். உன்னுடைய கத்தியைக் கீழே போடு. உன் வீரபக்திக்கு முன் நிற்க என்னால் இயலுமா? என்று கூறி சிவன் அவரது கையைப்பிடித்து, அன்போடு தலைகள் அனைத்தையும் அணிந்தார். வங்கையா சிவன் இதயத்தில் ஒரு நிலையான இடத்தைப்பெற்றார். இது போன்ற பக்தர்கள் நிறைய இருக்கிறார்கள். கெட்ட உள்ளம் படைத்தவனே! சைனர்களைத் துரத்தியடித்த சிவபக்தர்களின் மகிமை உனக்குத்தெரியாது?

### திருநாவுக்கரசு கதை

திருநாவலூர் என்ற ஊரிலே திருநாவுக்கரசர் என்ற சைனகுரு ஒருவர் இருந்தார். அவர் சைன சமயத்திற்கே ஆச்சாரியராய் இருந்தார். அவர் வயிற்று வலியால் கீழே விழுந்து துடித்துக்கொண்டிருந்தார். அப்பொழுது அவரது தமக்கை வந்து பார்த்து, இந்த மந்திர தந்திரத்தினாலே உனக்கு இந்த நோய் தீராது. நீ சிவனின் மந்திரத்தினைக்கற்றுக்கொள். நீ உயிரோடு வாழ்வதற்கு இதுவே வழி. உனக்கு இந்த நோய் உடனே தீர்ந்து விடும். உனது எண்ணங்கள் ஈடேறும் என்றார். அவரும் நான் சிவபக்தனாக ஆகிவிடுகிறேன். சந்தேகம் வேண்டாம் என்று சபதம்

செய்கிறார். உடனே, அந்தம்மையார் காலதாமதம் செய்யாது, சிவபக்தர்களை வரவழைத்து, ஈடில்லாத திவ்ய பஞ்சாட்சர மந்திரத்தினாலேயே பஸ்மத்தை உடம்பெல்லாம் அணிந்தவுடன் நோய் ஆச்சரியமாகக் குறைந்து விட்டது. அவர் தமக்கைக்கு சாஸ்டாங்க நமஸ்காரம் செய்து, உன்னால் நான் உயிர்பெற்றேன். இனிமேல் சிவ பக்தனாகிறேன். இது சிவன் மீது ஆணை என்றார். நாபகலூர் என்ற ஊருக்குச்சென்று, குருமூர்த்தியைப் பார்த்து, திருநாவுக்கரசர் சாஸ்டாங்க நமஸ்காரம் செய்து நிற்கிறார். குருவும் மகிழ்ந்து அவரைத்தனது சீடராக்க நினைத்து, தனது பார்வையினாலே அவரது முன்வினை பாவங்களைப் போக்கடித்து, திருநீற்றுச் செல்வத்தை அவருக்குக் கொடுத்து நெற்றியில் இருக்கிற தீவினைகளைப் போக்கடித்து, சிவதீர்த்தத்தால் அவருக்கு அபிஷேகம் செய்து, லிங்கத்தினை அவருக்குக் கொடுத்து, சிவரகசியங்களை அவருக்குத் தெரியப்படுத்தினார். அவரைச் சிறந்த சிவபக்தனாக மாற்றினார். திருநாவுக்கரசரும் சிறந்த சிவபக்தனாக வாக்கில், செயலில் தனது உடல், உயிரைக் கடவுளுக்கு அர்ப்பணம் செய்து, விபூதி ருத்ராட்சம் அணிந்து வாழ்ந்து வந்தார். சைனர்கள் இவர் வேறு மதத்திற்குச் சென்று விட்டார் என யானையின் பாதத்தின் அடியில் தள்ளவே, யானையும் இவரைத்தொடப் பயந்தது.

யானையின் தோலை அணிந்திருக்கிறவரின் அடிமையை யானை என்ன செய்யும்? விஷம் வைத்தும் வெற்றியோடு நின்றார். விஷத்தை அழித்தவரின் சேவகனுக்கு விஷம் என்ன செய்யும்? நெருப்பிலே தள்ளியவுடன் நெருப்பு குளிர்ந்தது. நெருப்பு வண்ணனாகிய சிவனின் அடியாரை நெருப்பு என்ன செய்யும்? நீரில் மூழ்கடிக்க வேண்டும் என்று நினைத்தும் முடியவில்லை. தண்ணீரைத் தலையில் வைத்திருக்கக்கூடிய சிவனது அடிமையை நீர் என்ன செய்யும்? எந்த விதத்திலும் இவரைக் கொல்ல முடியவில்லை. இவர் அவர்களைக் கொன்று விடுவாரே! என நினைத்து அவரைச் சரணடைந்தனர். இவர் கெட்ட குணமுடைய சைனர்களைப் பார்த்து, முன்னிருந்த அடியாட்கள் அடையாளங்களை மாற்றி, ருத்ராட்சம், திருநீறு, பஞ்சமுத்திரை இவற்றை அணியச்செய்து, மிகுந்த கோபத்தோடு சைன விக்கிரகங்களைத் தூள் தூளாகச் செய்து,

சைனக்கோயில்களைக் கீழே தள்ளினார். சைன சமயக்கோலாகலன் என்ற விருது அவரை அடைந்தது.

## இருத்தாண்டிக் கதை

திருவாலூர் என்ற ஊரில் இருத்தாண்டி என்ற சிவபக்தர் இருந்தார். அவர் பிறவியிலேயே கண்ணில்லாதவர். சிவ அபிஷேகத்திற்காக கோயிலின் அருகே ஒரு குளம் கட்ட நினைத்தார். மண்வெட்டி, தட்டு இரண்டையும் எடுத்து கயிறை அடையாளமாகக் கட்டி, வெட்டிக்கொண்டே சென்றார். தினமும் இதுபோலச் செய்து வந்தார். சைனர்கள் இவரது வேலையைத்தடை செய்ய வேண்டுமென நினைத்து, நிறைய துன்பங்களை விளைவித்தனர். இறுதியில் அவர் கட்டியிருந்த கயிற்றினை அறுத்து, உளியினை வேறு இடத்திலே வீசியெறிந்தனர். உடனே, அவர் சிவனருளாலே தனது கண்களைப் பெற்றார். சைனர்களின் கோயில்களைத் தேடித்தேடி வேட்டையாடி தூள் தூளாகுமாறு செய்தார். சைனர்கள் அனைவரையும் குருடர்களாக ஆக்கினார். இதுபோல இருத்தாண்டி தனது பக்தியை வெளிப்படுத்தினார்.

## பிள்ளை நயினார் கதை

ஸ்ரீகாளி என்ற ஊரிலே ஒரு சிவபிராமணருக்கு சுப்பிரமணியசுவாமியின் அம்சத்தில் பிள்ளை நயினார் பிறந்தார். ஒரு நாள் தந்தை பையனை இடுப்பில் வைத்துக்கொண்டு, குளத்திற்கு நீராடச் சென்றார். குளத்தின் கரையிலே குழந்தையை வைத்து விட்டு தந்தை நீரில் மூழ்கிக் குளித்தார். அப்படிக்குளிக்கும்போது, மேலே சிவபார்வதி இருவரும் விமானத்தில் போய்க்கொண்டிருக்கும்போது பையனைப் பார்த்து, இந்தச் சிறுவன் நமது மகன் முருகன் போலே இருக்கிறானே! என்று கூறியபடியே குழந்தைக்குப் பால் கொடுப்பதற்காக கீழே இறங்கி வந்து, குழந்தையை அணைத்து, அக்குழந்தைக்குச் சிவதீட்சை கொடுத்து, சிவபக்தனாக்கி பால் கொடுத்து கொஞ்சம் பாலை பொற்கிண்ணத்தில் எடுத்து அங்கே குழந்தையின் கையிலே கொடுத்துவிட்டு, சென்று விடுகின்றனர். தண்ணீரில் மூழ்கி குளித்துக் கொண்டிருந்த பிராமணர் எழுந்து, தன் மகனைப் பார்த்து என்னடா மகனே! உனக்குப்பால்

கொடுத்தது யார்? இங்கு யார் வந்தார்கள்? எங்கு சென்றார்கள்? எங்கு இருக்கிறார்கள் சொல்! என்று கூறி, கையிலுள்ள பூணூலால் அக்குழந்தையை அடித்தார். அந்தச்சிறுவன் சிரிப்பும் அழுகையும் கலந்து, கண்ணீர் முகத்தை நனைத்துவிட, என்னை ஏன் அடிக்கிறாய்? அப்பா நீ கேட்பாயாக! ஆகாயத்தில் போய்க் கொண்டிருந்த சிவனும் பார்வதியும் வந்தனர். பார்வதி, வந்து எனக்குப் பால் கொடுத்தார். அப்புறம் பொற்கிண்ணத்தில் கொஞ்சம் பாலைக்கொடுத்து, சிவனிடம் சென்றுவிட்டார் என்றான் சிறுவன். அதனைக்கேட்டு பிள்ளையின் தந்தை அதிசயப்பட்டு, சிவனையும் பார்வதியையும் நோக்கிக் கீழே விழுந்து வணங்கி, குடும்பத்தோடு மகிழ்ச்சியாக வாழ்ந்தனர்.

பார்வதி தந்த பாலைக்குடித்ததனாலே ஞானசம்பந்தருக்குப் பூரண ஞானம் கிடைத்தது. வாக்கில் திறமை வந்தது. கோயிலுக்குச் சென்று பார்வதியைப் புகழ்ந்தார். சிவன் அவருக்குப் பரிசாகப் பொன்னாலான தாளத்தைக் கொடுத்தார். இவர் அந்நிய மதங்களுக்கு வால் நட்சத்திரம் போன்று இருந்தார். இதுபோன்று இவர் குலோத்துங்க சோழ ராஜாவை சிவபக்தனாக மாற்றினார். இரண்டாயிரம் சிஷ்யர்கள் இருக்கிற பௌத்த குருவைத் துரத்தி அடித்தார். இரண்டாயிரம் பௌத்தர்களையும் சிவபக்தர்களாக மாற்றினார்.

திருமரக்கடா என்ற ஊரிலே இருக்கிற சிவன் கோவிலைத் திறந்து வைத்து, திருநாவலூர் வந்தார். திருநாவலூரிலே சைனர்களை வென்றார். பாம்பு கடித்ததனாலே உயிர்போன வேறு சமயத்தைச் சார்ந்தவனுக்கு உயிர்கொடுத்தார். மதுரை ராணியின் விருப்பத்திற்காக மதுரைக்கு வந்தார். அங்கு அவர் வந்தவுடன் சைனர்களும் பௌத்தர்களும் மன்னனிடம் திரண்டு சென்று ஞானசம்பந்தன் என்ற சிறுவன் வந்திருக்கிறான். வேதத்தில் சொல்லப்படாத மதங்களுக்கு எல்லாம் நான்தான் வால்நட்சத்திரம் என்கிறான். அதனால் அவனை இவ்வூரைவிட்டு வெளியே அனுப்பிவைக்க வேண்டும் என்று கூறினார்கள்.

அப்பொழுது மன்னன், "அச்சிறுவன் சோழமன்னனுக்குக் குருவானவன். அவனை ஊரைவிட்டு வெளியே செல் என்று கூறுவது

சரியல்ல. எந்த மதத்தினாலும் அவனை வெல்வீர்களானால் அவ்வாறு செய்யலாம்" என்று கூறினார். அப்பொழுது மதுரையில் இருந்த 18 ஆயிரம் சைனர்கள் ஒன்று சேர்ந்து கலந்து பேசி, நடு இரவில் அவர் இருக்கும் வீட்டிற்கு நெருப்பு வைத்தனர். உடனே, அக்னிதேவன் பயந்து ஞானசம்பந்தரின் முன் நிற்கிறார். அவரைப்பார்த்து, என்னடா! இந்த வீட்டை எரிப்பதற்காகவா நீ வந்தாய்? வீரபத்ரன் உன்னை நடுங்கச் செய்து உன் நாவினையும் கையையும் வெட்டியிருக்கிறானல்லவா? அது மட்டுமல்லாது உன் மூக்கைக்கூட அறுத்துவிட்டான். சைனர்களாயினும் வேறு யாராயினும் அவர்களது பலத்தைப் பார்க்கலாம். நீ சென்று மன்னனை வெப்பக்காய்ச்சலால் துன்பப்படச்செய். உன்னை நான் காப்பாற்றுகிறேன் என்று கூறியவுடன், அக்கினிதேவன் மன்னனிடம் சென்றான். மன்னனுக்கு வெப்பக்காய்ச்சலை ஏற்படுத்தித் தவிக்கச் செய்தான். மன்னனின் மனைவியான மங்கையர்க்கரசி, தனது கணவனின் அனுமதிபெற்று, ஞானசம்பந்தரை வரவழைத்து, காலில் விழுந்து பிரார்த்தனை செய்தார். மன்னனின் உடம்பில் இருக்கக்கூடிய நோயைத் தீர்க்கும் சக்தி, உங்களில் யாருக்கேனும் இருக்கிறதா? நான் வலது பக்கம் நீங்கள் இடதுபக்கம். நீங்கள் என்ன செய்வீர்களோ? அதனைச் செய்யுங்கள் என்று விபூதியை எடுத்து, மந்திரித்துத் தடவ வலது பக்கம் இருக்கும் நோய் தீர்ந்து விட்டது. இடது பக்கம் நோய் தீருவதற்கு மாறாக, அதிகரித்தது.

மன்னன் ஞானசம்பந்தனைப் பார்த்து, ஆபத்தில் இருப்பவர் அழுதுகொண்டே பிரார்த்திப்பவர் போல பிரார்த்தனை செய்தார். தனது காய்ச்சலைக் குறைத்து விடுமாறு கேட்டார். ஞானசம்பந்தர் மறுபடியும் திருநீற்றைத் (மூன்று முறை) தடவி, அவரைத்தொட்டவுடனே, அதற்கு முன் மன்னனுக்கு இருந்த கூனும் நிமிர்ந்தது. நீ இந்த மண்ணை விட்டுச் செல்லும்போது தான் இந்தக் கூன் செல்லும் என்ற பேச்சும் போய்விட்டது. ஞானசம்பந்தர் மன்னனுக்கு திருப்பிடி கழித்தார். கூன்பாண்டியன் என்ற பெயர் மாறி சுந்தரபாண்டியன் என்ற பெயர் மன்னனுக்கு வந்தது. மன்னனும் மன்னனது மனைவியும் விழுந்து வணங்கி ஞானசம்பந்தரைப் புகழ்ந்தனர்.

பிறகு, சைனர்கள் சிவமந்திரம் எழுதப்பட்ட ஓலை, சைன மந்திரம் எழுதப்பட்ட ஓலை இரண்டினையும் நெருப்பில் போட, எது நெருப்பில் கரையாது இருக்கிறதோ, அவரே வெற்றிபெற்றவர் என்றனர். அதற்கு ஞானசம்பந்தர். இதில் தவறென்ன? தராசுத்தட்டில் வைத்து நிறுத்துப் பார்க்கும்போது பொன்னும், எறும்பும் சரியாகி விடுமா? பாலும் கள்ளும் சமமாகுமா? சந்தனமும் விறகும் எடைபோடும் போது சமமாகி விடுமா? அதுபோல சிவமந்திரம் எழுதிய ஓலையும் சைனமந்திரம் எழுதிய ஓலையும் சமமாகிவிடுமா? என்று கூறி, ஐந்து வயதுச் சிறுவனாகிய ஞானசம்பந்தன் 'சிவா' என்ற இரண்டெழுத்தினை மட்டும் ஓலையில் எழுதினார். மன்னன் எரிந்து கொண்டிருந்த நெருப்பில் இரண்டு ஓலையையும் இட்டார். போட்டுவிட்டு கையினை எடுக்கும் முன்னரே சைனமந்திர ஓலை நெருப்பில் எரிந்து சாம்பலாகியது. சிவ மந்திரம் எழுதப்பட்ட ஓலை மட்டும் சூரியனைக்கண்ட தாமரைப்போல் பிரகாசித்தது. சைனர்கள் மீண்டும் தலை போனாலும வால்மட்டும் போகாதபடி, நன்றாகப் பரீட்சித்துப் பார்க்கவேண்டும். சிவமந்திரம் எழுதிய ஓலையையும் சைன மந்திரம் எழுதிய ஓலையையும் காவேரி நீரில் போட நீரில் எது அடித்துச் செல்லப்படுகிறதோ? அது உபயோகம் இல்லாதது. எது நீரில் எதிர்த்து வருகிறதோ? அது உபயோகம் ஆனது என்று சைனர்கள் கூறினார்கள். சரி, செட்டியாரைக் கையினால் குத்தினால் மீண்டும் குத்து என்று கூறிவிட்டுச் சென்றுவிடுவார். அதுபோல் நீங்கள் சென்று விடாதீர்கள். மன்னா! தோற்றுப்பபோனவர்களை வெறுமனே செல்ல அனுமதிக்கக்கூடாது. மக்களனைவரும் அறியும்படி, சூலத்தை நெருப்பிலிட்டுச் சிவப்பாக்கி அதனை அவர்கள் மீது பாயும்படிச் செய்ய வேண்டும் என்றார். மன்னனும் அப்படியே ஆகட்டும் என்றார். ஓலைகளைத் தண்ணீரில் போட்டவுடன் சிவமந்திரம் எழுதப்பட்ட ஓலை தண்ணீரில் எதிரே வந்தது. சைனமந்திரஓலை ஆற்றில் அடித்துச்செல்லப்பட்டது. போலியான மந்திரங்களைக் கூறினால் வேலை நடக்குமா? பிள்ளை நயினாராகிய ஞானசம்பந்தர் மன்னனை உண்மையான சிவபக்தராக மாற்றினார். 18 ஆயிரம் சைனர்களைக் கூட்டிக் கொண்டு வந்து, நன்றாகக் காய்ச்சிய சூலத்தினை அவர்கள்மீது பாய்ச்சச்செய்தார். இதுபோன்று ஞானசம்பந்தர் செய்தாரல்லவா? நீங்கள் அதனைக் கேட்கவில்லையா?

### நெடுமாறன் கதை

நெடுமாறன் என்ற மன்னன் தன் ஆட்சிக்குட்பட்ட மற்ற அனைவரும் சைனசமயத்தவராய் இருப்பதனைக் கண்டு மருந்திறுக்காவது சிவபக்தர்கள் இல்லாவிட்டால் எப்படி? என்று கவலைப்பட்டுக்கொண்டு இருந்தார். அப்பொழுது பாண்டி நாட்டிற்கு, ஞானசம்பந்தர் வந்திருக்கிறார். சைனர்களின்மீது சூலத்தினைப் பாய்ச்சுகிறார் என்று கூறினர். உடனே நெடுமாறன் தன்நாட்டில் இருக்கிற மந்திரம் கூறுகிறவர்களை அழைத்து, அவர்களிடம் வேதங்களில் கூறப்படாத விஷயங்களைக்கூறி மக்களை ஏமாற்றி கொண்டிருக்கிறீர்களே! வேதத்திற்கு மாறாக இருக்கின்ற புத்தியில்லாதவர்களே! மனிதனாக வந்திருக்கக்கூடிய இச்சிறுவன்தான் ஈசன், கடவுள் என்று கூறுகிறார்கள். பசுபதியைத் தெரியாதா? பசு போன்று இருப்பவர்களே! கெட்ட போதனைச் செய்து, திருநீற்றின் மகிமையினை அறியாதிருக்கிற பாவிகளே! என் மக்களைக் கெட்ட வார்த்தைகளால் பேசி அவர்களைக் கெடுத்துக் கொண்டிருக்கிறீர்களே! பிள்ளை நயினார் என்ற சிவபக்தர் பாண்டிய நாட்டிலே வேத, புராண, சாஸ்திர, சம்பிரதாயமாய், சிவனே உண்மையான கடவுள் என்று நிரூபித்து, சைன, பௌத்த மதம் என்ற பெயரே இல்லாது அழியும்படி, செய்துவிட்டார். அவர்கள் இருவரையும் இரும்புச்சூலம் உடம்பில் பாயும்படிச் செய்தார். அதனால், சிவனை அனைவரும் பூசியுங்கள் அவ்வாறு பூசை செய்யாவிட்டால், இங்கிருக்கும் அனைவருமே நெருப்பிலே சூடேற்றிய சூலத்தால், உங்களைத்தலைகீழாக்கி, உங்கள் உடம்பில் பாயும்படிச் செய்வேன். சிவபக்தரான ராஜா கையில் கத்தியை வைத்துக்கொண்டார், ஆடு எப்படி பயந்து ஓடுமோ, அது போன்று அவர்கள் பயந்து ஓடினர். பின்பு, ராஜா அவர்கள் அனைவரையும் சிவபக்தி உள்ளவர்களாக மாற்றினார். இது போன்ற நெடுமாற மன்னனின் சிவபக்தி உனக்குத் தெரியாதா?.

### நமிநந்தி கதை

திருவாலூர் என்ற ஊரில் நமிநந்தி என்ற பக்தர் இருந்தார். அவர் கஷ்டப்பட்டு சம்பாதித்து சிவனுக்கு ஆயிரம் விளக்கு ஏற்ற

வேண்டும் என்ற விரதத்தினைக் கடைபிடித்தார். அதற்காகப் பணம் சம்பாதித்துக் கொண்டிருந்தார். சைனர்கள் ஒன்று சேர்ந்து, இதனைத் தடுக்க வேண்டும் என்று நினைத்து, நிறைய யோசனை செய்தனர். பாழாய்ப்போன இந்தக் கோயிலில் எப்படியும் ஆயிரம் விளக்குகளை ஏற்றி வைக்கிறான். அதனால், இந்த ஊரில் யாரும் அவனுக்கு நெய் ஊற்றாவிட்டால் தானே சென்று விடுவான் என்று எண்ணி, அவருக்குச் சிறிதும் நெய்கிடைக்காதபடி செய்தனர். அவர் சிவாலயத்திற்கு வந்து, சிவனே! நெய் எங்குமே கிடைக்கவில்லை. விளக்குகள் அணைந்துவிட்டால் நான் உயிரை விட்டுவிடுவேன் என்றார். அப்பொழுது சிவன் காட்சிகொடுத்து, அபிஷேகம் செய்வதற்காக நீர் எடுக்கும் கிணற்றில் இருந்து நீரினை எடுத்து, விளக்கை ஏற்று, எரியும். அநியாயம் செய்கின்றவர்களின் பசுக்கள் இன்றே இறந்துவிடும் என்றார். இவர் மிகுந்த மகிழ்ச்சியுடன், இறைவன் குறிப்பிட்ட கிணற்று நீரை எடுத்து, கோடி தீபங்கள் பிரகாசிக்கும்படிச் செய்தார். அவ்வாறு இருக்கும்போது, அந்த ஊரில் கதறுவதற்குக்கூட கன்று இல்லாது அனைத்தும் அழிந்து விட்டன.

"கோயிலில் இருக்கும் கிணற்று நீரை எடுத்து கோடி விளக்கினை கோயிலுக்கு ஏற்றி இருக்கிறானே? இது என்ன அதிசயம்? சிவபக்தர்களுக்கு இவ்வளவு மகிமை இருக்கிறதே? நாம் நெய் கொடுக்காத காரணத்தால் அவர் கோபப்பட்டு சாபம் கொடுத்தார். இல்லையென்றால் இடி விழும்படி இந்தப்பசுக்கள் அனைத்தும் இறந்து போகுமா? இதில் தவறு யாது இருக்கிறது?" என்று சைனர்கள் அனைவரும் இவரிடம் வந்து, விழுந்து வணங்கினர். உடனே நமிநந்தி பசுக்களுக்கு உயிர்கொடுத்தார். சைனர்களுக்குச் சிவதீட்சை கொடுத்தார்.

### சாக்கியத் தொண்டன் கதை

சோழ மண்டலத்தில் சாந்த மங்கையா என்ற ஊரில் சாக்கியத் தொண்டன் என்பவர் பௌத்த குடும்பத்தில் மகனாகப் பிறந்தார். பூர்வஜென்ம புண்ணியத்தினால் சிவபக்தி உண்டாயிற்று. இவர்கள் என்னைச் சிவபக்தனாய் வாழவிடமாட்டார்களா? என்று எண்ணுகிறார். சிவ பக்தனாக இல்லாத வாழ்க்கை எதற்கு? அது ஒரு வாழ்க்கை

அல்ல. சிவ பக்தன் என்ற பெயரையே காதால் கேட்கமுடியவில்லை. ஏன் இப்படி இருக்கிறது? சிவபக்தியில்லாத உரீனனின் வயிற்றில் நான் பிறக்கும்படிச் செய்யலாமா? என் மீது கருணையில்லாது ஏன் இப்படி செய்தாய்? சிவனே! உன்னைப் பூசை செய்வதற்கான உபாயமே தெரியவில்லை? சைன, பௌத்த, சார்வாக மதங்கள் வேதத்திற்கு மாறானவை. இவை மூன்றையும் நிர்மூலமாக்கி விடும் வரையில் நான் மூன்று வேளையும் மூன்று கல்லை எடுத்து உன்மேல் போடுவேன். இதுதான் என் விரதம் என்று கூறி, அதுபோலச் செய்து வந்தார். அப்பொழுது ஆறு, ஏழு நாட்கள் வெள்ளம் கரைபுரண்டு ஓடிக்கொண்டிருந்தனால் சிவாலயத்திற்குச் செல்லாத காரணத்தால் இவர் சாப்பிடவில்லை. வெள்ளம் குறைந்தது, கோயிலுக்குச் சென்றார். எனக்குக் கணக்கு எதுவுமே தெரியாது கல் எத்தனை போட்டாலும் நீ ஒன்றும் அசைவது போல் தோன்றவில்லை. சுவாமி! நானும் சோர்ந்து விட்டேன். இது ஒரு கல்லே போதும் என்ற கூறிவிட்டு, பெரிய கல்லை எடுத்து, பெரிதாகச் சத்தமிட்டு சிவனின் தலையில் போடச் செல்லுகையில், சிவன் காட்சியருளி, உன்னைப் பாராட்டுகிறேன். உனக்கு யாது வேண்டும் கேள்! என்றார். உடனே, சாக்கிய தொண்டன் கீழே விழுந்து வணங்கி, இறைவனைப் புகழ்ந்தார். அரி, பிரம்மன் தேடியும் அடி முடியறியாத லிங்க மூர்த்தியே? எது உண்மையான உருவம் என்று சாஸ்திரம், புராணம், வேதங்களும் சொல்லமுடியாத லிங்கமூர்த்தியே! இன்று உன் திருப்புகழை நான் கண்டேன். இது போதும்! வேறு யாது வரம் வேண்டும் எனக்கு? நீ மல்லிகை மொட்டில் பாணம் தொடுத்த மன்மதனை எரித்து வெண்ணிறச் சாம்பலாக்கியது உலகத்திற்குத் தெரியும். உன்னைக் கல்லால் அடித்த பெண்ணைக் கருணை கூர்ந்து அருள் கொடுத்தாய். எனக்கு மோட்சம் கொடுத்து, புண்ணியவானாக என்னை மாற்றினாய், ஆச்சரியமாக உள்ளதே! துதித்தாலும் நிந்தித்தாலும் நல்லதும் கெட்டதும் இவை இரண்டுமே மனதில் எதனை நினைத்தாலும் சமமே, பக்தர்களின் காவலனே! பக்தர்களுக்கே நீ கட்டுப்பட்டவன். உன்னை நிந்தித்து நம்பி என்பவர் உனது கருணையை அடைந்தார். உன்னைப்புகழ்ந்த மல்கணன் என்பவர். உனது கருணையை அடைந்தார். அதனால், என்னை உனது கருணை என்ற பார்வையால்

பார்த்து, இந்தக்கல்லைப் பூவாக மாற்று, நான் எப்பொழுதும் உனது தலையருகே இருக்கும்படி எனக்கு அருள வேண்டும் என்று கூறி, வேதத்திற்கு விரோதமாக நடக்கும் ஜைன, பௌத்தர்களை வெறுத்து ஒதுக்கினாரல்லவா?

## கோலூர் பிரம்மய்யா கதை

கோலூர் என்ற ஊரிலே பிரம்மய்யா என்ற சிவபக்தர் இருந்தார். அவருக்கும் சைன முனிவருக்கும் தர்க்கம் வந்தது. அந்த வாதத்திலே சைனமுனி தோற்று, வெட்கப்பட்டு தூரத்திலிருக்கிற, ஒரு ஆலமரத்தினைப் பார்த்து, அந்த மரத்தை எரிக்கிறாயா? திரும்பவும் படைக்கிறாயா? கூறு? என்று சபதமிட்டார். அதனை எரிக்கக் கூடாது, நான் படைக்கிறேன் என்று கூறினார். சைனர்கள் அனைவரும் மந்திர, தந்திரமெல்லாம் செய்து ஆலமரத்தை எரித்துச் சாம்பலாக்கினர். அப்பொழுது பிரம்மய்யா சாம்பலாகி இருக்கிற மரத்தடிக்குச்சென்று விபூதியைத் தூவினார். பின்பு, இதற்கு முன் அந்த மரம் எவ்வாறு இருந்ததோ, அதே போல் உருவாக்கினார். கோலூரில் இருந்த சைனக் கோயில்கள் அனைத்தையும் நிர்மூலமாக்கினார். அல்லவா? சமணரே உனக்கு வெட்கமாயில்லையா?.

## தேடர தாசய்யா கதை

போட்ல செருவு என்ற ஊரில் ஒரு சமண குரு இருந்தார். இருபத்தாயிரம் சமணமுனிகள் அவரைத் தலைமையாக இருக்கச்செய்து பூசை செய்து கொண்டிருந்தனர். அந்த ஊர் மன்னன் தேசிங்க பல்லகன் என்பவருக்குக் குலகுருவாய் இருந்து வந்தார். மன்னனின் மனைவி சுக்கலாதேவி தேடரதாசய்யா என்ற சிவபக்தனுக்குப் பக்தராய் இருந்தார். அவர் தம்முடைய குருவிற்கு இந்த நிலைமையைத் தெரியப்படுத்தி அந்த ஊருக்கு வரச்செய்தார். அவர் வந்து கொண்டு இருக்கும்போது சைன முனிகள் சேர்ந்து கெடுதல் செய்தனர். அதனைக் கருத்தில் கொள்ளாது, நேராக ஊருக்கு வந்தார். சுக்கலதேவியும் அவரை மகிழ்வுடன் வரவேற்றார். அவர் தங்குவதற்கான ஏற்பாட்டினையும் செய்தார். நாம் தடுத்தும் வந்திருக்கும் இவரால் இனிமேல் என்னாகுமோ? என்று சைனமுனிகள் மன்னனிடம் வந்து முறையிட்டனர். மன்னனும் தன் மனைவியான

சக்கலாதேவியை அழைத்து, எந்த உலகத்திலாவது மனைவிக்கு ஒரு வழி, கணவனுக்கு ஒரு வழி என்று இருக்குமா? இந்த குரு எங்கிருந்து வந்தார்? உடனே, இவரை அனுப்பி வைத்துவிடு, சைனர்கள் கேட்டால் விபரீதமாகிவிடும் என்றார். மனைவியாகிய சக்கலாதேவி அதிக கோபத்தோடு இவருடைய வருகை கெட்ட சைனர்களை அழிப்பதற்காகத்தான். கணவனுக்கும் மனைவிக்கும் ஒரே வழியானால் குருவிற்கும் சிஷ்யனுக்கும் வேறு வேறு வழி இருக்குமா? பெண்ணை மணந்து கொள்கின்ற நாளன்று செய்கின்ற உறுதிமொழியை நீ நினைவு படுத்திக்கொள். நீ இன்னொரு மனைவியை வைத்துக்கொண்டு வாழ்க்கை நடத்திக்கொள். என்னை விட்டுவிடு, எனக்குச் சிவனைத்தவிர வேறு தெய்வமில்லை. அவரைத்தவிர வேறு யாரையும் தெய்வமாக ஏற்றுக்கொள்ள மாட்டேன். எனது குருவானவர் சைனர்களை அழிக்கத்தான் வந்திருக்கிறார் என்று உரக்கக் குரலெடுத்துப் பேசினார் சக்கலாதேவி.

உடனே, மன்னன் சைனர்களை அழைத்து வாதம் செய்வதற்காய் அவர்களோடு வலதுபுறம் அமர்ந்தார். இடதுபுறம் தன் குருவுடன் அவருக்குப் பணிவிடைகள் செய்து கொண்டு சக்கலாதேவி அமர்ந்தார். சைனமுனிவர்கள் அனைவரும் சேர்ந்து, அவர்களிடம் இருக்கிற மாயங்கள், மந்திரஜாலங்களைப் பயன்படுத்தி, வாதாடத் தொடங்கினர். இவர் வேதம் வேதாந்தம், புராணங்கள் ஆகியவற்றிலிருந்து சான்றுகள் காட்டி, வாதாடத் தொடங்கினார். சிவனே முழுமுதற் கடவுள். சர்வமே சர்வேஸ்வரமயம் தான். கடவுளென்றால் ருத்ரன் ஒருவர் தான். லிங்கத்தில் தான் இந்த உலகம் முழுமையும் அடங்கியிருக்கிறது. லிங்கத்திற்குப் பிறகு எதுவுமே இல்லை என்று கூறினார்.

அவர்கள் வாதாடுவதற்கு என்ன இருக்கிறது? நடமாடுவன, நிலையாக இருப்பன. அனைத்தும் ஈஸ்வரனே என்று சொல்லுகிறாயே? எல்லாமே சிவனாக இருக்கும்போது கோவிலுக்குச் சென்று வணங்குவது எதற்காக? இவை இரண்டிற்கும் உடலாக, உயிராக ஆத்மாவாக இருக்கிறாரா? விளக்கம் கொடுக்க வேண்டும்? என்றனர்.

உங்கள் கேள்விக்கு நான் விடை கூறுகிறேன் என்று தாசய்யா கூறினார். இந்த நாடுகளிலெல்லாம் மன்னன் தவிர, வேறுயாருமில்லை

என்று கூறுவது, எல்லாப்பூச்சிகளும், தீண்டத்தகாதவர்களும் மன்னனே என்று கூறுவதற்குச் சமானமாகும். ஈஸ்வரனின் மகிமை எல்லாப் பொருள்களிலும் அடங்கியிருக்கும் அவ்வாறு இருக்கும்போது கோயிலுக்குச் சென்று எதற்காகத் தெய்வங்களை வணங்க வேண்டும் என்ற உங்களின் மூடத்தனமான கேள்விக்கு இதுவே, பதிலாகும். நிலவொளி சந்திரகாந்தக்கல்லின் மீதுபட்டால் எதிரொளிக்கும் மற்ற கற்கள் கரையாது. அவற்றின் மீது வெண்ணிலா காய்ந்தாலும் பயன் ஒன்றும் இல்லை. நிலவிற்காகத்தான் சந்திரகாந்தக்கல் சந்திரகாந்தகல்லிற்காகத்தான் நிலா. அதே போல் அங்கும் நிறைந்திருக்கிற சிவபக்தரின் மனது சிவன்மேல் இருக்கிறது. இவை இரண்டும் சமமாக இருக்கும் போதுதான் சிவனது மனது கரையும், பக்தனது இதயம் சிவனுக்காகத்தான். பசு கன்றினைத் தனதாக நினைக்கிறது. பசுவைவிட கன்றினையே மிகவும் பொறுப்பாகப் பாதுகாப்பவன் மேய்ப்பன். பசுவிற்குத் தனது கன்றினைப்பற்றி மட்டுமே தெரியுமேயன்றி, அதனைக் காப்பாற்றியவனைப் பற்றித் தெரியாது.

தண்ணீரில் இருக்கும் சிப்பி, அதற்கேற்ற நீர் வரும்போது தான் தன் வாயைத்திறக்கும், அதனால் பக்தருக்கும் லிங்கத்திற்கும் இருக்கிற நட்பினை உங்களால் அறிந்துகொள்ள முடியுமா? சிவன் இந்த உயிரினங்களுக்கு உடலாக, உயிராக இருக்கிறார் என்று கேட்பீர்கள். அதற்குப் பதிலளிக்கிறேன். வேதங்கள் அங்கம் பூர்வஜன்மத்தினால் உண்டான மீதியாகும். உடல் சுக, துக்கத்திற்கு இருப்பிடம். புண்ணிய, பாவங்களுக்கு இருப்பிடம். இதனால் உடல் சிவனல்ல, உயிர் சிவனென்று நினைத்தால் இந்த உயிர் அசுத்தமானவன், சிவன் சுத்தமானவன். இந்த உயிர் எப்போதும் கெட்ட செயல்களை மட்டுமே செய்து கொண்டிருக்கும். இந்த உயிர் பசுமூர்த்தி (விலங்கு உருவம்). சிவன் பசுபதி. சிவன் முக்தியடைந்தவன், சீவன் அநித்தியமானது, சிவன் நித்தியமானவன். சீவன் அசுத்தமானது. சிவன் சுத்தமானவன் சீவனுக்குப் பிறப்புண்டு, சிவனுக்குப் பிறப்பில்லை. சீவன் சம்சாரி, சிவன் அசம்சாரி, சீவன் கடவுள் கிடையாது, உடல் சிவன் கிடையாது. சீவன் சிவன் கிடையாது. ஆத்மா பரமாத்மா என்று கூறமுடியாது. ஆத்மா, பஞ்ச

பூதங்களைச் சேர்ந்தும், உடல் பஞ்ச இந்திரியங்களைச் சேர்ந்தும் இருக்கும். அதனால் ஆத்மா சிவன் கிடையாது. சூக்ஷ்ம உருவத்தில் சூக்ஷ்ம உருவமாய் இருக்கிறாய். எள்ளில் எண்ணெய் இருப்பதுபோல விறகில் நெருப்பு இருப்பது போல, கல்லில் இரும்பு இருப்பதுபோல, கண்ணில் பார்க்கும் பொருளின் பிம்பம் இருப்பது போல, பாலில் நெய் போல, தண்ணீர்ப்பானையில் தெரிகின்ற சந்திரனின் பிம்பம் போல, கண்ணாடியில் பிரதிபிம்பம் போல, மணி நடுவில் கயிறுபோல, குடத்து நீரில் ஆகாயம் தெரிவது போல, விதையில் மரம் இருப்பது போல, சத்தத்தில் அர்த்தம் அடங்கியிருப்பதுபோல, சர்வத்திலும் சிவன் தான் இருக்கிறான். முள் குத்துவதற்குக் கூட இடமில்லாதபடி எல்லாப் பொருள்களிலும் நீக்கமற நிறைத்திருக்கிறான். ஈசன் இந்த உலகத்திற்கே கடவுள், கர்மங்களைப் போக்கடிப்பவன் என்றார்.

அப்பொழுது அவர்கள் தாசய்யாவை மூன்று கேள்வியினைக் கேட்கின்றனர்.

1) சிவன் நித்தியமானவன், மற்றவை அநித்தியமானவை என்றால், சிவன் நிலையற்றவனா!

2) சிவன் கடவுள் மற்றையவர் கடவுள் இல்லை என்றால், சிவன் அங்கு இல்லையா?

3) சிவன் பசுபதி, மற்றையவை பசு என்றால் சிவன் பசுவாய் இருக்கிறாரா? அல்லது அங்கு இல்லையா?

1. சிவன் அநித்தியமானவன்

2. சிவன் கடவுளில்லை

3. சிவன் பசுவாய் இல்லை

என்ற மூன்று குணங்களில் ஏதேனும் ஒன்றாய் அவர் இருக்க வேண்டுமல்லவா, என்று அநியாயமாக வாதாடுகிறவர்களைப் பார்த்து தாசய்யா எண்ணெயில் விளக்கேற்றுகிறோம். எண்ணெயில் எள் இருக்குமா? சிவனின் குணங்கள் எல்லாவற்றிலும் இருக்கின்றன. நீக்கமற நிறைந்திருக்கிறார். எள்ளில் எண்ணெய் இருக்கிறது. எண்ணெயில் எள் இருக்குமா? எல்லாம் தெரிந்தவன் ஒருவன்

இருப்பான். அவன் எழுமையறிந்தவன். ஆனால் அந்த அறிவிலே அவன் இருப்பானா?

எல்லா இடத்திலும் சிவன் இருப்பான் என்று தாசய்யா கூறினார். அதற்கு சைனர்கள் கேலி செய்து நீங்கள் சொன்னதெல்லாம் எங்களுக்குப் புரிந்துவிட்டது. சிவன் அசுத்தத்தின் மீதும் இருப்பவரா? என்று கேட்டனர்.

அதற்குப் பதிலாக, உங்களுக்குத் தெரியாதா? சிவன் இல்லை என்ற பாவியை நெற்றியிலே காலால் உதைப்பேன். சிவன் இல்லை என்ற அதர்மர்களின் வாயை அடைக்கிறேன். நீங்கள் எதனைக் கேட்டாலும் இப்படிதான் கூறுவேன். எல்லாவற்றிலும் தான் இருந்து, எல்லாவற்றிலும் தானில்லாது இருக்கிறார்போல, அறிவாளி, புத்திகூர்மை உடையவன். எல்லாவற்றையும் பிறக்குமாறு அறிவாளி. அவர். எல்லாவற்றையும் செய்த அதிலே தான் பிறந்திருக்கிற அறிவாளி அவர். எல்லாவற்றையும் இயங்கச் செய்வார். அதிலே தான் இயங்காதவர். உலகத்தில் அனைத்தையும் தன்னுள்ளே அடக்கியிருக்கிற எண்ணங்களுக்கு எட்டாத தத்துவார்த்தமானவர். தன்னை நினைப்பவர்க்குத் தன்னையே சமர்ப்பணம் செய்பவர். பார்வைக்கு எட்டாத தன்மையிருந்தும் பார்வைக்குத் தெளிவாகத் தெரிபவர். இதனால், எங்கள் லிங்கதேவனின் மகிமையைத் தெரிந்து கொள்ள உங்களால் முடியாது. சிவன் எல்லா இடங்களிலும் இருக்கிறார். இதுபோல எதையும் பேசாதீர்கள் என்று 700 சைனக்கோயில்களையும் கீழே தள்ளிவிடுவேன் என்றார். பின்பு சைனர்களையும் துரத்திவிடுகிறேன் என்றார். சைனர்கள் ஒன்று சேர்ந்து ஒரு பாம்பைப் பானையில் இட்டு, அடக்கி, சிவன் எங்கும் இருக்கிறான் என்றாயல்லவா? இந்தப் பானையிலும் இருக்கிறானா? என்றனர். இவர் சிவனது பக்தர்களை வணங்கி பானைக்குள் கைவிட அதனுள்ளிருந்து லிங்கம் வந்தது. அந்த ஒளி எல்லா இடத்திலும் பரவியது. அங்கிருந்த மக்கள் அனைவரும் 'ஜெய ஜெய' என்று சத்தமிட்டனர். சைனர்கள் தங்கள் கெட்ட செயல்களை விட்டுவிட்டு கீழே விழுந்து வணங்கினர். தேடரதாசய்யா அவர்கள் அனைவரையும் லிங்க சைவர்களாகச் செய்து, அந்த லிங்கத்தை அந்த ஊரில்

வைத்து, உத்தரேச்வரர்! என்று பெயர் வைத்தார். அது மட்டுமல்லாது ஏற்கனவே கூறியது போல 700 சைனக் கோயில்களைத்தூளாக்கி சைனர்களுக்குச் சிவதீட்சை கொடுத்தார்.

**கிரியநாச்சையா கதை**

மாருடிகா என்ற ஊரில் கிரியநாச்சையா என்ற சிவபக்தர் இருந்தார். அந்த ஊரில் மற்ற சமயத்தைச் சார்ந்தவர்கள் நிறைய இருந்தனர். அந்த ஊரில் ஒரே ஒரு சிவாலயம் இருந்தது. அங்கிருப்பவர்கள் ஒன்று சேர்ந்து 1,700 சைனக்கோயில்களை விட இது உயர்ந்திருக்கிறதே என்று அக்கோயிலை இடித்து விட்டனர். அங்கிருக்கிற பூசையறைக்கும் துன்பம் கொடுத்தனர். நாச்சையா சைனர்களைத் துரத்தாது. சிவனுக்குரிய பிரசாதம் தொடமாட்டேன், இந்த ஊரிலும் இருக்கமாட்டேன் என்று கூறி, வேறு ஊருக்குச் சென்று பத்து நாளில் 12,000 பக்தர்களைக் கூட்டிவந்து, 1,700 லிங்கங்களை வண்டியில் ஏற்றிக்கொண்டு அந்த ஊருக்கு அருகில் உள்ள அனைவரும் கேட்கும்படி, தண்டோரா! போட்டு வலுவில்லாதவர்கள், அந்தணர்கள், பரதேசி இவர்கள் அனைவரையும் ஊருக்கு வெளியே வந்துவிடச்செய்து, 'தேரசு' என்ற 13 சைனர்களும் சண்டையிடச் சென்றனர். அவர்களது தலையினை அவர்களே கத்தரித்து, இடது கையில் தலையையும் வலது கையில் கத்தியையும் எடுத்துக்கொண்டு, பராக்கிரமத்தோடு, விளையாடிக்கொண்டே வந்த இவர்களைப்பார்த்து, சைனர்கள் மூர்ச்சையடைந்தனர். இவர்கள் பாடி, ஆடி 1700 சைன விக்கிரகங்களைத் தூளாக்கினர். ஒவ்வொரு சைனக் கோயிலிலும் ஒவ்வொரு லிங்கத்தினை வைத்தனர். பின்பு, தலையை உடலில் பொருத்திக் கொண்டனர். நேற்று நடந்த செய்தி உங்களுக்குத் தெரியாதா? நீங்கள் பெரிய கடவுள் என்று கூறுகிறவருக்கு நடந்த கதி உங்களுக்குத் தெரியாதா?

**சோமன்னா கதை**

சோமன்னா என்பவர் மூன்று வேளையும் சிவனைத் தொட்டு, பின்பு சாப்பிடுவார். ஒரு நாள் கண்வலியின் காரணத்தால் கோயிலுக்குப் போகாததால் சாப்பிடாது வீட்டிலேயே இருந்தார். அந்த ஊரில் அவரைத்தவிர மற்றவர்கள் சைனர்கள் தான். சைனர்கள், இவர்

ஏன் சாப்பிடாது இருக்கிறார்? நான் கூட்டிச்செல்கிறேன் என்று, பொன்னால் செய்யப்பட்ட சைனக்கோயிலுக்கு அழைத்துச்சென்று, இங்குதான் உங்கள் முக்கண்ணன் இருக்கிறார் என்று கூறி மகாவீரரின் தலைமீது இவரது கையை வைத்தனர். அவரும் அதனை மூன்று முறை வணங்கி, சுற்றி வந்து, கீழே விழுந்து வணங்கினார். அப்பொழுது அவர்கள் சிரித்துக்கொண்டே சரி! சரி! எழுந்திரு. எங்கள் கடவுள் அன்பு காட்டி அவரை வணங்கும்படிச் செய்தார் என்று கூறினார். இவர், மகாவீரருக்கு நான் கையெடுத்து வணக்கம் செலுத்துவேனா? லிங்கமூர்த்தியை நான் காட்டுகிறேன் என்று கூறி அழைத்துச்சென்றார். கண் மருந்தினை அகற்றி கண்ணைத் திறந்து பார்க்கும்போது சிவரூபம் தெரிந்தது. அங்கு பக்தரின் பக்தியைப் பாராட்டி, சோமேசன் என்ற பெயரில் சிவன் இருக்கிறார். இது உலகமெல்லாம் பிரசித்தமாகியது உனக்குத் தெரியாதா? என்றார்.

## வைச்சியவ்வா கதை

இந்த அம்மையார் சிவபக்தர். இவரது கணவரும் மற்றைய பேர்களும் சைனர்கள். ஒரு நாள் கணவர் இந்த அம்மையாரை அழைத்து, சமணர்களுக்கு விருந்து கொடுக்க, பதார்த்தங்களைச் செய்யச் சொல்லி விட்டு, அவர்களை அழைக்கச்சென்றார். அம்மையார் எல்லா பதார்த்தங்களையும் செய்து முடித்தார். பின்பு, நாம் செய்த பதார்த்தங்களைச் சிவபக்தர்களுக்குக் கொடுக்காமல், வேறு ஆட்களுக்குக் கொடுக்கவேண்டியதாயிற்றே என்று மனம் புகைந்து கொண்டிருந்தார். அவ்வாறு வருத்தத்தோடு இருக்கும்போது சிவன் முனிவர் வேடத்தில் வந்தார். மிகவும் சந்தோசப்பட்டு, கீழே விழுந்து மீண்டும் மீண்டும் வணங்கி, அவருக்குப் பாதாபிஷேகம் செய்து, அவருக்கு ஆசனம் அமைத்து, சமைத்த பதார்த்தங்கள் அனைத்தையும் பரிமாறினார். முனிவரும் ஏப்பம் விட்டுக்கொண்டே சாப்பிட்டார். இதுபோல சாப்பிட்டுக்கொண்டு இருக்கையில் சைனர்கள் விருந்து சாப்பிடுவதற்காக வந்தனர். அப்பொழுது முனிவர் வேடத்தில் வந்திருந்த சிவனும் மாயமாய் மறைந்து விட்டார். கணவன் வந்து அவன் எங்கு மறைந்தான்? சாம்பல் பூசியவனை எங்கு மறைத்து வைத்தாய்? என் வீட்டையே பாழாக்கி விட்டாயே? கணவனின்

ஆணையை நீ மீறலாமா? அந்த முனிவருக்கும் உனக்கும் தொடர்பிருந்தால் நீ வீட்டைவிட்டுச் சென்றுவிடு என்று அங்கிருக்கும் சம்மட்டியை எடுத்து அடிக்க ஆரம்பித்தார். உடனே, மனைவியும் அந்த அடிக்குப்பயப்படாது சிவனையே நினைத்துக்கொண்டிருந்தார். அந்த அடி முழுவதும் சமணர்கள் மீது விழுந்தது.

இது பிட்டு சாப்பிட்ட சிவன் வெட்டி வேலைக்குச் சென்று அங்கே வேலை செய்யாது பேசிக்கொண்டிருக்கும்போது அங்கிருப்பவர்கள் கோபப்பட்டு என்ன பையன் இவன்? என்று அடித்தனர். அந்த அடி சோழ மன்னனின் ஆட்களுக்கு விழுந்தாள் போல இருந்தது. முதுகில் இருக்கும் தோல் உரிந்து போகுமாறு அடிக்கவே, சிலர் பயந்தனர், சிலர் வாய்திறந்து அழுதனர். சிலர் பள்ளிக்குச் சென்று அங்கிருந்து வெளியே வந்தனர். சிலர் மூலையில் சென்று பதுங்கினர். சிலர் செடிகொடிகளின் மேல் ஏறி நின்றனர். இதெல்லாம் நமது கர்மம் என்றனர். மகாவீரரின் பின் சென்று பதுங்கினர். நாம் எங்கே செல்வது? இதுபோன்று மரணம் வந்ததே? என்றனர். ஒவ்வொரு அடியும் ஆயிரம் அடியாக நம்மீது விழுந்து கொண்டிருக்கிறதே என்றனர். ஸ்ரீசந்திரமுனி குளத்தில் விழுந்தார். ஆச்சார்ய முனி அகழியில் விழுந்தார். வரச்சந்திரமுனி கோயில் மேல் ஏறி கீழே குதித்தார். நரகதமுனி காற்றில் கலந்தார். சபனேந்திர முனிக்கு உயிரே போய்விட்டது. குபேந்திரமுனிக்கு முதுகு இரண்டாக உடைந்து விட்டது. இராசேந்திரமுனி உடனே உயிரை விட்டார். இதுபோல் அனைத்தும் சிவனது செயல்களாக இருக்கும் என நினைத்து அழுதார். சிவபக்தனுக்குச் சாப்பாடு போட்டாய் என்று உன்னை அடித்தேன். இப்பொழுது இந்த முனிவர்களுக்குக் கெடுதல் செய்து கெண்டிருக்கிறார். சிவபக்தர்களின் மந்திரதந்திரங்களில் நீ என்னை எவ்வாறு உயிரோடு வைத்திருப்பாய்? நீ வீட்டைவிட்டுச் சென்று விடு என்றான். அந்தம்மையார் சைனர்களின் கோயிலைப்பார்த்து, வேறுபாடு தெரியாது, சிவன் கோயில் என்று நினைத்து, முக்கணா சரணம்! என்று அவரை வணங்க, சமண விக்கிரகம் வளைந்து தூளாகியது. அந்த இடத்தில் லிங்கம் பிறந்தது. கணவன் சிவபக்தி இல்லாது இருந்தால் அவனை விட்டு விடுவது மனைவியின் கடமை. கணவனை விட்டுவிட்டு சிவனைப்

பூசைசெய்கின்ற மனைவிக்கு நல்ல வழியே கிடைக்கும். பூர்வகாலத்தில் நாராயிணி என்ற முனிவரின் மனைவி அனுசுயா கணவன் சிவபக்தனாக இல்லாததனால் அவனை விட்டுவிட்டு சிவனைப் பூசை செய்து, மோட்சம் அடைந்தாள். இப்பொழுது இந்தப்பெண்ணின் பக்தியினாலே எல்லாம் தெரிந்துவிட்டது. இந்தப் பக்தர்கள் அந்தப்பெண்ணிற்கு வெற்றி! என்று பாராட்டினர். வைஜ்ஜனவ்வா வைஜ்யநாதன் என்ற பெயரிலே ஆணாகமாறி, சைன மூடனே! உனக்குத் தெரியாதா? கடந்த கால பக்தர்களின் அதிசயத்தைச் சொல்ல வேண்டும் என்றால், எண்ணற்றவையாக இருக்கின்றன. அன்று இருந்த இலிங்கத்தின் பெருமை குறைந்து விட்டதா? சைன மதமே உயர்ந்தது என்று கூறியிருக்கிறாய்? என்னிடம் வாதாடுகிறாய். என்னுடைய மகிமையைக் காட்டுகிறேன் பார் என்று கூறி இந்த ஊரிலே இருக்கிற பெரிய சைனக்கோயில் சூரிய உதயத்திற்கு முன்னால் தரைமட்டமாகிவிடும். நான் சிவனின் உண்மைச்சேவகன் என்று கூறிவிட்டுப் போய்விட்டார். அந்தக்கோயில் விழுந்து தூளாகியது.

இப்பொழுது தலையைக் கொடுத்து ஏழுநாள் கழித்து மறுபடியும் இந்த உலகம் அறியும்படி எனது தலையைப் பெறுகிறேன். அதன் பிறகு, கல்யாண கடகத்தில் இருக்கிற பள்ளி அனைத்தையும் அழித்து, சைன பிரகாரங்களைத் தூளாக்கி, மருந்திற்குக்கூட சைனர்கள் இல்லாது செய்கிறேன். இது என்னுடைய சபதம் என்று கூறி, பசவன், பிஜ்ஜலன், சிறியவர், பெரியவர் அனைவரும் அதிசயப்பட்டு நிற்க, ஏகாந்த ராமய்யா தனது தலையை வெட்டி, கையில் தலையை எடுத்து, பிடித்துக்கொண்டு, பக்தர்கள் பாராட்டிக் கொண்டு நிற்க, கல்யாண கடகத்தின் தெருக்களில் சுற்றி, கையில் வாளுடன் நாட்டியமாடி வெற்றி! வெற்றி! ஏழு நாள் கழித்து மறுபடியும் கோயில் முன் நின்று, சைனர்களே என்னுடைய சபதத்தைப் பாருங்கள் என்று, தலையைத் திருப்பி, கழுத்தின்மேல் வைத்தார். அப்பொழுது தலை சற்றே சாய்ந்தது. சிவன் உலகமெல்லாம் காப்பதால், இதுவே அடையாளம் என்று கூறினார். இவரது புகழ் உலகமெல்லாம் பரவியது. பக்தர்களுக்கும் மக்களுக்கும் மூவுலகத்திற்கும் இவர்தான் ஈசன் என்று பாராட்டினர். சைனர்களைப் பிடித்து, சூடு போட்டனர்.

அனைவரும் சேர்ந்து பள்ளியைத் தூளாக்கினர். இவ்வாறு மதிப்புக்கொடுத்தாலும் அவர்களுக்குத் தண்ணீர், விஷம், நெருப்பு, ஆயுதங்கள், பாம்பு, விலங்கு, நோய் போன்றவற்றில் எந்தத்தீங்கும் ஏற்படாது. சிவஅருளால் எல்லாப் பாக்கியங்களும் கிடைத்து முக்தி ஏற்படும்.

## ஷோட்டல தேவு பாசய்யா கதை

பிற மதங்களுக்கு இவர் சிங்கம்போல் இருந்தார். இவர் வேதங்கள், புராணங்கள், சாஸ்திரங்கள் இவைகளால் சைனர்களுடன் வாதாடி, இந்த உலகத்தில், பசுபதிதான், தலைவர், மற்றைய அனைவரும் விலங்குகள் என்று நிரூபித்தார். சைனர்களின் தலையைத் துண்டித்து, விஷ்ணு பக்தர்களின் மூக்கினை அறுத்து, அத்வைத்தினை விரட்டியடித்தது, சாருவாகர்களின் கர்வத்தினை அழித்து, சிவபக்தியை உலகத்தில் பிரதிஷ்டை செய்து, உலகத்தில் வாழ்ந்து கொண்டிருந்தார். வருடா வருடம் சௌராட்டிரத்திற்குச் சென்று அங்குள்ள சிவன் கோவிலில் சாகரம் செய்வது இவரது விரதமாகும். ஒரு வருடம் அந்த ஊருக்குச் சென்று விரதத்தினை மேற்கொள்ளும் நாள் வந்தது. மன்னன் பிஜ்ஜலனிடம் சென்று, இன்று என் விரத்தினை நிறைவேற்ற சௌராட்டிரத்திற்குச் செல்லுகிறேன். அனுமதி வேண்டும் என்று கேட்டார். மன்னன், தானியங்களை அளக்கிற வேலை இருக்கிறது. இரு பக்கமும் எவ்வாறு உத்தியோகம் செய்யமுடியும். செல்லக்கூடாது என்றார். நீ சௌராட்டிரத்திற்குப் போ, அல்லது சௌராட்டிர நாதனே இங்கு வரட்டும். சிவராத்திரி கிவராத்திரி என்ற பேச்சினை விட்டுவிடு. இந்த வேலையை நீ தவிர்க்க முடியாது என்று மன்னன் கூறினார். பரமதங்களைச் சேர்ந்தவர்கள் கோபித்துச் செல்வதைப் போன்று, நானும் கோபித்து செல்வது நன்றாய் இல்லை. மன்னன் கூறியது போல இறைவனே இங்கு வரட்டும் என்று கூறி, இதனால் என் விரதம் ஒன்றும் கெட்டுவிடாது என்றிருந்தார். அன்று மறுநாள் சிவபிரான் கடிதத்தூதுவன் போல வந்து, தானியம் அளப்பவனிடம், சௌராட்டிர நாதர் வந்து கொண்டிருக்கிறார். இந்தக்கடிதத்தை என்னிடம் கொடுத்து அனுப்பினார் என்று கூறி மாயமானார். இவர் அதனைக்

கேட்டு, சிவபிரான் வருவார். இதில் அதிசயம் என்ன இருக்கிறது? இராவணனின் பக்திக்கு மெச்சி வந்திருக்கிறார். குட்டவ்வாவிற்கு எதிரே அவரது பிடியில் சிக்கினார். அல்லவா? அதுபோல பக்தர்களுக்குப் பிடிக்குள் அடங்குவாரே தவிர, பக்தஉறீனர்களுக்கு எப்படி பிடிக்குள் அடங்குவார்? கடவுள் வருவதற்கு அடையாளமாக வந்திருக்கிறார். இவர் தான் கடவுளாக இருக்கும். இதுபோன்ற சக்தி சாதாரண மனிதர்களுக்கு இருக்குமா? என்று கல்யாண கடகத்தில் இருக்கும் மக்கள் அனைவரும் புகழ்ந்து பேசிக்கொண்டிருந்தனர். அந்தக்கடித்தை எடுத்துத்தலைமீது வைத்துக்கொண்டு, பக்திப்பரவசத்தில் அந்த ஊரில் இருக்கிற வீதிகளைச் சுத்தமாக வைத்திருக்கச்சொல்லி, பசவனா முதலிய பக்தர்கள் சேர்ந்து, சிலர் பாட, சிலர் ஆட இவ்வாறு நடந்து கொண்டு இருக்கும்போது, முழுமையைப் புரிந்து கொண்டு, சௌராட்டிரநாதர் தரிசனம் கொடுத்தார்.

சித்தராமய்யா ஸ்ரீசைலத்திற்குச் சென்று மல்லிகார்ஜுனரைப் பிரார்த்தித்து, சுவர்ணலிங்கபுரத்திற்கு அவரை வரவழைக்க முடியாது போயிற்று. இப்போது பாசய்யா, இங்கிருந்தபடியே இங்கு வரவழைத்தார். இதுபோன்ற பக்தர் யாரேனும் இருப்பாரா? என்றார். அப்பொழுது மன்னன் வந்து கீழே விழுந்து வணங்கி, சுவர்ண ஆலயத்தினைக் கட்டுவித்து, பாசிராசய்யாவின் விரதத்தினை அங்கே நிறைவேற்றினார். அங்கு எழுந்தருளியிருக்கும் கடவுளும் 'கொட்டரவு சோமநாதர்' என்று பக்தர்களால் அழைக்கப்பட்டார். இந்தப் பக்தர்களின் கொண்டாட்டத்தைப் பொறுக்க முடியாத பிஜ்ஜலன், கெட்ட மனத்துடன் அந்த ஊரில் இருக்கிற அந்நிய மதத்தினருடன் சேர்ந்து பிரதாப நாராயண புரம் என்ற இடத்தில் கோவிந்தனின் விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்து, அங்கு கோயில் கட்டினார். அந்தக் கடவுளுக்கு பக்தர்களோடு சேர்ந்து, அவை ஒன்றையும் கூட்டினார்.

அங்கு வந்திருப்பவர்களைப் பார்த்து, இது போல விக்கிரகம் பிரதிஷ்டை செய்வது பாசய்யாவிற்குத் தெரியாதா? ஏன் அவர் இங்கு வரவில்லை? என்ன ஆணவம் அவருக்கு? என்று கோபித்துக் கொண்டிருக்கிற மன்னனைப் பார்த்து பசவமந்திரி இவ்வாறு கூறுகிறார். மன்னன் ஏதாவது வேலை கொடுத்தால் அதனைச் செய்யாவிட்டாலும்,

போரின் போது போர்க்களத்தை விட்டு ஓடிச் சென்றாலும் அவனைத் தண்டிப்பது நல்லது. அதைவிட்டு விட்டு அந்நிய தெய்வங்கள் இருக்கிற வீட்டிற்கு எதற்காக வரவில்லை என்று கேட்பது தவறல்லவா? சிவன் மீது நிஷ்டை இருப்பவர்கள் பிற தெய்வங்களின் வீட்டிற்கு எங்காவது போவார்களா? பக்தர்கள் பார்க்கவும் மாட்டார்கள். அதனைக் கேட்கவும் மாட்டார்கள். மகேச்வரனைக் கடவுளாக எண்ணுபவர்கள். சிறுசிறு தெய்வங்களைக் கருத்தில் வைக்க மாட்டார்கள். அல்லவா? கண்டகர்ணன் என்ற தேவ கணங்களைச் சேர்த்தவன். மற்ற ஒலி எதுவுமே கேட்கக்கூடாது என்ற நியமம் வைத்துக் கொண்டு, காதிற்கு நல்ல ஒலி கொடுக்கக்கூடிய மணிகளைக் கட்டிவைத்துக் கொண்டு. உலகில் வாழ்ந்து வந்தான்.

## அரியமா கதை

இவர் 63 சிவபக்தர்களில் ஒருவர். இவர் மகேந்திரமங்கலம் என்ற ஊரில் இருந்து சிவசேவை செய்து வந்தார். தன்னிடம் வந்து பிற தெய்வங்களைப் பற்றி கூறினால் அவர்களின் தலையைத் துண்டித்து விடுவேன் என்ற நியமத்தினையும் கொண்டிருந்தார். இவ்வாறு இருக்கும்போது ஒருநாள் ஒரு பிராமணன் உருத்திரம் படித்துக் கொண்டே வந்து பிச்சை கேட்டார். இவரும் சந்தோஷமாக அவருக்குப் பிச்சை வந்துபோடும் போது ஒரு பருக்கைக்கீழே விழுந்தது. அப்பொழுது அந்த பிராமணனுக்குக் கோபம் வந்து, மற்றைய தெய்வங்களின் பெயரைக் கூறுகிறார். உடனே இவருக்குக் கோபம் வந்து கையில் இருக்கிற ஆயுதத்தால் பிராமணனின் வயிறைக் கிழித்தார். பிராமணனைக் கொல்லக்கூடாது என்று வேதத்தில் இருக்கும் போதே அரியமா என்ற பக்தர் இதுபோன்றுச் செய்தார். ஒரு நல்ல பிராமணனை இவ்வாறு கொல்லலாமா! பிச்சை கேட்டால் இருந்தால் கொடுக்கலாம். இல்லாவிட்டால் இல்லை என்று சொல்லிவிடலாம். அதனை விட்டுவிட்டு இவ்வாறு செய்யலாமா? என்று அவ்வூரில் இருந்த பிராமணர்கள் ஒன்று சேர்ந்து மன்னனிடம் புகாரிட்டனர். மன்னன் அவரை அழைத்து, பிராமணனைக் கொன்றது தர்மமா? ஏன் இவ்வாறு செய்தாய்? நீ உண்மையைச் சொல் என்றார். அவர் புன்னகையோடு இந்த வெட்டிப் பேச்செல்லாம் எதற்கு? நான் அவரைக் கொன்றது உண்மைதான். நான் அவ்வாறு செய்ததின்

காரணம் சிவனுக்குத் தெரியும். இதற்குக் கர்த்தா சிவன் தான். அல்லாது நீங்களல்ல. என்று கூறியவுடன் சிவபக்தர்களை மற்ற சமயத்தவருடன் சமரசம் செய்வது அவநீதி என்று நினைக்காது. அந்த மன்னன் கர்வத்தோடு அவரைக் கொல்வதற்கு ஆணையிடுகிறார். அப்பொழுது அழைத்துச் செல்லும்போது. நேராகக் கோயிலுள் நுழைந்து, துரோகிக்குச் சமானமாக நானும் சாவது சரியா? என்று கூற அவரது அறியாமை நிறைந்த பக்திக்கு மெச்சி. பரதெய்வ நாமங்களைச் சொல்லச்கூடியவர்களே ஒரு சிவபக்தனை சமானம் செய்யலாமா? என்று ஒரு நொடியில் சிவன் தனது இதயத்தைத் திறந்து உள்ளே வா என்று அவரை அழைத்தார். இலிங்க கர்ப்பத்தில் இவரும் ஒன்று சேர்த்தார். அவரைப் பின் தொடர்ந்து வந்தவர்கள் போய்விட்டாரே, போய்விட்டாரே என்று தொடர்ந்து சொல்ல, ஒரு முழம் வேட்டி அப்படியே லிங்கத்திற்கு வெளியே நின்றுவிட்டது. இது எதற்கு அடையாளமென்றால். எங்களது சிவபக்தர்கள் எல்லோருமே எல்லா இடத்திலும் மற்ற இழுக்கான தெய்வங்களின் நாமங்களைக் கேட்பதற்கு விரும்பமாட்டார்கள் என்பதற்கு அரியமா கட்டி இருக்கிற அந்த லிங்கதோடு இருக்கிற வேட்டியே சாட்சி. இன்றும் அது தெரியவருகிறது என்று கூறினார்.

### வீரசங்கரன் கதை

வீரசங்கரன் என்ற சிவபக்தன் இருந்தார். அவரது கதையைக் கேளுங்கள். அவர் மற்ற சமய தெய்வங்களைக் கனவிலும் நினைக்க மாட்டார். தொழமாட்டார். பேசமாட்டார் இந்த நியமத்தோடு அவர் வாழ்ந்து வந்தார். இது போன்ற நியமத்தோடு இருக்கும்போது ஒருநாள் கனவில் ஒரு பௌத்த சமயத்தவனைப் பார்த்தார். கனவில் ஒரு பௌத்தனைத் தொட்டுவிட்டேனே என்று வெறுப்போடு கவலைப்பட்டார். நாய் தொட்டபானையை, நெருப்பில் போட்டால் சரியாகும். என்று நினைத்து உறுதியோடு, ஸ்ரீ சைலத்திற்குச் சென்று ஆடலரசனாகிய சிவனின் கோவிலுக்குச் சென்று நிறைய எரிந்து கொண்டிருக்கிற நெய்யின் மீது இரும்பாலாகிய பாத்திரம் வைத்து அதன்மீது அமர்ந்து சிவனை மகிழ்வித்து. சிவபதவியை ஒரு நிமிடத்திலே அடைந்தார். அதனால் சிவபக்தர்கள் எப்பொழுதும் அந்நிய தெய்வங்களை ஏற்க மாட்டார்கள். இது இயற்கை.

### சிவலிங்க மஞ்சய்யா கதை

சிவலிங்க மஞ்சய்யா என்ற சிவபக்தர் காசியில் இருந்து கொண்டு விஸ்வேஸ்வரன் கோவிலில் மூன்று வேளை பூசை செய்தவர். தனது கையை இறுக்கி பத்து விரலையும் சிவனுக்கே அர்ப்பணம் செய்து. பின்பு உடனே பெறுவார். மக்கள் அனைவரும் இது அற்புதம் என்று புகழ. வாழ்ந்து கொண்டிருந்தார். அது மட்டுமல்லாது, மற்ற தெய்வங்களை வணங்கிக் கொண்டிருக்கின்றவர்களை அழைத்து, அவர்களின் மூக்கின்மீது ஸ்ரீமாகேச்வரனாகிய ஈஸ்வரன் ஒருவனே கர்த்தா என்று முத்திரை இட்டார். இவ்வாறு செய்துக் கொண்டிருக்கும் போது அந்நிய மதத்தவர் ஒன்று சேர்ந்து கதாதரன் கோயிலின் அருகில் அமர்ந்து கர்வத்தோடு மஞ்சய்யாவே எங்களோடு தர்க்கம் செய்ய வாருங்கள் என்று அழைத்தனர். சமயவாதிகள் அவரவர் ஒவ்வொன்றாய்க் கேட்கின்றனர். மஞ்சய்யாவும் அவர்களுக்குத் தகுந்தபடி விவரித்து. அதற்குத் தகுந்தபடி விடையளிக்கிறார். மற்றைய சமயஸ்தர்கள் வாயைத் திறப்பதற்கும் பயந்து இந்த சாஸ்திரங்கள். புராணங்கள் எல்லாம் போதும் வேறு ஏதாவது சான்று சொல்லமுடியுமா? என்று கூறினர். இந்த விஷ்ணுவைக் கொண்டு சென்று. சிவனை வணங்குமாறு செய்கிறேன். பாருங்கள் என்று, மஞ்சய்யா அங்கிருக்கும் மக்கள் புகழ்ந்து கொண்டிருக்கும் போது, அடேய் விஷ்ணு உனக்குக் குருவான விஸ்வேஸ்வரனை வணங்குவதற்காக உள்ளே இருந்து வெளியே வா என்று சொல்லியவுடனே. மற்ற மதவாதிகள் எல்லோரும் நடுங்கிக் கொண்டிருக்கும் போது விஷ்ணு அவரது ஆணைக்கு நடுங்கிக் கொண்டே வந்து. விஸ்வேஸ்வரனை வணங்கி கோவிலை விட்டு வெளியேறி. வந்து காலால் நடந்து சென்றார். சிவபக்தர்கள் அவருக்குமுன் மகிழ்ச்சியாக சென்று கொண்டிருக்கிறார்கள். விஷ்ணு, பின் தொடர்ந்து. மற்றையவர்கள் அவர்களின் கர்வம், தைரியம் அனைத்தும் செல்ல, விஷ்ணுவைக் கொண்டு வந்து சிவனை வணங்கும்படி செய்தார்கள். சிவபக்தர்கள் எல்லோருமே எனக்கு ராஜா!, பிரபு! என்று விஷ்ணு கூறினார். அப்பொழுது மஞ்சனா மறுபடியும் அவரை அழைக்க. நீங்கள் ஆணையிட்ட வேலையைச் செய்து வாழ்கிறேன் என்று விஷ்ணு அவரை வணங்கினார். மற்ற

சிவபக்தர்கள் அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கையில் இப்பொழுதும் நாம் இதை பார்க்கலாம். சிவனுக்கு எதிரி யாருமே இல்லை. சிவனுக்கு இணையானவர்கள் யாருமே இல்லை என்பதற்கு விஷ்ணு வணங்கிக் கொண்டிருப்பதுவே சாட்சியாகும்.

**சங்கரதாகமய்யா கதை**

இவர் இரண்டாவது சிவன், நெற்றியிலே கண் இருக்கிறவர் என்று புகழ்பெற்றார். இவர் கோபித்துக் கொண்டு மற்றைய தெய்வங்களைப் பார்த்ததும் அது தூள் தூளாகக் கீழே விழுந்து விடும். ஜெகதேகமல்லன் என்ற மன்னனிடம் மற்ற சமயத்தையும் சேர்ந்தவர்கள் எல்லோருமே வேலை செய்துகொண்டு இருக்கும்போது, சங்கரதாசமய்யா அங்கு வந்து அங்கிருந்த நாராயண உருவத்தைப் பார்த்த உடனே, சங்காதாசுமய்யா நெற்றியிலிருந்து பயங்கரமான நெருப்பு வந்து நாராயணமூர்த்தியைத் தூள் தூளாக்கியது. இப்பொழுது அந்த ஆலயமே சூனியமாயிற்று. அதனால் எங்கள் பக்தர்களின் மகிமை உனக்கென்ன தெரியும்? பாசரசன் என்ற சிவபக்தரின் மகிமை உனக்கு இதற்கு முன்னர் தெரியுமல்லவா? கூப்பிட்டவுடன் சிவன் தன்னருகில் வரும்படி செய்துகொண்டாரல்லவா? தானியங்களை வைக்கிற கொட்டாரத்தில் நிறைய தானியங்கள் வைத்து மனிதர்களின் பெயர்களை எழுதாது பஞ்சாட்சர மந்திரத்தையே அந்தப் புத்தகத்தில் எழுதிவந்தார். கணக்கிடு சரியாகச் சொல்லுவார். அவரது மகிமை தெரியாதா? உங்களுக்கு? என்று பசவன்னா கூறினார்.

கோடல்ல தேவபாசய்யா அந்த இடத்திற்கு வருகிறார். மன்னன் மிகுந்த கோபத்தோடு உலகத்தினுக்கே ஆதிநாதன் விஷ்ணு உருவ பிரதிக்கு மந்திரிகள் போன்ற அனைவரும் வந்திருந்தனர். ஆனால், நீ மட்டும் ஏன் வரவில்லை என்று கேட்டார். அப்பொழுது அவர், இவர்கள் அனைவரும் என்ன தெய்வங்கள்? இதில் யார் கர்த்தா? கர்த்தாவிற்குக் கர்த்தா என்னுடைய சிவனல்லவா? சிவனுக்கு, விஷ்ணு, கிஷ்ணு, பிரம்மா, கிரம்மா தேவர்கள், இவர்கள் போன்றோர் சமானமா? இந்த உலகத்தில் என்னுடைய கர்த்தா மகேஸ்வரன் என்று சொல்லிக் கொண்டிருக்கிற விஷ்ணு பரமேஸ்வரன் ஆவானா?

இந்த உலகத்திற்குக் கர்த்தா விஷ்ணு என்று நாம் நினைத்தால், அவன் ஏன் தன் மகனைக் காப்பாற்றிக் கொள்ளவில்லை? பிரம்மா தெய்வம் என்ற பேச்சு முதலிலேயே தோல்விடைந்தது. அவரது தலை எப்பொழுது கீழே விழுந்ததோ? அப்பொழுதே அந்தப் பேச்சு தோல்வியடைந்தது. சிருஷ்டிகர்த்தா, 'பிரம்மா' என்றால் தன் தலையை ஏன் திரும்பவும் பெற்றுக் கொள்ளவில்லை. இந்த உலகத்தில் சைனர்களும், பௌத்தர்களும் தெய்வமல்லாத நரலோகத்தில் இருக்கிறார்கள். இவர்கள் வேதத்திற்குத் தூரமானவர்கள். பசுபதிக்குச் சமானமானவர்கள் அலலர், வேதம் தெய்வமானால், எவ்வாறு சோமகனால் திருடுபோன்றது? பிருதிவி தெய்வமாய் இருந்தால், நினைவாய் இருக்குமா? தண்ணீர் தெய்வமாய் இருந்தால், இது சிவனின் கையில் அடங்குமா? அக்னி தெய்வமாய் இருந்தால், சர்வபட்சகனான சிவனின் முன்னே தோல்வியடைவானா? காற்று தெய்வமானால், ஒரு திசையிலே திக்குப்பாலகனாய் ஏன் இருக்கிறார்? ஆகாயம் தெய்வமானால், பரல்யத்திலே காணாமல் போய்விடுகிறதே! சூரியன் தெய்வமானால், கால்வைக்கக்கூட நேரமில்லாது. ஒரே இடத்தில் இல்லாது அலைந்து கொண்டே இருப்பாரா? அவரைக் கடவுள் என்று எவ்வாறு சொல்ல முடியும்? சந்திரனைக் கடவுள் என்றால், நாள் விட்டு நாள் அவரது கலை ஏன் குறைந்து கொண்டே வருகிறது. அவரை தெய்வமென்று எவ்வாறு கூறமுடியும்! உலகத்திற்குக் கர்த்தா என்று ஆத்மா என்றால் அது எவ்வாறு உண்மையாகும்! சுக துக்கத்திற்கு ஆட்படுகிறதே! கர்மா தான் உலகத்திற்குக் கர்த்தா என்றால், இந்த உலகத்தில் கர்மத்திற்கு எல்லாம் ஈசன் சிவன்தான். அவர்தான் தெய்வம். இல்லையென்றால் காடகோடன் என்பவனுக்குக் கைலாசத்தினைக் கொடுப்பாரா? வேதங்கள் எல்லாமே சிவன்தான் கர்த்தா என்று கூறிக்கொண்டிருக்கிறது. உறரி முதலான தேவர்கள் விலங்குகளாக அவரை வணங்கிக் கொண்டுயிருக்கிறார்கள். அவர்கள் அனைவருமே எப்படி கர்த்தா என்று கூற முடியும்? அவர்கள் தாம் செய்து கொண்டிருக்கிற கர்த்தாவே தவிர, பல கர்த்தா அவர்களாக மாட்டார்கள். ஆகையால், சிவன் தான் கர்த்தாவிற்குக் கர்த்தா.

இதற்கு வேறு எடுத்துக்காட்டு தேவையில்லை. சிவனைச் சுற்றி உறரி முதலான தேவர்கள் வணங்கிக் கொண்டும். சேவை செய்து கொண்டும் இருக்கிறார்கள். இணையற்ற ரூபமாய் இருக்கிற லிங்கமூர்த்தி சிவன். இணையில்லாத் தெய்வம், நிர்மலமும் நித்யமும் நிஷ்கர்மா என்ற தேகமுடையவன் சிவன். துர்மலமும் துஷ்டமும். துஷ்கர்மமும் கொண்டிருப்பவர்கள் மற்றையவர்கள். இறப்பும் பிறப்பும் இல்லாத தேவதேவருக்குப் பிறப்பும், இறப்பும் உள்ள தேவர்கள் சமானமா? சிவனுக்குப் பிரம்மா, இந்திரன், உறரி போன்ற விலங்குகள் சமானமா? பிரளயம் உண்டாகிற சிவனுக்குப் பிரளயத்திலே அழிந்து போகிற தேவர்கள் சமானமா? முனிகணங்கள் பாத பூசை செய்து கொண்டிருக்கிற சிவனுக்கு முனி சாபங்களாலே இறந்து போய்க்கொண்டிருக்கிறவர்கள் சமானமா? இலிங்க கோலத்தில் இருந்து பூசையைப் பெற்றுக்கொண்டிருக்கிற சிவனுக்குப் பூசை செய்துகொண்டிருக்கிற பூசாரிகள் சமானமா? ஸ்ரீமகாதேவனான ஸ்ரீ சைலபதிக்கு விஷ்ணு, இந்திரன் போன்ற தேவர்கள் சமானமா? மூன்று கண்கள் பெற்றிருக்கிற சிவனுக்கு, இரண்டு கண்கள் மட்டும் இருக்கின்றவர்கள் சமானமா? ஆலகால அக்னியை வென்ற (சௌரி) வீரனுக்கு ஆலகாலத்தில் மடிந்து கொண்டிருக்கிறவர்கள் சமானமா? திரிபுரானை அழித்த வீரனுக்கு திரிபுராதரனால் துன்பப்பட்டுக் கொண்டிருக்கிறவர்கள் சமானமா? அந்தகாதரனின் கர்வத்தைப் போகடிக்கிறவனுக்கு அந்தகாதரனாலே பயந்து நடுங்கிக் கொண்டிருப்பவர்கள் சமானமா? விஷ்ணு, பிரம்மா ஆகியோரின் கபாலங்களை மாலைகளாகக் கொண்டிருக்கிறவனுக்கு விஷ்ணு, பிரம்மா போன்ற தேவர்கள் சமானமா? பிறப்பே இல்லாத சிவனுக்கு தேவகி புத்திரன் போன்ற தேவர்கள் சமானமா? சர்வேஸ்வரனுக்கு அசர்வேஸ்வரர்கள் சமானமா? இவர் கையால் மற்ற தெய்வங்களைப் பூசை செய்விக்கலாமா? சர்வேஸ்வரன் பிறப்பில்லாதவன், பரமன், பசுபதி, பரமேஸ்வரன், ஸ்ரீமகாதேவன் என்று இந்த உலகத்தில் யாருக்காவது இது போன்ற பல நாமங்கள் இருக்கின்றனவா? சிலர் கர்மசாஸ்திரங்களைச் சரியாகப் புரிந்துகொள்ளாததாலும், நாயின் பாலைக் குடித்ததாலோ சாப்பிடவேண்டாததைச் சாப்பிட்டதாலோ, சாபத்தினாலே, பத்துப் பிறப்பினை எடுத்தாரல்லவா? சாமவேதம்,

சிவனே. விஷ்ணுவின் பிதாமகனாகிய சிவனுக்குப் பிறகே பெயர் அதனால் வந்தது. அதிதியின் வயிற்றினால் இவர் இந்திரனுக்குச் சகோதரனாகப் பிறந்திருக்கிறார். அந்த யுகத்திலே விஷ்ணு பதவியைக் கேட்டு சிவனை வணங்கி ஒவ்வொரு பிறப்பிலும் விஷ்ணுவாகப் பிறந்து கொண்டிருக்கிறார். அவரது நிலைமை இவ்வாறு இருக்கின்றது. துர்வாசன் விஷ்ணுவைக் காலால் உதைத்ததனாலே மச்சம் வந்தது. அதுமட்டுமல்லாது, துர்வாசன் விஷ்ணு. ருக்மணி இருவரையும் வண்டியில் பூட்டி வண்டியோட்டச் செய்தார். அமிர்தத்தைக் குடிக்கும் போது உபமன்யு என்பவர் தன் கழுத்திலே இருக்கிற விஷ்ணுவைத் துப்பினார் அல்லவா? இந்த விஷ்ணுவை ஜலந்திரன் என்ற இராட்சசன் ஆகாயத்திலே சம்உறாரம் செய்தானல்லவா? ஜராசந்தனுக்குப் பயந்து ஓடி துவராகா என்ற நகரத்தை உருவாக்கினார். விஷ்ணுவை மூன்று இராட்சசர்கள் போரில் வென்றது எல்லோருக்கும் தெரிந்த விஷயம் தானே? விஷ்ணு ததீசியிடம் சக்கராயுதத்தைப் பிரயோகம் செய்தார். அவர் சக்கராயுதத்தைத் துணியினால் பொடிப்பொடியாக்கினார். விஷ்ணு பயந்து ஓடிச்சென்றார். சிவன் விஷத்தைக் குடித்து, அமிர்தத்தை உறாிக்குக் கொடுத்ததனாலே அவர் ஒரு பெண்ணாக மாறிவிட்டாரல்லவா? மாபலி சக்கரவர்த்தியிடம் பூமியை வாங்கிய பாவத்தினாலே விஷ்ணு, சமுத்திரத்தில் போனாரல்லவா? மனைவியைப் பறிகொடுத்துவிட்டு இராமன் பிரம்மஉறத்தி தோஷத்தினாலே விஷ்ணு உலகத்தில் அலைந்தாரல்லவா? விஷ்ணு, வேடனுடைய அம்பு காலில்பட்டு உயிரைவிட்டாரல்லுவா? இது உலகத்தில் எல்லோருக்கும் தெரிந்த விஷயமல்லவா? இவ்வளவு பேச்சு எதற்கு? இந்த ஆயர்பாடியில் வெண்ணெயைத் திருடிக்கொண்டு பெண்களோடு திரிந்தாரல்லவா? நந்தீஸ்வரனுடைய மூச்சிலே பிடிபட்டு, முன்பும் பின்பும் சுற்றிக்கொண்டிருக்கிறார் அல்லவா? சிவனை நிறைய யுகங்கள் மேகரூபத்தில் விஷ்ணு ஒரு மகனுக்காகப் பிரார்த்தனை செய்தாரல்லவா, நரசிம்மனை வென்று அவனின் தோலல்லவா சிவன் கட்டியிருக்கிறார்? விஷ்ணுவின் கலேபரத்தைச் சிவன் தன் முதுகில் அல்லவா வைத்துக் கொண்டிருக்கிறார். எங்களுடைய சிவன் பாதத்திலல்லவா? விஷ்ணுவின் கண் இருக்கிறது. சிவன்

விஷ்ணுவைக் சேனனைக் குத்தி எடுத்த சூலத்தை இப்பொழுதும் கையில் வைத்துக் கொண்டிருக்கிறார். அந்த சமயத்திலே அதுமட்டுமன்று எப்பொழுதும் விஷ்ணுவை சம்உறாரம் செய்வதினாலே 'உறரிஉறரன்' என்ற பெயர் வந்தது. அப்படிப்பட்ட சிவன், பாவங்கள் எல்லாவற்றையும் போக்கக் கூடியவன். வீரபத்திரன் போரில் விஷ்ணுவின் தலையை வெட்டினாரல்லவா? அவரை மட்டுமேயல்லாது, கர்வம் கொண்டால் சிவனின் முன்பு யாராயினும் வாழமுடியுமா! முன்பு பிரம்மன் கர்வம் கொண்டதால் சிவன் அவனது ஐந்தாவது தலையை வெட்டினாரல்லவா? மான் வடிவத்தில் வந்து தன் மகளைத் திருமணம் செய்துகொள்ள பிரம்மாவை சம்உறாரம் செய்தாரல்லவா? அவனுடைய மகன் கர்வம் கொண்டதால் அவனை ஒரு பறவையாக மாற்றினாரல்லவா? விஷ்ணுவைத் தெய்வமாகப் புகழ்ந்த வியாசனின் கை துண்டிக்கப்பட்டதல்லவா? கர்வமடைந்த இராவணனைத் தன்னுடைய பாதத்தினால் அழுத்தினாரல்லவா? மன்மதன் இவ்வுலகம் முழுவதும் அறிய ஒவ்வொரு வருடமும் சாம்பலாகிக் கொண்டிருக்கிறான் அல்லவா? சுவேதன் என்ற பக்தனுக்காக எமனைத் தன் சூலத்தினால் குத்திக் கொன்றுவிட்டனர். தட்சன் கர்வமடைந்து தன்னுடைய தலையைப் பறிகொடுத்தார், அதற்குச் சாட்சியாக அவனுக்கு ஆட்டுத்தலை இருக்கிறது. முற்காலத்தில் நான்தான் உலகத்திற்கு அதிபதி என்ற பகாதித்யன் என்பவனின் கண்களைப்பிடுங்கினான் அல்லவா? பூஷன் என்பவன் சிவனைத் தூஷணம் செய்ததினாலே அவனுடைய பற்களைக் கீழே விழும்படி உடைத்தார். நான் தான் இவ்வுலகத்திற்கு உயிர் என்று சொல்லிக் கொண்டிருக்கிற காற்றின் கால்களைத் துண்டித்தார் கை, நாக்கு ஆகியவை துண்டாக்கப்பட்டன. தேவேந்திரனின் கை, அதிதியின் மூக்கு, வீரபத்ரன் கோபத்தினாலே துண்டித்தார் அல்லவா? சந்திரனை தன்னுடைய கால்விரலாலே உதைத்தாரல்லவா? சிவன். சரசுவதியின் மூக்கைக் துண்டித்து யாகத்தில் போட்டாரல்லவா? அது மூவுலகத்தையும் காப்பாற்றுவதற்காகக் கங்காவை சிவன் தன் தலையில் வைத்தாரல்லவா, திரிபுராசுரனின் கர்வத்தினை அடக்கினாரல்லவா? பூமியைச் சுமந்து கொண்டிருக்கிற ஆதிசேடனைக் காலில் மோதிரமாகக் கொண்டாரல்லவா? விஷாக்கனியை நாவல்பழம் போன்று

விழுங்கினார் அல்லவா? அந்தகன், கரினதத்தியா போன்ற இராட்சசகர்களை வென்றாரல்லவா? இது போன்ற செயல்களுக்கு ஈஸ்வரன் தேவையா? சிவனின் ஒரு கணமே போதும். சிவகணங்களே இவ்வுலகத்தில் உன்னதமானவை. சிவனின் மகத்துவத்திற்கு இணை எங்குமில்லை. நான்தான் நிலையானவன் மற்றைய எல்லாமே நிலையற்றவை. இது சத்தியம் என்றதற்குச் சாட்சியாக அவரது கழுத்தில் விஷ்ணு, பிரம்மனின் எலும்புமாலை இருக்கிறது. உபமன்யன் என்ற முனிவரினாலே சிவதீட்சைபெற்று விஷ்ணு இந்திரநீல லிங்கத்தை எப்பொழுதுமே வணங்கிக் கொண்டிருக்கிறார் அல்லவா? விஷ்ணு ஆயிரம் தாமரைகளைக் கொண்டு பூசை செய்து கொண்டிருந்தார். ஒருநாள் அதில் ஒரு தாமரை குறைந்தது. தன் கண்ணைத் தாமரையாகப் பெற்று சிவனைப் பூசைசெய்து, மறுபுறம் தன் கண்ணையும் சக்கரத்தையும் பெற்றார். மச்சாவதாரத்தில் மச்சகேசுவரனை நிறுத்தி அவரை அர்ச்சனை செய்தார். வாமாவதாரத்தில் சமுத்திரத்தில் கூர்மனை நிறுத்தி, அவனைப் பக்தியோடு வணங்கினார். ராமா, சேதுவை நிர்மாணம் செய்து இராமனாதனை அர்ச்சனை செய்தார். முற்காலத்தில் பாற்கடலில் விஷ்ணு, இராமேஸ்வரனை அர்ச்சனை செய்தார். துவாரகையிலே சிவனை அர்ச்சித்தார். பிரம்மா, அலம்பூரு என்ற ஊரிலே பிரம்மேஸ்வரனையே விடாது சேவை செய்தார். இந்திரன், புஸ்பகிரி என்ற இடத்தில் இந்திரேஸ்வரனை வணங்கினார். வியாசன் வாரணாசியில் இருந்து வியாசேசுவரடைய நித்யமும் சேவை செய்துகொண்டிருக்கிறார், வணங்கிய முனிவர்கள் எல்லோருமே ஒவ்வொருவர் பெயரிலும் ஒரு இலிங்கத்தை நிறுத்தி வணங்கிக் கொண்டிருக்கிற சிவனைத்தவிர மற்றவர்களுக்குப் பக்தர்களின் குறைகளைத் தீர்த்து வைக்கும் சக்தி இருக்கிறதா? விஷ்ணு, பிரம்மா, சைனர்கள் யாருக்காவது மோட்சத்தைக் கொடுத்து இருக்கிறார்களா? விஷ்ணு, பிரம்மா போன்ற தேவர்கள், இராட்சசர்கள் மனிதர்கள், கருடர்கள் பாம்புகள், முனிவர்கள் ஆகியோருக்குச் சிவன் கொடுத்த வரங்களும் அவருடைய மகிமையையும் நீ கேட்பாயாக!

தன் கைகளாலே மிகுந்த அன்போடு பூசைசெய்ததால், மறுபடியும் பாணனுக்குக் கைகளைக் கொடுத்தார். கண்களைக்

கொடுத்த காளிதாசனுக்கு மறுபடியும் கண்களைக் கொடுத்தார். சிவனாகுமையா என்பவருக்குத் திங்கள் தோறும் கண்களைக் கொடுத்துக் கொண்டிருக்கிறார். சூரியனுக்கு குஷ்டரோகத்தைப் போக்கடித்து அவனுக்கு நல்ல உடல் தோற்றத்தைக் கொடுத்தார்.

கரிகால சோழனுக்குப் பொன்மழை பெய்யவைத்தார். கும்மரி குண்டையாவுக்கு இளமையைக் கொடுத்தார். நிம்மவ்வாவுக்காக ஏழு நாட்கள் பிரமதலோகத்தை விட்டார் அல்லவா? பொம்மய்யா கொன்ற விலங்குகளைக் கைலாயத்திற்குக் கொண்டு சென்றார். மலய ராசய்யா என்பவரை விமானத்தில் உடலோடு கைலாயத்திற்குக் கொண்டு சென்றாரல்லவா? பிள்ளை நயனாரையும் மக்களையும் சேர்த்துத் தன்னில் ஐக்கியம் செய்து கொண்டாரல்லவா? நம்பி என்றவரைக் கைலாயத்திற்குக் கொண்டு சென்றாரல்லவா? வேட்டையாடுவதற்காக வந்திருக்கிற வேடனுக்கு வேட்டையாட வந்து இரவெல்லாம் தூங்காது சிவராத்திரியில் கழித்த வேடனுக்கு உன்னத பதவி கொடுத்தாரல்லவா? இதுபோல நடந்து முடிந்த பக்தர்களின் சரித்திரம் எல்லாம் முடிவே இல்லாதது. நேற்று முந்நாள் உனக்குத் தெரிந்தபடி சிவன் மடிவாறு மாசய்யா கின்னர பாம்மய்யா போன்றவர்களுக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்தாரல்லவா? சிவனுக்கு விஷ்ணு சமானமானவர்கள் என்றும், மும்மூர்த்திகளும் ஒன்றே என்றும் ஒவ்வாத தர்க்கம் தவறு. இப்பேச்சு எல்லாம் தவறே. இவ்வாறு பேசுவது கேட்டது. பாவம் உண்டாகும். ஏதேனும் வேலை இருந்தால் கூறு என்றார். அங்கிருக்கிற அனைவரும் தோல்வியடைந்தவர்கள் போல முகத்தைக் கீழே தொங்கவிட்டுக் கொண்டு இருந்தனர். அம்மன்னன் வெட்கத்தோடு நின்றார். அங்கிருப்பவர்கள் அனைவரும் பாசய்ய மனிதரல்ல. இவர் சிவனே இது உண்மை என்றார். பிஜ்ஜலன் சென்று விட்டார். இது போன்று சிவபக்தியோடு வாழ்ந்து கொண்டிருக்கிற அனைவரையும் புகழ்ந்தனர்.



## ஏழாம் அத்தியாயம்

சிவனாகுமய்யா என்ற பக்தர் பசவண்ணாவிடம் சமூகத்தில் இருந்தார். அப்போது ஒருநாள் அந்த ஊரில் இருக்கிற பிராமணர்கள் அனைவருமே மன்னன் கூடியிருக்கிற சபைக்குச் சென்று, மன்னா! பெரிய பக்தர்கள் என்று பசவய்யா, சிவபக்தர்களின் காலில் விழுந்து கொண்டிருக்கிறார். அவர்கள் சாப்பிட்டு விட்டதை இவர் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார். எங்கள் வீட்டின் உள்ளே நுழைந்து வந்து கொண்டிருக்கிறார். சாதிப்பாகுபாடு எல்லாம் மாறிவிட்டது. இப்படி இருக்கும் போது நீதி, தர்மம் உலகத்தில் எங்கே செல்லுபடி ஆகும். ராஜ்யத்தில் இருக்கிற பாகுபாடுகள் அனைத்தும் மன்னனையே சாரும். மன்னனுக்கு இந்த விஷயத்தைச் சொல்லாவிட்டால், புரோகிதர்களாகிய எங்களுக்குத் தீங்கு வந்து சேரும். அதனால் நாங்கள் சொல்கிறோம் என்றார். உடனே, மன்னன் மிகுந்த கோபப்பட்டு பசவண்ணாவை அழைத்தார். அவர் ஒரு பல்லக்கில் ஏறி சிவனாகுமய்யாவைக் கூட்டிக் கொண்டு அங்கே வருகிறார். அவர் வந்தவுடனே, பிராமணர்கள் அவர்களைப் பார்த்து, மன்னா, நீ இவர்களைப்பார். கொஞ்சமும் பயமில்லாது இவர் வந்திருக்கிறார். அரிசனங்கள் எல்லோரையும் ஒன்றாய்ச் சேர்ப்பதற்காக அவர்களையும் பல்லக்கில் ஏற்றிக் கொண்டு வந்திருக்கிறார். இனி, இவர் யாருக்குப் பயப்படுவார் என்று கூறினார். பசவய்யா சபைக்கு அருகில் சென்று தனக்கு ஆசனமும், சிவனாகுமய்யாவிற்கு ஆசனமில்லாத காரணத்தால் தன்னுடைய வஸ்திரத்தை எடுத்து ஆசனமாக்கி சிவனாகுமய்யாவை அமரச்செய்தார். இந்த வர்ண பேதங்கள் முன்பிருந்ததா? அவ்வாறு இருக்கும் போது சாதிக்கலப்பு செய்யலாமா? சிவன் மீது பக்தி உன்னிடம் தானா பிறந்தது? இது போல இருந்தால் மழை பெய்யுமா? விளைச்சல் விளையுமா? என்று மன்னன் கூறியவுடன் பசவண்ணா, மன்னா! இந்த பிராமணர்கள் மாசல்தேவி என்றவளிடம் நிறையப் பணம் வாங்கி, உயர்ந்த வம்சம் கொடுக்கிறோம் என்று கூறி, பொன்னால் செய்த பசுமாட்டில் அவளை வைத்து, நிறையபால் விட்டு, உன்னத வம்சம் வந்தது என்று கூறி, அந்தம்மாவை வணங்கினார். அது மட்டுமல்லாது, அந்தம்மாவின் எச்சிப்பால்

குடித்து, பொன்னால் செய்த மாட்டை இவர்கள் தங்களுக்குள்ளேயே பங்கு போட்டுக் கொண்டனர். அது போல, இவர்களுடைய பேச்சினை நீங்கள் கேட்காதீர்கள். 'எல்லா' வர்ணங்களுக்கும் சிவபக்தி என்பதுதான் ஒரு குலம். சிவபக்தர்களின் கூட்டமே உண்மையான சாதி. அதனால், சிவபக்தர்களின் மகிமை இவ்வாறு என்று கூறவே முடியாது. ஒரு யானை பன்றியோடு சமானமாகுமா? கடல் குட்டையோடு சமானமாகுமா? கங்கையாற்றோடு சிறிய கால்வாய்கள் சமானமாகுமா? சூரியனோடு நட்சத்திரங்கள் சமானம் ஆகுமா? மேருமலையோடு சிற்சில குன்றுகள் சமானமாகுமா? பாரிசாத மலரோடு தெருக்களில் இருக்கும் வாசனையில்லா மலர்கள் சமானமாகுமா? அதுபோல இவரோடு பிராமணர்கள் சமானமானவர்கள் ஆவார். சிவபக்தனுக்குக் கோடி பிராமணர்களும் சமானம் என்று யார் சொல்கின்றாரோ? அவர்களின் நாக்கை நான் அறுத்துவிட்டேன் என்று அந்த மன்னனின் சபையில் கோபாவேசத்தோடு கூறினார். இந்த சிவபக்தர்களின் வீட்டு நாய்களுக்குக்கூட இந்த பக்தர்கள் சரிவர மாட்டார்கள்.

### கல்லி தேவய்யா கதை

காவினகாலா என்ற ஊரில் கல்லி தேவய்யா என்ற மாமனிதர் இருந்தார். அவர் சிவனுடைய அவதாரமே தவிர, சாமான்யவர் அல்லர். ஒரு முறை ஒரு பாம்பு கல்லி தேவய்யாவைக் கடித்தது. இறந்துவிட்டது. இவர் கருணையுள்ளம் இருந்த காரணத்தினாலே, அப்பாம்பிற்கு உயிர்கொடுத்தார். இவரது தாசி தண்ணீர் கொண்டு வரும்போது, ஒரு பிராமணன் கை இவளின் மேல் பட்டது. உடனே, அவள் தன் தலைமேல் இருக்கிற பானை கீழே விழுந்து உடைய, திரும்பி உடம்பெல்லாம் விபூதி பூசிக்கொண்டு வேறொரு பானையை எடுத்துக்கொண்டு தண்ணீர் கொண்டு வரச்சென்றார். ஒரு நல்ல பிராமணன் தொட்டவுடனே, வேறொரு பானையை எடுத்துக் கொண்டு போய்க் கொண்டிருக்கிறாள். பிராமணன் மற்றவரைத்தொடுவது உசிதமல்ல. மற்றவர்கள் பிராமணர்களைத் தொடக்கூடாது என்ற தர்மம் உண்டாகுமா? என்று அங்கிருக்கிற பிராமணர்கள் அனைவரும் சேர்ந்து கல்லி தேவய்யாவை அழைத்து, உங்களைப் பற்றி நாங்கள் நல்லவர் என்று கேள்விப்பட்டு இருக்கிறோம். உயர்ந்த கௌரவம்

உங்களுக்குக் கொடுத்திருக்கிறோம். ஆனால் உங்கள் வீட்டில் வேலை செய்து கொண்டிருக்கிற பெண் எங்களைக் கொஞ்சமும் மதிக்கவில்லை. சாமான்யமான பிராமணர் ஒருவர் போய்க் கொண்டிருக்கும் போது அவருடைய கை தன்மேல் பட்டதென்று உங்களது தாசி பானையைத் தரைமேல் போட்டு உடைத்தாள். சூத்திரர்கள் தொட்டால் பிராமணர்களுக்கு அப்படியே வஸ்திரத்தோடு ஸ்னானம் செய்யவேண்டும் என்று கூறுவார்கள். மற்றவர்களுக்குப் பிராமணர்களைத் தொடக்கூடாது என்ற நியமம் இருக்கிறதா? இது எந்த தர்மத்தில் இருக்கிறது என்று தெரியவில்லை. இந்தப் பெண் செய்தது தவறென்று தண்டிக்கிறவர்கள் யாருமே இல்லையா? உலகத்தில் இல்லாத, இந்த பூமியில் இதற்கு முன் பிறக்காத செய்திகள் நடக்காத நிகழ்ச்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன. நாங்கள் என்ன செய்ய முடியும்? என்று கூறினார்கள். அதற்கு கல்லி தேவய்யா இதில் சந்தேகம் என்ன இருக்கிறது? சிவபக்தர்களின் வீட்டில் இருக்கிற நாய்களும் உங்களைத் தொடக்கூடாது. நீங்கள் பிராமணர்களா? உங்களுக்குப் பிராமணியம் எங்கிருக்கிறது. உங்களுக்குப் பிராமணியம் என்றால் பொருள் தெரியுமா? சிவனுக்குத் தவிர மாபெரும் சக்தி யாருக்கு இருக்கிறது. இது உயர்ந்த பதவியைத் தருகின்றது. சிவனைத் தவிர, மற்றவர்களுக்கு இந்த உயர்ந்த பதவி யாருக்குக் கிடக்கும். உறரி, பிரம்மா இவர்கள் பரமாத்மாவாகச் சொல்லப்பட மாட்டார்கள். இவ்வுலகத்தில் பரபிரம்மா சிவன் மட்டும்தான். இவர்களோடு சேர்ந்திருப்பவர்கள் சிவபக்தர்கள். உறரி, விஷ்ணு, பிரம்மா, தேவேந்திரன் போன்றவர்கள் சிவனை அர்ச்சனை செய்கின்ற பக்தர்கள். அவ்வாறு இருக்கும்போது உங்களைத் தொட்டுப் பேச முடியுமா? சிவபக்தர்களோடு நீங்கள் சமானமாக முடியுமா? திருஷ்டாந்தம் இருந்தால் வாயைத்திறந்து சொல்லுங்கள் என்று கேட்டவுடனே, இவர்கள் அனைவரும் எங்கள் அனைவரையும் நாயைவிடக் கேவலமாகப் பேசிக்கொண்டிருக்கிறீர்கள். உங்கள் தாசி செய்த காரியம் நன்றாய் இருக்கிறதா? உங்கள் நாயை எங்காவது வேதத்தில் இருக்கிற ஸ்லோகத்தை பாடச் சொல்லுங்கள் என்றனர். கல்லி தேவய்யா பிராமணர்களைப் பார்த்து, வேதங்கள் உலக்கைப் பாடலைப் போன்றது. எங்களது சிவபக்தர்களின் வீட்டில் இருக்கும் நாய்களுக்கும் தெரியும் என்று கூறி, அவர் பக்கத்தில்

இருக்கும் நாயைச் சொடுக்கி அழைத்தார். கூப்பிட்ட உடனே. அந்த நாய் வந்து அவரை வணங்கியது. அவர். வேதத்தில் ஒரு பகுதியை இவர்கள் முன்பாகக்கூறு என்று கூறியவுடனே. அந்த நாய் பத்மாசனத்தில் அமர்ந்து சிவனைத் தன்னுடைய மனதில் உறுதியாக நினைத்துக்கொண்டு தன்னுடைய பார்வையை உறுதியாக வைத்துக் கொண்டு, சுத்தமான பகுதியில் ஓங்காரம் உச்சரித்தது. அங்கிருக்கிற பிராமணர்கள் பயந்து சாஸ்டாங்க நமஸ்காரம் செய்யும் போது, நான்கு வேதங்களில் இருந்து ஒவ்வொரு பகுதியை அது உச்சரித்தது. கல்லிதேவய்யா போதும் என்றவுடன் நாய் வேதம் சொல்லுவதை நிறுத்தியது. பிராமணர்களே, காதாரக் கேட்டீர்களா? பக்தர்களின் பெருமையைக் கண்ணாரப் பார்த்தீர்களா? என்று மக்கள் அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கையில் கல்லிதேவைய்யா தம் நாயை வேதம் படிக்க வைத்தார். சித்தராமய்யா விட்டிலும் ஒரு நாய் இருக்கிறது. இந்த நாய்க்கு அது குரு அதன் மகத்துவம் தெரியாது அவ்வாறு உயர்ந்தது. அதேபோன்று காளைய்யா வீட்டிலும் ஒரு நாய் இருக்கிறது. அதற்கும் வேதங்கள் நன்றாய்த் தெரியும். அதனால் பிராமணர்கள் சிவபக்தர்களின் வீட்டு நாய்களுக்கு எவ்வாறு சமானமாக முடியும்? எல்லா வேதங்கள், பிராமணங்கள் சாஸ்திரங்கள் அறிந்த ஒரு கோடி பிராமணர்கள் ஒரு சிவபக்தனுக்கு இணையாக மாட்டார்கள். ஒரு சிவபக்தனின் செருப்புக்கு, இந்த ஊரில் உள்ள பிராமணர்கள் அனைவருமே ஒரு பக்கப் தராசில் நிறுத்தினால், இந்த பிராமணர்கள் செருப்புக்கு ஈடாகமாட்டார்கள். அதனால், மற்ற வாதங்கள் தேவையில்லை என்றார்.

## பிப்ப பாசய்யா கதை

கொப்பூரி என்ற ஊரில் இந்த பக்தர் வாழ்ந்து வந்தார். அவரது மகிமையை வருணிப்பதற்குச் சிவனாலும் முடியாது. அவர் எப்போதும் சிவபக்தர்களின் பிரசாதமே உயிராகவும் உடலாகவும் நினைத்து வாழ்ந்து கொண்டிருந்தார். அவர் சிவ உற்சவ சமயத்திலே சிவபக்தர்களின் செருப்பினைக் கழுத்து, காது, மார்பு, சிரம் ஆபரணமாக அணிந்து இருந்தார். உடம்பெல்லாம் விபூதி பூசிக்கொண்டு மாட்டினை வண்டியில் பூட்டி, அதற்கு நந்திக் கொடியைக் கட்டிக்கொண்டு, மாட்டிற்கும் வண்டிருக்கும் சலங்கை

கட்டிக்கொண்டு. வண்டியின் முன்னதாகச் சிவபக்தர்கள் சத்தமிட வேறு ஊரிலுள்ள சிவபக்தர்களின் வீட்டிற்குச் செல்லுவார். அவர்களின் பாதங்களில் தன் தலையை வைத்து வணங்கி, அவர்கள் சாப்பிட்ட பிறகு. கீழே விழுந்த பிரசாதத்தைக் கூடையில் எடுத்து வண்டியில் மகிழ்ச்சியோடு வைத்து அதனைப் பிரசாதமாகவே பாவித்துக் கொண்டு. அந்த பிரசாதத்தை மூன்று வேளை சாப்பிட்டு உயிர் வாழ்ந்து வந்தார். இதனைப் பிராமணர்கள் அவர்களுக்குள்ளாக பேசிக்கொண்டனர். ஒரு நாள் அந்த ஊரில் ஒரு பக்தர் உற்சவம் செய்தார். பிப்ப பாசய்யா எப்பொழுதும் போலச் சென்று ஜங்கமர்களை வணங்கி, அவர்களின் பிரசாதம் ஒரு பருக்கைவரை கீழே விழாது கூடையில் எடுத்து, வண்டியில் போட்டுக்கொண்டு, பக்கத்தில் சிலர் கொடி பிடிக்க, சிலர் ஆட வித விதமாக வண்டியினுடன் அனைவரும் சென்று கொண்டு இருந்தனர். அந்த ஊரில் இருந்த பிராமணர்கள் ஒன்று சேர்ந்து "எல்லோரும் அங்கே நில்லுங்கள். கல்யாணத்திற்குச் செல்லுவது போன்று மிக மகிழ்ச்சியாகச் சென்று கொண்டிருக்கிறீர்களே. சிவபக்தன் யாராவது இறந்து விட்டானா? இவ்வாறு செல்கிறீர்களே. போரில் வென்றது போன்று செல்கிறீர்களே! சிவபக்தர்களின் எச்சிலைச் சாப்பிட்டு, இந்த அக்ரகாரத்திற்கு எவ்வாறு வரமுடியும்? எச்சிலை வண்டியில் இட்டுக் கொண்டு வருகிறீர்களே. இதில் என்ன பெருமை இருக்கிறது? என்று அவர்கள் அனைவரும் பிப்ப பாசய்யாவை நிறுத்துகின்றனர். பிப்ப பாசய்யா கோபத்தோடு, சிவபக்தர்களின் மகிமையை நீங்கள் புரிந்து கொள்வதற்குச் சாத்தியமாகுமா? உங்கள் அந்தஸ்து என்ன? எங்கள் அந்தஸ்து என்ன? சிவபக்தர்களின் பிரசாதத்தை அறியாமையாலே எச்சில் என்று கேவலமாகச் சொல்லுகின்றீர்கள். சிவபக்தர்கள் சரணர்களின் பிரசாதத்தைத் தூசித்தால் அதிகோரமான நரகாக்கினியில் விழுவதைப் பற்றி நீங்கள் கேள்விப்படவில்லையா? வரப்போகும் மரணத்தை நீங்கள் அறிந்து கொள்ளவில்லை, பிரசாதத்தின் பெருமையைப் புரிந்து கொள்ள உங்களுக்குச் சக்தி இருக்கிறதா? பக்தர்களுக்கு அது பரமாமிர்தம். பக்தி இல்லாதவர்களுக்குப் பிறவிக் காலத்தில் வருகின்ற நெருப்புப் போன்றது, நெருப்பில் பூச்சி விழுந்தது போல் அழிந்துபோவீர்கள், எங்கள் முன் நிற்க முடியுமா? என்று கூறியவுடன் பிப்ப பாசய்யாவைப்

பார்த்துப் பிராமணர்கள் மிகவும் கோபித்தனர். இந்த எச்சில் சாப்பாட்டைப் பெரிய புலியோ. மலையோ என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். பூச்சி காட்டிக் கொண்டிருக்கிறீர்களா? என்று பாசய்யாவைப் பார்த்துக் கேட்டனர். பிராமணர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கூப்பிட்டுக் கொண்டு உங்களுடைய வேஸ்டி. தர்ப்பையின் பை அகியவற்றை அருகில் வைத்துவிட்டு, தடி போன்றவற்றை எடுத்துக் கொண்டு வாருங்கள். அந்த மாட்டைப் பிடித்து. மாட்டில் கட்டியிருக்கிற கயிற்றை அவிழ்த்து எரியுங்கள். கொடியைக் கீழே, அவிழ்த்து எரியுங்கள். வண்டி போகாதபடி நாம் செய்ய வேண்டும் என்று கூறி, அவ்வண்டியைச் சுற்றி நின்று கொண்டிருந்தனர். அக்கேவலமான பிராமணர்களைப் பார்த்து பிப்பமாசய்யா கோபித்து எதற்காக நீங்கள் அவசரப்படுகிறீர்கள்? இந்த மகிமையைப் பார்க்க முடிந்தால் பாருங்கள் என்று பிரசாதத்தின் மீது போட்டிருந்த வஸ்திரத்தை எடுத்துக் கையிலே சாதத்தை எடுத்துக்கொண்டு, அதைக் கையிலிட்டு இரைத்த உடனே, அங்கிருந்த பிராமணர்கள் வீடு எரிய ஆரம்பித்தது. ஸ்ரீ தாபட்டு மாதவப்பா, குருட்டு கோவிந்தன், பாஸ்கரன், கொம்மனா, பம்மனா, வாமனப்பா, சோமையாஜி, பச்சலி கேசவன், வாசுதேவன், இவர்களின் வீடு அனைத்துமே எரிந்து சாம்பலானது. இதுபோல ஒரு வீட்டின் மீதிலிருந்து மற்றொரு வீட்டின் மீது பிடித்து யார் யார் சிவனை ஏசுகிறார்களோ, அவர்கள் வீடு முழுக்க சாம்பலானது. சிலர் நெருப்போடு சாம்பலானார்கள். சிலர் நெருப்போடு வெளியே வந்தார்கள். சிலர் தீயின் கொடுமை தாங்காது கிணற்றில் விழுந்தனர். சிலர் சிவபக்தர்களைப் பார்த்து, எங்களைக் காப்பாற்றுங்கள் என்று அவர்களின் பின் ஒளிந்துகொண்டனர். சிலர் சிவபக்தர்களின் வீட்டுத்திண்ணையில் ஒளிந்தனர். இதுபோல உடம்பெல்லாம் தீக்காயத்தோடு அந்த ஊரில் இருந்த பிராமணர்கள் இவரிடம் வந்து "சிவபக்தர்களே எங்களுக்கு உய்யும் வழி. நாங்கள் விலங்குகள் மட்டும் தான் என்று கூறி, வாயைத்திறந்து அழுதனர். கீழே விழுந்து நமஸ்காரம் செய்து, எங்கள் தவற்றை மன்னித்து எங்களைக் காப்பாற்றுங்கள். இந்த ஊரை (அக்ரகாரம்) ஜெனமே ஜெயன் கொடுத்தார் என்று கூறப்படுகிறது. இப்பொழுது அதனை மீண்டும் நீங்கள் எங்களுக்குத் தாருங்கள் என்று பிராமணர்கள் அனைவரும் பிரார்த்தனை

செய்தார்கள். பாசய்யா அவர்களுக்கு பிரசாதத்தை வழங்கியவுடன் (இதற்கு முன் அந்த பிரசாதம் அவர்களுக்கு நெருப்பாய் தோன்றியது) சாந்தமாயிற்று. பிராமணர்களின் வீடுகள். நெருப்பு அணைந்து நன்றாக எப்பொழுதும் போல மாறியன. மன்னா! வருடங்கள் ஒன்றும் ஆகிவிடவில்லை. இவையெல்லாம் நேற்று, அதற்கு முன் நடந்த செய்திதான். சிவனை வணங்காத ஆக்ரகுலத்தைச் சேர்ந்தவன் தாழ்த்தப்பட்ட சாதியாகத்தான் கருதப்படுவான். தாழ்த்தப்பட்டவன் சிவனை வணங்கி, உயர்ந்த பதவியைப் பெறலாம். சிவன் தாழ்த்தப்பட்ட சாதியைச் சார்ந்த சென்னையா வீட்டில் கஞ்சிகுடிக்கும் போது. அவர் தாழ்த்தப்பட்ட சாதியென்று கருதவில்லை. எங்கள் சிவபக்தனைப் பார்த்து. பிராமணர்கள் சத்தம் போட்டுக் கொண்டிருக்கலாமா? என்றார்.

## மாதர தூடய்யா கதை

மாதர தூடய்யா என்ற சிவபக்தர் இருந்தார். அவர் பெரிய மகிமை உடையவர். ஒரு நாள் உடம்பெல்லாம் விகாரமாகும் தன்மை கொண்ட குஷ்டரோகம் பிடித்த ஒரு அந்தணன், தன்னுடைய மாடு உள்ளே செல்வதினாலே, அவரும் பின் தொடர்ந்து தூடய்யா வீட்டின் உள்ளே சென்று, அங்கே பின்பக்கம் இருக்கிற தண்ணீரில் (மாதர தூடய்யா குளித்த தண்ணீர்) இவரது கால்பட்டு, கால் சேராயிற்று. அங்கே காலைக் கழுவிக் கொண்டு, வீட்டின் வெளியே வந்தார். காலையில் பார்த்தவுடன் வியாதியெல்லாம் போயின; கால்கள் மிகவும் சுத்தமாயின. அந்த அந்தணன் உடனே, ஓடிச் சென்று மாதர தூடய்யா குளித்து இருந்த தண்ணீர்ச் சேற்றிலே கீழே விழுந்து புரண்டு புரண்டு எழுந்தார். உடம்பெல்லாம் சுத்தமாகத் தூய்மையாயிற்று. தூடய்யா கால்களில் விழுந்து, அவருடைய அருளாலே அந்த அந்தணன் வீட்டிற்குச் சென்றார். சூரியனும் சிவபக்தரின் பாதத்தைக் கழுவியதால் வந்த பாத தீர்த்தத்தால் பூரண சரீரத்தை அடைந்தான் என்று புராணங்களில் நாம் கேள்விப்பட்டு இருக்கிறோம். இப்பொழுது இச்செய்தியை நாம் உண்மையாகப் பார்த்துக் கொண்டிருக்கிறோம் என்று அங்குள்ள மக்கள் அனைவரும் ஆச்சரித்துடன் பார்த்துக் கொண்டு இருக்கும் போது, அங்கிருக்கும்

7000 அந்தணர்களுக்கு அந்த தண்ணீரில் விழுந்தவுடன் குஷ்டரோகம் தீர்ந்து போயிற்று.

**பாணச பீமய்யா கதை**

பூலோகத்தில் மாமனிதனாக இவர் வாழ்ந்து வந்தார். இவர் குஷ்டரோகத்தால் வருந்திக் கொண்டிருக்கிற பிராமணர்களுக்கு அருள் செய்தார் என்று மன்னா! நீ கேட்கவில்லையா? அதனை மக்கள் அனைவரும் பாராட்டினர் அல்லவா? இந்தப் பேச்செல்லாம் எதற்கு? கர்மம் செய்கின்ற சண்டாளர்களாகிய இந்த பிராமணர்கள் எவ்வளவு கொடியவர்கள்?

**சொபச்சய்யா கதை**

சாமவேதுலு என்ற ஒரு நல்ல பிராமணர் ஆகாயத்தில் போய்க் கொண்டிருந்தார். அவ்வாறு சென்று கொண்டிருக்கும்போது. சொபச்சய்யா என்ற சிவபக்தன், ஒரு காட்டிலே சிவனுக்காக உணவு தயாரித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது மேலே சென்று கொண்டிருந்த சாமவேதியைப் பார்த்து. இவன் பார்வை எங்கு விழுகிறதோ என்று கூறி. சாதத்தைச் செருப்பெடுத்து மூடினார். இதனைப் பார்த்து. அந்த பிராமணன் சிரித்துக் கொண்டு இந்த சண்டாளன் புலால் சமைத்துக்கொண்டிருக்கிறான். எங்களைப் பார்த்தும் செருப்பைக் கொண்டு மூடினான். இதுபோன்று ஒரு கெட்ட மனிதன் இருப்பானா? என்று கூறியவுடன் அவாது மந்திர சக்தி போய் ஆகாயத்திலிருந்து தொப்பென்று கீழே விழுந்தார். உடனே அவர் சொபச்சய்யாவின் பாதங்களுக்கு வணங்கினார். அவரின் மகிமையாலே, 36 ஊரிலிருக்கிற பக்தர்கள் அனைவரையும் கூட்டிக்கொண்டு சிவலோகம் சென்றார். பழைய சிவகணங்கள் அனுசரிக்காத மார்க்கமா இப்பொழுது பக்தி மார்க்கம் வந்தது. (இப்பொழுது இது புதிதாக வந்ததில்லை என்பதனை வலியுறுத்தல்) சிவபக்தர்களின் காலத்தில் இல்லாததா புதிதாக வந்தது? சண்டாளர்களாக இருந்தாலும் லிங்க சக்தியோடு சேர்ந்திருந்தால் அவர் பிராமணர்களில் சிறந்தவர் உத்தமர் என்றார். சிவனை வணங்காத பிராமணர் சிறந்த பிராமணர் ஆனாலும் சண்டாளனிலும் சண்டாளனாவான்.

## உத்படன் கதை

பல்லக்கி என்ற ஊரில் உத்படன் என்ற ஒரு சிவபக்தன் இருந்தார். அவர் வரபோஜிராசன் என்ற மன்னனுக்குக் குருவாக இருந்து சிவதீட்சை அனுசரித்து, தான் கற்ற சாஸ்திரங்களினாலே தேசத்தில் இருக்கிற அந்நிய மதங்களைப் போக்கடித்தார். அந்த ஊரில் இருப்பவர்கள் இந்த பிராமணன், குலத்தவர்களைச் சேர்ந்து இருக்கிறார்கள் என்று போசராசரிடம் கூறுகிறார். அதனை மன்னன் கேள்விப்பட்டாலும் அதனைக் கீழ்த்தரமாக எண்ணாது அவரைப் பாராட்டிக் கொண்டிருந்தார். சிவன் உத்படரின் மகிமையைப் பிரகாசமாக்க வேண்டும் என்று அந்த பக்தனைத் தன் உடம்பிலே ஐக்கியம் செய்துகொண்டார். அவர் இறந்தவுடனே, அவர் உடல் எரியூட்டப்படும் நேரத்திற்காக அங்கிருக்கும் பூதங்கள் அனைத்தும் காத்துக்கொண்டிருந்தன. ஏனெனில், அவர் உடல் எரியூட்டப்படும் போது ஏற்படும் புகை அவைமீது பட்டால் அவை சாபவிமோசனம் அடைந்து கைலாயத்திற்குச் செல்ல நேரிடும். அவ்வண்ணமே பூதங்களும் கைலாயத்திற்குச் செல்ல, அவற்றுள் ஒன்று உணவு தேடி வேறு இடத்திற்குச் சென்று மறுநாள் வந்து பூதங்களைத் தேடியபோது அவை கண்படவில்லை. அதற்கு அந்த பூதம் உலகமெங்கும் கேட்கும் வண்ணம் அழுக, அவ்வூரில் இருக்கும் மக்கள். போசராசா போன்றோர் வந்து, ஏன் இவ்வாறு அழுகிறாய? என்று கேட்டார். அதற்கு 700 பூதங்கள் 12 ஆயிரம் வருடம் உத்படனின் மரணத்தை எதிர்நோக்கி இந்த ஆலமரத்திலே இருந்தன. நான் பசியாலே, ஓரிடம் சென்று அங்கேயே இருந்து விட்டேன். மற்ற பூதங்கள் அனைத்தும் உத்படனை எரிக்கும் புகை பட்டதனாலே கைலாயம் சென்றன. நான் மட்டும் இந்த பூலோகத்தில் இங்கே நின்றுவிட்டேன். இது பயிரை வளர்த்து யாருக்கோ பறிகொடுத்தது போன்றாயிற்று. இத்தனை காலமும் நான் காத்துக் கொண்டிருந்தது வீணாகப் போய்விட்டது. நான் தனியாக எவ்வாறு இருப்பேன்? ஆகவே. மன்னா! இங்கே அதே இடத்திலே விறகெல்லாம் இட்டு நெருப்பை உண்டாக்கு. நான் கைலாயத்திற்கும் செல்லுகிறேன். ஆலமரத்தின் அடிவேரோடு பெயர்த்துக்கொண்டு செல்லுகிறேன் என்று சொல்லியவுடனே. மன்னன் மகிழ்ச்சியுற்று, சந்தனக்கட்டை எல்லாம்

கொண்டு வந்து, வஸ்திரங்களை நெய்யிலே நனைத்து. பெரிய நெருப்பு உண்டாக்கினார்கள். அந்தப் புகை ஆலமரத்திற்கு மேலே பட்டவுடன் ஆலமரம், ஆலமரத்திற்கு மேலே இருந்த பூதம், போசாரசா. மக்கள் அனைவரும் கைலாயத்திற்குச் சென்றனர். இது போன்று உத்படரின் மகிமை மூன்று உலகங்களுக்கும் பிரசித்தமல்லவா?

**கக்கய்யா கதை**

கக்கய்யா என்ற சிவபக்தன் இருந்தார். அவர் ஊரில் பிராமணர்களுக்கு ஒரு எதிரியாக இருந்தார். அந்த ஊரிலே புராணம் சொல்லிக் கொண்டிருக்கிற பிராமணர் ஒருத்தர் இருந்தார். அவர் கதை கூறும் போது அதனோடு இல்லாததும் பொல்லாததும் புனைந்துரைப்பார். பிரம்ம கபாலத்தைக் கொண்டு சிவன் பிச்சை எடுக்கிறார் என்று மட்டும் சொல்வார். ஆனால், தன் சூலத்தினாலே விஷ்வக்சேனனைத் தூக்கியடித்த செய்தியைச் சொல்ல மாட்டார். பலி கர்வத்தை அடக்கி மீண்டும் ஆகாயத்தில் தன் காலை வைத்தார் மூன்று உலகத்தை ஆக்கிரமித்தார் என்று சொல்வாரே தவிர, சிவனின் பெருமையைச் சொல்லமாட்டார். (சிவன்) யாகம் செய்யும் போது சிவன் கோபித்து விஷ்ணுவின் தலையைத் துண்டித்தார் என்று கூறமாட்டார். ஆனால், நரசிம்ம ரூபமாக விஷ்ணு வந்து அரக்கனை வதைக்கிறார் என்பார். நரசிம்மனைச் சிவன் வென்ற விஷயத்தை மறைத்து விடுவார், சர்வம் விஷ்ணுமயம் என்று கூறுவதே தவிர, சிவன் சர்வ சம்ஹாரம் செய்யும் போது விஷ்ணுவும் அதிலே அடங்கிப் போனார் என்று கூறமாட்டார். இந்த உலகங்கள் ஒன்று என்று கூறுவார். சிவன் என்று கூறமாட்டார். விஷ்ணுவிற்கு விஷ்வம் என்ற பெயர் இருக்கிறது என்று கூறுவாரே தவிர, சிவன் விஸ்வேஸ்வரன் என்று கூறமாட்டார். விஷ்ணு மகாமாயா என்று கூறுவரே தவிர, சிவன் தான் மகாதேவன் என்று கூறமாட்டார். ஹரிஹரன் என்ற சப்தத்திற்குப் பொருள் தெரியாது விஷ்ணுவும் சிவனும் ஒருவனே என்று சொல்லுவார். ஆனால், விஷ்ணுவை வென்றதினாலே சிவனுக்கு ஹரிஹரன் என்ற பெயர் வந்தது என்று கூறமாட்டார். இது போக ஒருதலைப்பட்சமாகப் புராணக்கதைகள் கூறிக்கொண்டு,

சிவநிந்தை செய்து கொண்டு இருந்தார். அவ்வாறு சிவநிந்தை செய்து கொண்டிருக்கும் அவனைக் கொன்று அவன் படிக்கும் புத்தகத்தைத் தீயில் போடவேண்டுமென்று கக்கய்யா சிவதுரோகி மேல் பாய்ந்து அவரைச் சூலத்தாலே குத்தி, தலையைத் துண்டித்து அதனை வயிற்றிலே வைத்து, வதம் செய்தார். இதுபோன்று உடம்பெல்லாம் சேதமடையச் செய்த அந்த விஷயம் அந்த அந்தணர்களுக்குத் தெரியாதா? இது போன்றிருக்கிற பக்தர்களின் கதையைப் பார்த்தும், அவரின் பெருமைகள் தெரிந்தும் சிவபக்தர்களைப் பற்றிக் குறை கூறலாமா?

## போகய்யா கதை

கெம்பாகி என்ற ஊரிலே போகய்யா என்ற ஒரு சிவபக்தர் எப்போதும் சங்கமார்ச்சனை செய்து கொண்டு இருப்பார். சிவன் அவரது பக்தியை அனைவருக்கும் தெரியப்படுத்த ஒரு அந்நியர் போல இறந்து போன கன்றுக்குட்டியின் உடலைச் சுமந்து கொண்டு, சிவபக்தனைப் போல, பார்க்கின்றவர்களுக்கு அதிசயம் அளிக்கிற வேடத்திலே வந்தார். போகய்யா அவருக்குச் சர்வாங்கமாக நமஸ்காரம் செய்து, அவரது கையில் இருக்கிற கன்றைத் தனது கையில் மாற்றிக் கொண்டு, அவரைத் தனது வீட்டிற்கு அழைத்துக் கொண்டு வந்து, அவரது 'பாதங்களுக்குப் பாதார்ச்சனை செய்தார். பின்பு, இறந்து போன இந்தக் கன்று மாமிசத்தைச் சாப்பிட எனக்கு நியமம் என்பதினாலே. நேற்று நான் தேவரதாசி என்பவரிடம் சென்று, சமைத்துக் கொடு என்று கேட்டதற்கு, நான் துக்களவ்வாவைக் கேட்டுக் கொண்டு வருகிறேன் என்று கூறித் தாமதம் செய்தார். எனக்கு மிகப்பசியாக இருக்கிறது. இதனைச் சமைத்து எனக்குக் கொடு என்று கூறியவுடன், போகய்யா காரம், புளி, உப்பு மூன்றும் சேர்த்துச் சுவையாகச் சமைத்து உடனே வேறு காய்கறிகளையும் சமைத்து, விதவிதமான உணவினையும் அவருக்குப் பரிமாறுவதற்குத் தயாரானார். அவ்வாறு பரிமாறிக்கொண்டிருக்கிற சமயத்திலே, அக்ரகாரத்தில் இருக்கிற பிராமணர்கள் சேர்ந்து கால் தடி போன்றவற்றை எடுத்துக்கொண்டு வந்து வெட்டுங்கள், குத்துங்கள்! போகய்யாவைத் தேடி இழுத்துக்கொண்டு வாருங்கள்.

தலை உடைந்து போகும்படி அடியுங்கள் என்று கோபத்தோடு அனைவரும் பேசிக்கொண்டிருக்கும் போதே வந்த சிவனும் உடனே மாயமானார். போகய்யா மிகவும் கோபித்துக்கொண்டு மிகவும் தாழ்ந்த சாதியென்று கூச்சலிட்டுக்கொண்டு இருக்கிறீர்கள். உங்களைப் போன்று உயர்ந்த சாதியில் இருப்பவர்களுக்குச் சிவபக்தியினை உடையவர்களின் வீட்டிற்குள் நுழைய முடியாது. சிவபக்தர்களை நிந்தை செய்த உங்களுக்கு நாகம் தான் கிட்டும். சிவதூஷண செய்து கொண்டிருக்கிற உங்களைத் தொட, பார்க்க, வாதாடக் கூடாது. அதனாலே, இந்த வீடு எல்லாவற்றையும் இந்த ஊரையும் உங்கள் தலையில் தூக்கி வைத்துக் கொள்ளுங்கள். நாங்கள் செல்கிறோம் என்று கூறி, போகய்யா, அந்த ஊரை விட்டு வெளியில் வருகிறார். அப்பொழுது, சைவர்கள் வீட்டிலிருக்கிற லிங்கங்கள், கோயிலில் இருக்கிற லிங்கங்கள், அந்த இடத்தை விட்டுக் கதவுகளை உடைத்துக் கொண்டு எல்லாமே வெளியேறி போகய்யாவைப் பின் தொடர்ந்து ஒரு மலைபோன்று சென்றன உடனே, சிவபக்தர்கள் அனைவரும் மகிழ்வோடு ஆடிப் பாடினர். கெம்பாகி என்ற ஊர் இவ்வாறாகப் பாழடைந்து போயின. பயிறு காய்ந்து போனது. மரங்கள் சாய்ந்து போயின. நட்சத்திரங்கள் காய்ந்தன. ஊர் இருளாயிற்று. சமைத்த உணவுகள் கெட்டுவிட்டன. தண்ணீர் இருக்கிற கிணறு, ஏரி, குளம் ஆகியன வற்றி விட்டன தோட்டங்கள் வாடிப்போயின. மாடு, பறவைகள் ஆகியன சத்தம் செய்ய ஆரம்பித்தன. காற்று, தூசி ஊரெல்லாம் பரவிற்று. இது போன்று ஊரெல்லாம் தீச்சுவடுகள் வந்தவுடன் அந்த ஊரில் இருக்கிற மக்கள், பிராமணர்கள் அனைவருமே போகய்யா போனவுடனே, ஊரிலிருக்கிற லிங்கங்கள் அவருடனே பின்தொடர்ந்தன. அதனால், இந்த ஊரிலிருக்கிற நமக்கு இத்துன்பம் வந்து சேர்ந்தது என்று அனைவரும் சோகத்தோடு, உடனே சென்று, உங்களை நாங்கள் சரணமடைகிறோம். என்று அவருக்குச் சாஷ்டங்கமாக நமஸ்காரம் செய்தார்கள். எங்களைக் காப்பாற்றுங்கள் என்று கூறி, தலை வணங்கி, பரிதாபமாக அவரை வேண்டியவுடன் அவரும் அந்த பிராமணர்களுக்கு அபயம் கொடுத்து, போகய்யா கெம்பாகி என்று ஊருக்கு மறுபடியும் வருகிறார். அவரைப் பின்தொடர்ந்து அந்த

இலிங்கங்களும் வந்தன. மறுபடியும் அந்த இலிங்கங்கள் பெரிய பெரிய இலிங்கங்கள் இருந்த இடத்தில், சிறிய இலிங்கங்கள் இருந்த இடத்தில் பெரிய இலிங்கங்கள் இவ்வாறாக, மாறி மாறி நின்றன. மக்கள் அனைவருக்கும் தெரிவிப்பதற்காக அந்த ஊரில் மகிமைக்கு இதுவே சாட்சியாகும் என்றார்.

### குட்டவ்வா கதை

குட்டவ்வா என்ற ஒரு சிவபக்தர் சிவபக்தி நிட்டையோடு இருந்தார். அவர் உடம்பெல்லாம் குட்டம் கொண்டிருந்தாள். ஒரு நாள் அந்தம்மாள் அந்த ஊரின் தெருவிலே போய்க்கொண்டிருக்கும் போது. இந்த அக்ரகாரத்திற்கு நீ வரக்கூடாது. நில் நில் என்று கூறியவுடனே. பாவிகளான அந்த பிராமணர்களைப் பார்த்து, நான் சௌராஷ்டிரத்திற்குப் போய். நன்றாய் குணமடைந்து இந்த ஊருக்குத் திரும்புகின்றேன் என்று தன் உள்ளத்தில் ஈஸ்வரனை நினைத்துக்கூறி, சௌராஷ்டிரம் இருக்கிற திசையை நோக்கிப் புறப்பட்டார். நடப்பதற்ககூட முடியாது. முழங்காலில் நடந்தும் முடியாது, புரண்டு கொண்டே போகும் போது உடம்பெல்லாம் புண்ணாய் போனது. அப்பொழுது கருணை உள்ளம் கொண்டு சிவன் பிரத்தட்சஷ்யமாகி, சௌராடிரத்தில் இருந்து எதிர்வந்து. அவள் உடலை மனோகரமாகச் செய்தார். உனது பக்திக்கு நான் பாராட்டுகிறேன். உனக்குத் தேவையானது என்ன? என்று சிவன் கேட்டார். என் வியாதி பூர்த்தியாயிற்று. எனக்கு வேறு ஆசை எதுவும் இல்லை. ஒரு பெரியநிதி கிடைக்கும் போது மற்ற ஆசைகள் எதற்காக? நீ பத்திரமாக இங்கு இரு. எனக்கு அதுவே போதும். மற்ற வாங்கள் எதுவும் வேண்டாம். நாவேந்திகே என்ற இந்த ஊரிலேயே இரு என்று கூறியவுடன். சிவன் ஒரு அற்புதமான இலிங்க மூர்த்தியாக வாசம் செய்தார். அந்தம்மாவின் பக்தி மகிமையை ஈஸ்வரனாலும் கூறமுடியாது. அவளைக் கேலி செய்த பிராமணப்பாவிகள் எல்லோருக்கும் குஷ்டரோகம் உண்டாகி. அவர்கள் உடல் முழுக்க அசுத்தமாயிற்று. அப்படி இருக்கும் குட்டம்மாவின் சிவபக்தியை உலகில் உள்ளோர் பாராட்டினார்கள். அதனாலே சிவபக்தர்களைக் குலக்கேடு உடையவர்கள் என்று சொல்லலாமா? பிரதிஷ்டை செய்தபிறகு அதனை இலிங்கம் என்று கூறுவதற்குப் பதிலாக

சிலை எனலாமா? இலிங்க தீட்சிதனைத் தாழ்ந்த சாதி உடையவன் என்று பார்க்கலாமா? சிவபக்தனின் பூர்வ சரித்திரக்கதை ஆராய்ச்சி எல்லாமே சிவனைச் சிலை என்று கூறிய பாவத்தோடு சமானமாகும். கடலில் நதி சேர்ந்தவுடனே நதிக்கென்று தனிப்பெயர் இருக்காதல்லவா? சுத்தமான செம்பு சித்தர்களின் இந்த வேலையால் தங்கமாகும். அது போல, குருவின் ஸ்பர்சத்தினாலே தாழ்த்தப்பட்ட சிவபக்தர்களும் தூய்மை பெற்று உயர்ந்தவர்களாகிறார்கள். என்பது அதிசயமா? அதே போல உலகத்திலே உமா-மாதா, பிதா-ருத்ரா. என்று இருக்கும் போது ஒருதாய் மக்களுக்கு வேறுபாடுகள் என்ன இருக்கிறது? பிரகாசித்துக் கொண்டிருக்கிற மாணிக்கத்தைப் பழைய அழுக்கான வஸ்திரத்தில் சுற்றி வைத்தும் அதன் பிரகாசம் கெட்டுவிடுமா? அதுபோன்று சிவபக்தன் தாழ்த்தப்பட்ட சாதியில் இருந்தால் மட்டும் அவனது மகிமை குறைந்து விடுமா? சேற்றில் செந்தாமரை மலர்கிறது. அதனால் அது பூசைக்கு உதவாமலா போய்விடுகிறது. நெருப்பு சாமான்ய விறகிலிருந்து வந்தும் அது புனிதமானதாகத்தான் கருதப்படுகிறது. எங்கு இருந்தால் என்ன? சிவபக்தன் இவ்வுலகத்தில் புனிதமானவன். இந்த உயர்ந்த சாதி குருவான வியாசன், வேட்டுவ குலப்பெண்ணுக்குத் தானே பிறந்தார்? பிராமணர்களுக்கெல்லாம் ஆச்சார்யர்களுக்கான வசிஷ்டர் ஊர்வசி என்ற தேவவேசிக்கல்லவா பிறந்தார்? மாதங்கன் என்ற முனிவன் மாதங்கிக்கல்லவா பிறந்தார்? நாய், கழுதை, கிளி இவைகளுக்குப் பிறந்த முனிவர்கள் எல்லோருமே சிவபக்தியினாலேயே உயர்ந்தவர்களாகக் கருதப்பட்டார்கள் என்று தெரியுமா மன்னா? என்று கூறியவுடன் பிஜ்ஜலன் மிகுந்த கோபத்தில் பசவண்ணனைப் பார்த்து, வெட்டிப்பேச்சு, பாட்டு கதை சொல்வதற்கு நீ தயங்க மாட்டாய். சிவபக்தர்களைத் தொட்டால் பால் ஒழுகுமா? மற்றவர்களைத் தொட்டால் இரத்தம் வருமா? நீ சொல்கின்ற பேச்சின் சாயல் இவ்வாறு இருக்கிறது என்று கூறியவுடனே, பசவய்யா எழுந்து, சிவனை விட்டு மற்ற வழிகளை நோக்கிப் போகும் சிவதுரோகம் செய்பவர்களோடு வேதங்களில் சொல்லிக் கொண்டு திரிகின்ற பாவிகளோடு ததீசி போன்றவர்களின் சாபங்களாலே மாண்ட சாண்டாளர்களோடு, உயிரோடு ஒரு மாட்டைப் பிடித்து அதனை யாகம் என்ற பேரில் வதம் செய்கின்ற பிராமணர்களாகிய

துஷ்டர்களோடு காசுக்காக எந்த துரோகத்திற்காகவும் கைநீட்டிக் கொண்டிருக்கிறவர்களோடு, சோமபானம் என்ற பெயரிலே மதுபானம் செய்கின்ற பிராமணர்களோடு, இத்தனை எதற்கு? தானே கொன்று விட்டு, யாகத்தில் கொல்லப்பட்டது என்று சொல்கின்ற தீயவர்களோடு வாதம் செய்தால் பாவம் வரும். நீ கூறியபடி இந்த சிவனாகுமய்யாவின் கையிலிருந்து நான் பால் காட்டுகிறேன். அதுபோன்றே உன்னுடைய பிராமணர்களிலே உயர்ந்த சோமயாஜீயின் கையிலே காட்டுங்கள் என்று சொல்லி மன்னனின் அனுமதி பெற்று பசவண்ணா, சிவனாகுமய்யா திருவடிகளுக்குச் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து, நாகுமய்யாவின் தாமரை போன்ற கைகளைத் தன் கைகளால் பிடித்து மெதுவாக அழுத்த, பால் தொடர்ந்து வெளியே வந்து கொண்டிருந்தது. அதன் வேகம் ஆகாயத்திற்கும் பரவியது. காமதேனுவில் இருந்து எவ்வாறு பால் வெளியாயற்றோ, அதுபோலச் சிவபக்தியினாலே பால் வெளியாயிற்று. அன்று கரிகால் சோழனுக்கு சிவபெருமான் கனகமழை பொழியும்படிச் செய்தார். இன்று பசவண்ணாவிற்குப் பார்வை என்ற மழை கிடைக்கும் படிச் செய்தார். சிவபக்தர்களின் தேகம் நிர்மலமான தேகமல்லவா? என்று மக்கள் அனைவரும் பாராட்டினர். அப்பொழுது மன்னனான பிஜ்ஜலன். நாகமய்யாவின் தாமரை போன்ற பாதங்களை வணங்கி நாங்கள் அஞ்ஞானத்தில் அகங்காரத்தோடு அபராதம் செய்தோம். எங்களைக் காப்பாற்றுங்கள் என்று வேண்டினார். அங்கிருக்கிற பிராமணர்களைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே பசவண்ணா, சிவனாகுமய்யாவை யானைமேல் ஏற்றி, பின் தொடர்ந்து தனது வீட்டிற்குக் கொண்டு சென்றார். சிவனாகுமய்யாவின் இந்தப் புண்ணிய கதையை மிக்க ஆர்வத்தோடு கேட்டால், படித்தால், எழுதினால் முக்தி கிடைக்கப்பெறுவர்.

## கல்யாணபுரத்தில் வாழ்கின்ற பக்தர்கள்

சிவனுக்கு மறுசிவன் சிவனுக்குப் பிரதிநிதிகள் என்றபடி மடிவாலு மாசய்யா, மாதிராசய்யா, பிரம்மய்யா, பாசிராசய்யா, கின்னரபிரம்மய்யா, கேசிராசய்யா, கன்னட பிரம்மய்யா, கல்லிதேவய்யா, மோலிகமாரய்யா, முசிடிசவுடய்யா, சூலதபிரமய்யா, சூரிய சவுடய்யா,

கலிகேத பிரம்மய்யா, கக்கய்யா, தெலுங்கேச மனையா, தெலுங்கு சொம்மையா, சாந்ததேவன், கேசய்யா, ஏகாந்த ராமய்யா, உத்தமாங்கத கேசி கொன்னய்யா, கத்திர நாச்சய்யா, காலாக்னி ருத்திரி, சிருங்கி பொப்பையா, சிகுரு சந்தய்யா, டிங்கரி மல்லய்யா, சங்கமேஸ்வரன், கதிரெரெம்மய்யா, மகா காளிய்யா, பதுமரக, புராணத மாயிபட்டு, உதரத ராமய்யா, யோகி தேவய்யா, உதயமரக, கொன்னய்யா, தவளைய்யா, பொந்தாதேவி, சவரதசிக்கய்யா, சாரநாயண்டு, சிவமுத்து தேவன், சிக்கதேவன், சிவராத்திரி சந்தய்யா, சண்டேக சாமய்யா, முண்ட பிரம்மய்யா, பண்டிய ரேவன்னா, இண்டே சோமன்னா, உறாடகேகவருனி பிரம்மய்யா, மகாபலன், கோடேக காமய்யா, குட்டய்யா, தும்மத பிரம்மய்யா, தூர்சடிகேசி, எம்மசங்கய்யா, கபிலேக விஸ்ஸய்யா, நுனிமேக சிக்கய்யா, உலுக்கச்சந்தய்யா, கணதாசிமாதன்னா, கண்டிமல்லய்யா, மொர கேதய்யா, யரவிகெல்லய்யா, கிரிகீடு சிங்கய்யா, குரஜ காளவ்வா, பானஸபீமய்யா, பாஸ்கரய்யா, கோனிய மல்லய்யா, கொக்கையா, அல்லையா, மதுபையா, அனிமிச கேசி கொல்லையா, கோடல்ல மல்லைய்யா, ஒலே பிரமய்யா, பாலபிரமய்யா, பந்திகார மல்லய்யா, யவகர கேதய்யா, சிவனாகுமய்யா, நிஜநிந்த சிக்கய்யா, அங்கபிரம்மய்யா, கரகால பிரமய்யா, கங்கேக பங்கையா, லெங்கமஞ்சய்யா, ஏலேக பிரமய்யா, ஈடே பிரம்மய்யா, மயிலன பிரமய்யா, மாயிதேவய்யா, செக்கர பிரமய்யா, சரணய்யா, சிரிசிக்கபிரமய்யா, சிரிகிரய்யா, வீரமாரய்யா, வீரலிங்கையா, வீர பிரமய்யா, வீரபாவய்யா, வீரநாகைய்யா, வீர கல்லையா, வீர போகய்யா, விமல தேவைய்யா, கக்கையா, கல்லையா, காடகோடய்யா, சிக்கையா, குண்டையா, சண்டேக பிரமய்யா, சங்கரய்யா, அம்ருத தேவைய்யா, அனிமிசய்யா. விமலதேவன் போன்றவர்கள் சிவபக்தர்கள். எங்களுடைய பக்தி மகிமையை உலகம் முழுக்கத் தெரியும்படி வாழ்ந்தனர். இவர்களுடைய கதை, வைபவம், பார்த்தவர்கள், சொன்னவர்கள், கேட்டவர்கள் சிவபக்தர்களாக வாழ்ந்து உலகில் சுகமாய் இருப்பர்.

கோனார்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து மன்னனிடம் சென்று, இந்த ஊரில் நடக்காதது எல்லாம் நடந்து கொண்டிருக்கிறது. இங்கு சைவர்கள் கண்ட ஸ்ரீசிவுடு, கௌரிநாதசிவுடு, திரிலோசனசிவுடு,

**ஈசான சிவுடு, மகேஸ்வர சிவுடு, போன்ற சைவப் பிரமுகர்கள்** இருக்கின்றார்கள். இது என்ன மதமோ தெரியவில்லை. இந்த பசவண்ணா பக்தர்களோடு சேர்ந்து பிரசாதம் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார். எங்களுக்குக் கொடுக்கவில்லை.

முற்காலத்தில் எங்களில் சிறுவன் ஒருபையன் மாடுமேய்க்கச் சென்று, அங்கு மணலில் ஒரு இலிங்கம் செய்து, அங்கு மாட்டில் பால் கரந்தான். அப்போது பாலெல்லாம் இதுபோலத் தரையில் விட்டுக் கொண்டிருக்கிறாயே என்று கூறிச் சிறுவனின் தந்தை அக்குழந்தையை வதை செய்தார். தந்தையென்று கருதாது, அவரை வெட்டி, சிவனை மகிழ்ச்சியடையச் செய்தான். அவரிடம் பிரசாதம் படைத்து, ஆதிசண்டேஸ்வரன் எங்களுக்குக் கொடுத்தார். அப்போதிருந்து எங்கள் பரம்பரையினர் பிரசாதத்தைச் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறோம். இப்போது இந்த பசவய்யா தந்திரம் செய்ததினால் இவர்கள் எங்களோடு பிரசாதம் கொடுக்காது, சண்டையிட்டுக் கொண்டிருக்கிறார்கள். எங்களுக்கு சிவ வழிபாட்டை நியாயம் செய்தால் சரி, இல்லாவிட்டால் நாங்கள் உன் வாசலில் அக்னி குண்டம் ஏற்றி அதில் நாங்கள் சாம்பலாவோம் என்று கூறினர். அப்பொழுது மன்னன், ஆட்களை அழைத்து பசவய்யாவை அழைத்து வாருங்கள் என்று ஆணை இட்டார். அவர் வந்தவுடன் மன்னன் அவர்களைப் பார்த்து, இவ்வாறு ஏன் நீங்கள் செய்கிறீர்கள்? இது முதலில் இருந்து நடக்கிறதா? அல்லது உங்கள் பலத்தினாலே இவ்வாறு செய்கிறீர்களா? இவ்வாறு அவர்களுக்குக் கொடுக்காது சாப்பிடுவது முறையாகுமா? என்றார். அதற்கு பசவண்ண சண்டேசுவரனுக்குச் சிவன் கொடுத்த முறையை நான் சொல்கிறேன் கேளுங்கள். வேதங்களில் சொல்லப்பட்டபடி மனிதர்கள் சிவனுடைய பிரசாதத்தைக் கையில் வாங்கினாலும் பார்த்தாலும் இவர்கள் நரகத்தில் விழுவர். ஸ்ரீகுருவின் கருணையினாலே அவருடைய அன்பால் கொடுக்கப்பட்ட பிரசாதம் தான் ஆகமவிதிகளின்படி கொடுக்கப்பட்ட பிரசாதம். மற்றவை பிரசாதமல்ல. அதைப்பார்த்தாலும் சாப்பிட்டாலும் நரகத்தில் விழுவர். இலிங்க வழிபாட்டுப் பிரசாதத்தைச் சாமான்யமானவர்களாலே எவ்வாறு பெறமுடியும்? அவ்வாறு இருக்கும்போது, இந்தக் கதையெல்லாம் வேண்டாம். நீங்கள்

அமைதியாய் இருப்பது நல்லது என்றார். பசவண்ணா இவ்வாறு கூறியவுடன் வாரணாசி, கயா, கேதாரம், ஸ்ரீசைலம், சௌராஷ்டிரம் ஆகிய இடங்களில் எல்லாம் எங்களைப் பற்றியே பேசிக் கொண்டிருக்கின்றனர். இங்குமட்டும் எப்படி எங்கள் பேச்சு செல்லாது என்கிறீர்கள்? இந்த பிரசாதத்தை நாங்கள் விடமாட்டோம் என்று கோனார்கள் அனைவரும் கூறினர். பசவண்ணா தன் கண்களாலே சிரிப்புடன் பார்த்துக் கொண்டு காற்றில் சிறு, சிறு இலைகள் மட்டுமே போகுமா? எங்களோடு சண்டையிட்டு வெல்வதற்கு விஷ்ணு பிரம்மனாலேயே சாத்தியமாகாது. உங்களால் எவ்வாறு முடியும்? அதனால் நீங்கள் இங்கிருந்து சென்றுவிடுங்கள். சைவ சிவ ஆலயங்களைத் தவிர, வீரமாகேசுவர்களின் வீட்டில் எப்பொழுதாவது பிரசாதம் வாங்கி உண்டிருக்கிறீர்களா? சைவ சிவ ஆலயங்கள் தவிர வீர மாகேஸ்வரர்களின் வீட்டில் நீங்கள் வாங்கியிருந்தால் சொல்லுங்கள். நான் தருகிறேன். நீங்கள் சைவர்களாய் இருந்தால் மட்டும் என்ன? பிராணலிங்க பிரசாதத்தை, வீரமாகேஸ்வரர ஆச்சாரத்தைக் கடைபிடிக்காததினாலே கொடுக்கவில்லை. உங்களுக்குப் பிடித்தமானால் எங்களது தெய்வத்திற்கு, கடினமான விரதத்தினை படைக்கிறோம். உங்களுக்குப் பிரசாதமாகத் தருகிறோம். வாருங்கள் என்றனர் அவர்கள் அனைவரும். எங்களை ஒரே முறையில் கொல்லவேண்டும் என்று திட்டமிட்டுக் கொண்டிருக்கிறாயா? உயிரிருந்தால் எப்படியாவது வாழலாம்? அதைச் சாப்பிட்டு யார் உயிரைப் போக்கடித்துக் கொள்ளுவர்? நாங்கள் அனைவரும் பைத்தியக்காரர்களா? உலகில் சிவனுக்கு விஷம் கொடுத்தவர்கள் யாராவது இருக்கிறார்களா? பிரசாதம் என்று விஷத்தைச் சாப்பிட்டவர்கள் யாராவது இருக்கிறீர்களா? நல்ல பிரசாதம் அனைத்தையும் நீங்கள் சாப்பிட வேண்டும். விஷத்தை, விஷமென்று தெரிந்தும் எவ்வாறு கொடுக்கிறீர்கள்? அப்பிரசாதத்தை நீங்களே சாப்பிடுங்கள் என்று கூறியவுடன், அந்த விஷத்தைச் சாப்பிட்டு நீங்கள் உயிர் வாழ்ந்தால் அப்பிரசாதம் உங்களுக்குத்தான் என்று கோனார்கள் கூறினர். பிஜ்ஜலன் இருவரையும் அழைத்துக்கொண்டு சிவன் கோயிலுக்கு வருகின்றார். அவரோடு கோனார்களும் வருகிறார்கள்.

**பசவண்ணா விஷம் சாப்பிடுதல்**

பசவண்ணா பக்தர்கள் அனைவரையும் அழைத்துக்கொண்டு, உலகத்தில் இருக்கிற எல்லா விஷத்தையும் ஒன்று சேர்த்துப் பயங்கரமான விஷத்தைச் செய்தார். அதன் காற்றுப் பட்டாலே விலங்குகள் அனைத்தும் அங்கேயே உயிரை விட்டுவிடும். மரங்கள் கீழே விழுந்து உயிரை விடும். இதனைக் கொடுத்தால் உயிரோடு எவ்வாறு இருக்கமுடியும். என்று கோனார்கள் எல்லோரும் பயந்து கொண்டு இருக்கும்போது, அவ்விஷத்தைப் பொன்னாலாகிய பாத்திரத்திலே வைத்து சமைத்துக்கொண்டு வந்து, சாமிக்குத் தீபங்கள் காட்டி, பஞ்சமகா வாத்தியங்கள் அனைத்தும் வாசித்துக் கொண்டிருக்கும்போது, பசவண்ணா, மடிவாலு மாசய்யா போன்ற சிவபக்தர்களுக்கு மிகுந்த பக்தியாக சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து, பாத்திரத்தின் மூடியை எடுத்தவுடன் விஷம், சிவனின் மூன்றாவது கண்ணில் இருக்கிற கோபாக்கினி போல எழுந்து ஆகாயமெங்கும் ஆக்கிரமித்தது. சூரியன் மறைந்து விட்டான். பூலோகம் துன்பத்தில் உழன்றது. பிரமாண்டமெல்லாம் புகை ஆக்ரமித்தது. இது ஆலகாலம் என்று சொல்லி விஷ்ணு பயந்தார். கழுத்தில் இருக்கிற விஷம் எப்படிப் போனதோ என்று சிவன் பயந்தார். அப்பொழுது சிவனுடைய மூன்றாவது கண்ணில் அக்னி வந்து, பூமியெங்கும் ஆக்ரமித்தது. பசவண்ணா, கோனார்களையடித்து, சிவபக்தர்களின் மகிமையை நீங்கள் பார்த்தும் பார்க்கவில்லை கேட்டும் கேட்கவில்லை இருந்தும் இல்லை என்ற பேச்சே வேண்டாம். அகில உலகங்களுக்கும் சிவபக்தர்கள் தூய்மையானவர்கள். இணையற்றவனான சிவன் தான் தலைவன். நாங்கள் மட்டும்தான் பிரசாதத்திற்கு உரியவர்கள். இது சரியல்ல என்று கூறுகின்ற துரோகிகளை நரகத்திற்கு அனுப்பி வைக்கிறேன் என்று கூறி, பசவண்ணா சங்கமேஸ்வரனுக்கு அவ்விஷத்தைப் பக்தியோடு சமர்ப்பணம் செய்தார். அதன் பிறகு, அதனைச் ஒருவருக்கொருவர் பரிமாறிச் சாப்பிட்டனர். சித்தய்யா குடி. சத்தம் போடாதே சங்கய்ய தேவா! இப்பவே கொண்டு வருகிறேன் திரிபுராரி, இங்கு வந்து உட்கார் விமலாத்மா! கால கணடையாவிற்கு இது போதாது.

சீரய்யா உனக்கு இது போதும், விரூபட்சா என்ன அவசரம்? கோகய்யா! இந்த கரண்டி உனக்குப்போதும். போதாதா, இன்னும் கொஞ்சம் கொண்டு வரட்டுமா? சங்கராச்சாரி! இன்னும் கொஞ்சம் இன்னும் கொஞ்சம் குடி. எவ்வளவு சாப்பிட்டாலும் சுவையாகத்தான் இருக்கிறது. ஜகதேவா! மீதியிருந்தால் எனக்குத்தான், இன்னும் கொஞ்சம் கொண்டு வரட்டுமா? மஞ்சய்யா! சின்னதேவனுக்கு எவ்வளவு கொடுத்தாலும் திருப்தியில்லை. வயிராற சாப்பிடு கல்யாணதேவா! கொக்கவ்வா மகாதேவி, குட்டலதேவி, துக்கலதேவி, சத்யோசாததேவி, யம்மவ்வா, சகளவ்வா, யசலதேவம்மா, நிம்மவ்வா, சாந்தவ்வா, பம்மலதேவி, காளவ்வா, கேதவ்வா, காமலதேவி, பசவம்மா, சோமல தேவி, சங்கவ்வா, சிவதேவி, சாகளதேவி, லிங்கவ்வா, ரெப்பவ்வா, மங்களதேவி, பிரமதவ்வா, பாசவ்வா, பதுமலதேவி, விமலவ்வா, செல்லவ்வா, சித்தலதேவி, ஏக்கவ்வா, கோடவ்வா, ஆனந்த தேவி, கொல்லவ்வா, கல்லவ்வா, கொன்னலதேவி, கன்னவ்வா, மல்லவ்வா, அனிமிசதேவி, கேதலதேவி, புராதவ்வா நீங்கள் அனைவரும் இந்தப் பந்தியில் உரிமையோடு அமருங்கள். இதுபோல சந்தோஷத்தினை நாங்கள் எப்பொழுதும் பார்க்கவில்லை. என் வயிறு நிறைந்தது. இன்னும் கொஞ்சம் கொண்டு வரட்டுமா? ஏப்பம் விடுவதற்குக்கூட இடமில்லை என்று கூறி, சிலர் பாடுபவர்கள் ஓடியவர்கள், ஒரு காலில் நிற்பவர்கள், வணங்கிக்கொண்டிருப்பவர்கள், ஒருவரின் சாப்பாட்டை மற்றையவர்கள் எடுத்துச் சாப்பிடுவது இதுபோன்று சிவபக்தர்கள் சந்தோஷமாக இருக்கும்போது, பசவண்ணா பிரசாதத்தை அங்கிருப்பவர்களுக்கு மட்டுமல்லாமல் வேலைக்காரர்களுக்கும் சபையில் இருக்கும் அனைவர்க்கும் பந்தியிட்டுக் கொடுத்தார். சபையில் இருக்கிற அனைவருக்கும் சாப்பாடு பரிமாற, அந்த விஷம் பருப்புடன் கலந்த நெய் போன்ற ருசியாக இருந்தது. அதன் பிறகு திரும்பி யானைகளை அழைத்துக் கொடுத்தார். அதுபோன்றே சுப்ரசன்னன், தர்மகீர்த்தி, வாயுவேதன், போன்ற குதிரைகளுக்கும் கொடுத்தார். இதனைப்பார்த்து, கோனார்கள் நடுங்கி வணங்கிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஆகாயத்தில் இருந்து பூமழை அவர்மீது பொழிந்தது. மன்னனான பிஜ்ஜலன் அவரை வணங்கினான். அனைவரும் அவரைப் புகழ்ந்து

பாடினார்கள். முற்காலத்தில் சிவன் விஷத்தைச் சாப்பிட்டு, அதனை விழுங்கப் பயந்தல்லவா அப்படியே கழுத்தில் வைத்தார்? அதென்ன பெரிய விஷயம்? அதைவிடப் பயங்கரமான விஷத்தைப் பசவண்ணா வயிறாற சாப்பிட்டார். அமிர்தம் குடித்ததனாலே தேவர்கள் அனைவரும் தெளிவில்லாது இருக்கிறார்கள். ஆனால், பசவண்ணா, இந்த விஷத்தைக் குடித்து, இணையற்ற ஒளியோடு பிரகாசித்துக் கொண்டிருக்கிறார் என்று உலகமெல்லாம் அவரைப் பாராட்டியது. அப்பொழுது அங்கிருந்த கோனார்கள் அனைவரும் அதனைப் பார்த்து, அவரைப் புகழ்ந்து பாராட்டி சாஷ்டாங்கமாக அவரை வணங்கி, பசவண்ணா! எங்களுக்கு அபயம் கொடு. நாங்கள் உங்களுக்கு நிகர் ஆகமுடியாது. கெட்டவனின் சிநேகிதத்தைக் காட்டிலும் நல்லவனோடு பகைவைத்துக்கொள்வது சிறந்தது என்று கூறுவார்கள். அதனால் எங்களைக் காப்பாற்று என்று பலபல விதமாய்ப் பிரார்த்தனை செய்தார்கள். பசவண்ணா அவர்களைக் கருணையோடு பார்த்தார். பக்தர்கள் அனைவரும் அவரைப் பாராட்டினார்கள்.

## ஜெகதேவ தண்டநாயக்கன் கதை

ஜெகதேவன் என்ற பக்தன் சிவபக்தியோடு வாழ்ந்து வந்தார். வீட்டில் சுபகாரியம் செய்யும் போது, அவர் பசவண்ணாவிடம் வந்து, நீங்கள் எங்கள் வீட்டிற்கு வருகைதந்து எங்கள் வீட்டில் உணவு உண்ண வேண்டும் என்று அழைத்தார். அப்பொழுது பசவண்ணா பக்தர்கள் அழைத்தால் வராமல் இருப்பேனா! கண்டிப்பாய் வருகிறேன் என்றார். ஜெகதேவன் வீட்டிற்குச் சென்று, விதவிதமாகப் பதார்த்தங்கள் பசவன்னாவிற்காகச் செய்து வைத்தார். பசவன்னா வருவதற்கு முன்னதாகவே அபிஷேகம் செய்ய வேண்டுமென்று நினைத்து, அந்தணர்களை அழைத்து வந்து, அவர்களின் திருவடிகளைக் கழுவினார். வேலைக்காரர்கள் மூலமாகப் பசவன்னா இதனையறிந்து ஜெகதேவன் வருவதனைப் பார்த்து, ஒரு திரையை நடுவில் வைத்து, நீ உள்ளே வராதே, வெளியே செல். பக்தர்கள் கூட்டத்தில் இருப்பதற்கு நீ தகுதியில்லாதவன். நம் குலதெய்வமாகிய சிவன் இருக்கும் போது, மற்ற வழிகளில் செல்லுவது சரியா? அவனை வணங்கி, மற்ற மனிதர்களுக்கு வணக்கம் செய்யலாமா? சிவனை பூஜை செய்த கைகளாலே, பிராமணர்களின் கால்களைக்

கழுவலாமா? சிவனின் திருவடிகளில் ஸ்ரீ மகாதேவனைப் பூசை செய்கின்ற கைகளாலே, நாமம் போட்டுக் கொண்டிருக்கின்ற நாய்களைப் பூசிக்கலாமா? தூய்மையான லிங்க பிரசாதத்தை உண்டு வாழ்கின்றவர்களுக்கு ஈஸ்வரபக்தி இல்லாதவர்கள் உடன் சேர்ந்து சாப்பிடுவது கர்மத்தில் விழுவதற்குச் சமமாகும். சிவன் வீட்டில் இருக்கிற பக்தர்கள் புத்திரர்கள், மனைவி, நண்பர்கள், அந்த கோத்திரத்தைச் சார்ந்தவர்கள், மற்றவர்கள் எல்லோருமே இலிங்கதாரண்யம் செய்யாதிருந்து கலந்திருந்தால், சண்டாளர்களோடு சேர்ந்து வாழ்கின்ற தோஷம் வரும். பார்ப்பதனாலே பாவம் வரும் என்றிருக்கும் போது, அவர்களோடு பேசுவது, அவர்களோடு சேர்ந்து உட்கார்வது இவை எல்லாம் சிவபக்தர்களுக்குத் தகுந்த வேலையா? பசுபதியின் பக்தியின் வழி என்னவென்று கூறமுடியும்? விலங்குகளையும் பக்திமார்க்கத்தில் உண்டாக்கச் சொல்வார்.

## ஏலேசுவரு கேதய்யா கதை

ஏலேசுவரு கேதய்யா என்ற சிவபக்தன் இருந்தார். அவர் மக்கள், நண்பர்கள், மனைவி, பந்துக்கள், வேலைக்காரர்கள், மாடுமேய்ப்பவர்கள், வீட்டிலிருக்கிற பசுக்கள், நாய், மற்றும் பூனை இவற்றையெல்லாம் இலிங்கதாரயம் செய்தார். அவர் எப்போதுமே சிவபக்தி இல்லாதவர்களை நினைக்க மாட்டார். அவர்களைப் பார்க்கமாட்டார். காலடிவைக்கமாட்டார். எப்போதும் கொடுக்க மாட்டார், அவர்களிடம் பணம் கொடுத்து வாங்கமாட்டார். தான் விற்கவும் மாட்டார். எப்போதுமே அவர்களோடு சிநேகிதம் கொள்ளமாட்டார். சிவபக்தர்கள் இதுபோன்று வாழவேண்டும் என்று பாராட்டும்படி வாழ்ந்து வந்தார். இவ்வாறு இருந்தால், சிவபக்தர்களல்லாதவர்கள் அவருக்குத் தொல்லை கொடுத்து வந்தார்கள். இவர் பயிர் செய்வதற்காக விதைகளை வைத்திருந்தார். அவ்விதை இருந்த இடத்திற்கு இவர்கள் நெருப்பினை வைத்து, தூரத்தில் இருந்து வேடிக்கை பார்த்துக்கொண்டு இருந்தனர். கேதய்யாவிற்கு இது தெரிந்து, அவர் பதட்டப்படாது ஆகட்டும் என்று பானையில் தண்ணீர் நிறையக் கொண்டு வந்து, சுட்ட விதையை பூமியில் விதைத்தார். பின்பு நிறைய பயிர் விளைச்சலைப்

பெற்றார். இதற்கு முற்காலத்தில் பிரம்மய்யா என்பவர் வயலில் விதைக்காது விளைச்சலைப் பெற்றார் என்பதனை நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். அதனை இன்று நாம் கண்ணாரக் காண்கிறோம். சிவபக்தர்களின் மகிமையை நினைத்தால், இது பெரிய அதிசயமல்ல என்று அனைவரும் பாராட்டினர். மறுபடியும் அந்த ஊரில் இருக்கிற சிவபக்தால்லாதவர்கள் இந்த விலங்குகள் மேல் ஏன் பக்தி? என்று கூறி, சில திருடர்களை அழைத்து, கட்டிப்போட்டிருந்த பசுக்களை அந்த இடத்திலிருந்து வேறொரு இடத்திற்கு யாரும் அறியாமல் ஓட்டிச் செல்லச் செய்தனர். பசுக்கள் அனைத்தும் போய்க்கொண்டு இருக்கும்போது, பசுக்களின் நாதனான பசுபதி அங்கே இருந்த பசுக்கள் எங்கும் புல் சாப்பிடாது, தண்ணீரும் அருந்தாது, ஏழு நாட்களும் இருந்தன. இதென்ன அதிசயமாய் இருக்கிறது. இவ்வாறு இருந்தால் இறந்துவிடுமோ என்று எண்ணி, மறுபடியும் அதனை, அவிழ்த்து விட்டனர். அவைகளும் எங்குமே நிற்காது, நேரே பசுக்கள் கட்டிப்போடுகின்ற இடத்திற்கு வந்தன. இவர் அதனைப்பார்த்து, இப்பசுக்கள் விரதத்திலிருந்து மாறியவை, இவை இருக்கும் திசையை நோக்கிப் பார்த்தாலே பாவம் என்று கதவினைத் தாழ் போட்டார். பசுக்கள் வாசலில் நின்றன. அக்கம் பக்கத்தினர் புல், தண்ணீர் கொண்டு வந்து கொடுக்க, நாங்கள் விரதம் தவறமாட்டோம் என்று கூறி அவை இருக்கும். பக்கம் கூட பார்க்க மறுத்தன. வாசலின் உள்ளே நித்யமும் வணங்கக்கூடிய இஷ்டலிங்கத்தை எட்டி, எட்டிப் பார்த்து அம்மா என்று கத்திக்கொண்டிருந்தன. கேதய்யா கூப்பிடாது, நாம் உள்ளே செல்லக்கூடாது என்று வாசலில் நின்று கொண்டிருந்தன. உள்ளே இருந்த கன்றுகள் எங்கே தங்களது தாய் வராததனாலே நியமம் தவறிவிடுமோ என்று நினைத்துக் கத்தாது, எதுவும் உண்ணாது இருந்தது. இவையெல்லாவற்றையும் பார்த்து, இதென்ன அற்புதம் என்று கூறி, கேதய்யா கதவைத் திறந்தவுடன் பசுக்கள் வேகமாக வந்து, லிங்கத்தைப்பார்த்து, லிங்கத்தைத் தொட்டு, கேதய்யாவின் பாதங்களில் வணங்கி அதன்பின் புல், தண்ணீர் சாப்பிட்டன. அப்பொழுது கேதய்யா பசுக்களை மன்னித்தார் என்று தெரிந்து,

கன்றுகள் தாயிடம் வந்து பாலைக் குடித்தன. கேதய்யா வீட்டிலிருக்கிற பசுக்களும் சிவபக்தர்களாக இருக்கும் போது நீ எவ்வாறு மற்றவரோடு சேரலாம்! என்றார்.

**சவரத நாசய்யா கதை**

சவரத நாசய்யா மனைவிக்கு இரட்டைக் குழந்தைகள் பிறந்தன. பிறக்கும் போதே ஒரு குழந்தைக்கு இலிங்கத்தைக் (அளித்தனர்) கொடுத்தார். மற்றொரு குழந்தைக்கு இலிங்கத்தைக் கொடுக்க முடியவில்லை. அப்பொழுது மனைவி கணவனுக்கு அந்த விஷயம் கூறினார். உடனே, அவர் இந்தக் குழந்தை நல்ல வழி தவறிவிட்டது. இதனைத்தூக்கி எறியுங்கள். இதனைப் பார்க்கக் கூடாது. என்று அந்தக் குழந்தையை ஏற்றுக்கொள்ளவில்லை. முற்காலத்தில் சொல்லப்பட்டது. நல்ல வழிகள் எத்தனையோ இருக்கும் போது. கெட்டவழிகளில் நீ செல்லலாமா? பசுபதி இருக்கும்போது. பசுக்களை இம்சிப்பவர்களிடம் தவிர, உன்னைப்போன்று கர்மிகளிடம் இருப்பாரா? தூய்மையான சிவாகார மகிமை நீசனான உனக்கு எவ்வாறு தெரியும்! குருடனுக்கு விளக்கு வெளிச்சம் எவ்வாறு தெரியும்? செவிடனுக்கு நாதம் எதற்கு? காய்ச்சலில் இருப்பவனுக்கு நாவின் சுவை தெரியுமா! தவளைக்குக் கடலின் ஆழம் தெரியுமா? குரங்கிற்கு இரத்தினங்களின் பெருமைபற்றித் தெரியுமா? நாய்க்குச் சொர்க்கலோகம் தெரியுமா? மகரத்திற்கு? வருமா? வீட்டின் வாசலில் பெருநிதி இருக்கும் போது, கெட்ட வழிகளில் செல்வது எதற்கு? உயர்ந்த இரத்தினங்களில் இராசா இருக்கும் போது உடைந்த கண்ணாடித்துண்டுகள் பொறுக்கலாமா? வீட்டிலே காமதேனு கேட்டதெல்லாம் கொடுக்கும்போது, பாலை கொடுக்காத மாட்டிடம் . பாலுக்காகப் பாத்திரம் கொண்டு செல்லலாமா? அதிசயமான வஜ்ஜிராயதம் இருக்கும் போது. மரம் வெட்ட பயன்படும் அரிவாளுக்கு ஆசைப்படலாமா? வீட்டின் அருகில் கற்பகமாம் இருக்கும்போது காய்ந்துபோன மரத்துக்கு ஆசைப்படலாமா? நல்ல பக்தி மார்க்கம் இருக்கும் போது. அம்மார்க்கம் மதி கெட்டவர்க்கு நல்ல மதி எவ்வாறு வரும்? நாய் வாலை எப்படி நிமிர்த்திக்கட்டினாலும் நிமிருமா? சிலையைத்

தண்ணீரில் எத்தனை நாள் வைத்தாலும் மென்மையாகுமா? எவ்வாறு பாலை ஊற்றினாலும் பாம்பு விஷத்தைவிடுமா? தேன் கலந்து அரைத்தாலும் வேம்பு. தித்திக்குமா? பொன் கலப்பையில் உழுது விஷம் இருக்கிற விதையை நட்டாற்போல, கற்பூர மரத்தை வெட்டி அதற்குப் பதிலாக முட்மரங்களை வளர்ப்பது போல் பிரகாசித்துக்கொண்டிருக்கிற இலிங்கத்திற்குச் செய்யாத பூசைகள் அனைத்துமே பயனற்றவை தான். சிவனுக்கு எதிராக யாகம் செய்து, தட்சன் தலையைப் பறிகொடுத்தான். பரசுராமன் பிராமணர்களுக்குப் பூமிதானம் கொடுத்து எதைக் கண்டார்? உலகமெல்லாம் தெரியும்படி, பிராமணர்களைப் பூசித்த பலி ஒரு வலையில் மாட்டிக்கொண்டாரல்லவா? கௌதமன் பிராமணர்களுக்குப் பரிமாறியதாலேயே கோகத்யா தோஷம் வந்து சேர்ந்தது? வேதம் நன்கு அறிந்த ஒரு கோடி பிராமணர்களுள் எல்லோருக்குமே திருப்தியாக உண்ணச்செய்த பலன் ஒரு சிவபக்தனுக்குப் பிச்சையிடுவதற்குச் சமானமாகாது. அவ்வாறு மகிமை வாய்ந்தது என்று சிறப்புக் கூறி நீ செய்கின்ற தர்மம் பயனில்லாதது என்று பசவன்னா கூறியவுடன் கண்களில் சோகத்தினால் கண்ணீர் வழிந்தது செகதேவனுக்கு. அங்கிருக்கிற சிவபக்தர்களை வணங்கி, அவர்களைத் துதித்து, நான் ஒரு பாவி, நான் அஞ்ஞானி, கர்மம் என்ற பாசத்திலே நான் பிடிபட்டு அனாச்சாரம் செய்தேன். இதற்குப் பிராயச்சித்தம் எதுவுமே இல்லை. நான் உயிரை விடுகின்றேன் எனக்கு அனுமதி கொடுங்கள் என்று அங்கிருக்கிற சிவபக்தர்களின் அனுமதி கேட்டார். பசவன்னா, ஜெகதேவனைப்பார்த்து, நீ பயப்படாதே, சில நாட்களில் இங்கு ஒரு சிவதுரோகம் நடக்கப்போகிறது. அந்த துரோகியை நீ வதம் செய்ய வேண்டும். அப்போது சிவன் உனக்கு அருள் செய்வார் என்று சொல்லி அவரை அனுப்பி வைக்கிறார். கைகூப்பிவணங்கி ஜகதேவன் பசவன்னாவை அழைக்கிறார். அப்பொழுது பசவன்னா மறுபடியும் பக்தர்களோடு சேர்ந்து ஜெகதேவன் வீட்டிற்கு சென்று அவர் செய்த உபசாரங்களால், மகிழ்ச்சியடைந்தார். பக்தர்கள் அனைவரும் சுகமாய் இருந்தனர்.

## சிவபக்தர்களான அல்லய்யா, மதுபய்யா ஆகியோர்களின் கதை

அல்லய்யா, மதுபய்யா என்ற இரண்டு சிவபக்தர்கள் சங்கமர்களை ஆராதனை (வழிபாடு) செய்துகொண்டு, பசவண்ணாவுடன் கல்யாண கடகம் என்னும் ஊரில் வாழ்ந்து வந்தனர். இவர்கள் வாழ்ந்த நாட்டை ஆட்சி செய்த 'பிஜ்ஜலன்' என்னும் அரசன் பசவண்ணாவுடைய மகிமைகளைத் தெரிந்திருந்தும், பிறர் கூறிய அவதூறுகளைக் கேட்டு, அல்லய்யா, மதுபய்யா என்ற இரண்டு சிவனடியார்களை அழைத்து, அவர்களிடம் எந்தவொரு தவறும் இல்லாத பொழுதும், அவ்விருவருடைய கண்களையும் பறித்தான். இச்செயலைக் கண்ணுற்ற அந்நாட்டு மக்கள் எல்லோரும் அவ்வரசன் மீது கோபம் கொண்டனர். சிவபக்தர்களுடைய மகிமைகளைத் தெரிந்தும் அவ்வரசன் அவர்களுக்குத் தீங்கிழைத்துத் தனக்குத் தானே அழிவைத் தேடிக்கொண்டு விட்டான். சிவபக்தர்கள் கோபம் கொண்டுவிட்டால் உலகம் எல்லாம் அழிந்து விடுமே! இனி இந்த நாட்டில் வாழ்வது என்பது உகந்த ஒன்றல்ல என அந்நாட்டு மக்கள் முடிவு செய்தனர். பசவண்ணாவின் அருளால் அல்லய்யா, மதுபய்யா இருவரும் தாமிழந்த கண்களை மீண்டும் பெற்றனர்.

இதனையடுத்து சிவபக்தர்கள் ஜெகதேவ மந்திரியை அழைத்து, "மந்திரியாரே, நீங்கள் இதற்கு முன்னர் செய்த சபதமானதை நிறைவேற்றுவதற்கான உகந்த நேரம் வந்துவிட்டது. சிவதுரோகியான பிஜ்ஜலனைக் கொன்றுவிடுங்கள்" என ஆணையிட்டனர், இதனுடன் மடிவாலு மாச்சய்யா, சௌடராயடு, ஏகாந்த ராமையா, சின்னர பிரம்மய்யா, கேசி ராஜய்யா, கன்னட பிரம்மய்யா, கக்கையா, மாதி ராஜய்யா, மசனய்யா போன்ற சிவ பக்தர்களும் பிஜ்ஜல ராஜனின் ஆட்சி அழிந்துபட வேண்டும் என்று சாபம் இட்டனர். பின்னர், பசவண்ணா முன்செல்ல அவரைப் பின்தொடர்ந்து எல்லா சிவபக்தர்களும் சங்கமேஸ்வரம் சென்றடைந்தனர். சிவபக்தர்கள் ஊரைவிட்டகன்ற காரணத்தினால் கல்யாண கடகமே வளங்குன்றிப் போனது. இதனுடன் அந்நாட்டில் பூகம்பம் ஏற்பட்டது; நள்ளிரவில் காக்கைகள் கரைந்தன; ஆக்கி வைக்கப்பட்டிருந்த உணவுப் பண்டங்கள் அனைத்தும் கெட்டன;

கல் மழை பொழிந்தது; சூரிய சந்திரர்கள் தம் சோபையை இழந்தனர்; நாடே இருளில் மூழ்கியது; ராஜாவானவன் தமது தலையற்ற உடலின் நிழலைக் கண்டான். இதுபோன்ற துர்நிகழ்வுகளைக் கண்டு, மக்கள் எல்லோரும் அதிர்ச்சியில் ஆழ்ந்திருக்கும் பட்சத்தில் ஜகதேவர் அவர்தம் வீடுவந்து சேர்ந்தார். வீடு வந்து சேர்ந்த மகனைக் கண்ட அவரின் பெற்றோர்கள், சிவபக்தர்களுக்கு யார் தீங்கிழைக்கிறார்களோ அவர்களை, அந்த இடத்திலேயே கொன்றுவிட வேண்டும்; அப்படியில்லையெனில் அவ்வாறு செய்ய இயலாதவர்கள் தம்முயிரை மாய்த்துக் கொள்ளவேண்டும். இது சிவபக்தர்களுக்கான தலையாய கடமையாகும். தம் கடமையிலிருந்து தவறியவர்களைச் சிவன் மன்னிப்பாரா? சிவபக்தர்கள் எல்லோருமாகச் சேர்ந்து உனக்கிட்ட ஆணையை நீ இதுவரை நிறைவேற்றவில்லை. இக்காரியத்தை அவர்கள் தம்மால் செய்ய முடியாமலா உன்னிடம் ஒப்படைத்தனர்? அந்தச் சிவபக்தர்களில் ஒருவர் கோபமுற்றாலும் இவ்வுலகமானது தூள் தூளாகி அழிந்துபடாதா? மதங்கொண்ட தக்சனின் யாகத்தைக் காணவந்த தாட்சாயினை அவன் அவமதித்ததால், கோபமுற்ற தாட்சாயினி, அக்கோபத்தீயிலேயே மாய்ந்து போன செய்தியை நீ கேள்விப் படவில்லையா? அதுமட்டுமன்றி 'உபமன்யு' என்ற சிவபக்தன் சிவநிந்தையைப் பொறுக்க முடியாமல் அவ் இடத்திலேயே சாம்பலானான் அல்லவா? ஆனால் நீயோ தற்போது சிவநிந்தையைக் கேட்டும் எதுஒன்றும் செய்யாமல் இருக்கிறாயே? திருட்டுத்தனமாக சிவப்பிரசாதத்தைத் தின்னவந்த நாயைப் போல வெக்கமின்றி நீயும் இங்கு வந்தாயா? எனக் கோபமுற்றுக் கேட்டு, வீட்டினுள் வைத்திருந்த சிவப்பிரசாதத்தை எடுத்து வந்து நாய்க்கிடுவது போன்று தரையிலிட்டனர். இதனைக் கண்ட ஜெகதேவன், நீங்கள் என்னிடம் கோபமாக நடந்துகொள்ளும் செயலானது நியாயமானதுதான் என்று கூறி, தரையிலிடப்பட்ட சிவப்பிரசாதத்தை எடுத்து உட்கொண்டான்.

அன்று நள்ளிரவில் மல்லய்யா, பிரம்மய்யா என்ற இரண்டு சிவபக்தர்கள் ஜெகதேவனைக் காணவந்தனர். பின்பு மூன்று பேரும்

பிஜ்ஜலனின் அரச மண்டபத்திற்குச் சென்று, அவையோர்கள் அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே பிஜ்ஜலனின் தலையைக் கொய்து எடுத்து, அவனது வயிற்றின் மீதே வைத்து, அதனைச் சின்னாபின்னமாகச் சிதைத்தனர். இத்துடன், சிவபக்தர்களுக்கு யாரொருவர் தீங்கு இழைக்கிறார்களோ அந்தப் பாவிகளின் கதியும் இதே நிலையைத்தான் எய்தும் எனவும் நுழுரைத்தனர். இதனைக் கண்ணுற்ற ஏனைய சிவபக்தர்கள் அனைவரும் அம்மூவரையும் உளமாறப் பாராட்டினர்.

பின்னர், உயிர்நீத்த பிஜ்ஜலன் தமது பரிவாரங்களுடன் எல்லோரும் ஆச்சரியப்படும் விதத்தில் விமானம் மூலம் சிவலோகம் சென்றடைந்தான். எஞ்சியிருந்த அவனது படைவீரர்கள் அனைவரும் தம்முள்ளேயே ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொண்டு உயிர் துறந்தனர். அத்துடன் யானை, குதிரைப் படைகள் அனைத்தும அழிந்துபட்டு மண்ணில் சாய்ந்தன.

பசவண்ணாவின் சாபத்தினால் மேற்கண்ட வகையில் கல்யாண கடகம் சர்வ நாசமடைந்தது. சங்கமேஸ்வரத்தில் பசவண்ணா சீடர்களுடன் சேர்ந்து, தமது குருநாதரான சங்கையா தேவுடுக்குச் சேவை செய்து வந்தார். அத்தருணத்தில் பசவண்ணா ஒரு நாள் தன் குருநாதரைப் பார்த்து, குருவே! தங்களுடைய கருணை நிரம்பிய அருளால் நான் உயர்வான நிலையைப் பெற்றுள்ளேன்; நீங்கள் என்னுடைய அனைத்து விருப்பங்களையும் நிறைவேற்றியுள்ளீர்கள்; இனி, எனக்கு எந்தவொரு வரமும் தேவையில்லை. எனவே என்னை உங்களுடன் தயைகூர்ந்து ஐக்கியமாக்கிக் கொள்ளுங்கள் என வேண்டினார். இவ்வாறு வேண்டித் தம் திருவடிகளை பணிந்த பசவய்யரவை சங்கையா தேவுடு தம் இரு கைகளை நீட்டி அழைத்து, தம் இதயம் குளிர அணைத்துக் கொண்டார். பின்னர் அவ்விருவரும் கோயிலுக்குள் சென்றனர். சிவபக்தர்கள் அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே கோயிலுக்குள் சென்ற அவ்விருவரும் மாயமாக மறைந்தனர். மாதிராஜய்யா, மாசி தேவய்யா போன்ற சிவபக்தர்கள் அவ்வதியசத்தைப் பார்த்து ஆனந்தப் பரவசமடைந்தனர்.

பசவண்ணாவுக்கு பிறப்பு, இறப்பு என்பதே இல்லை. காற்றினிலே தோன்றும் சுழலானது மீண்டும் காற்றிலேயே மறைந்து விடுவது போலவும். கடலிலே பிறந்த அலையானது மறுபடியும் கடலிலேயே கரைந்து விடுவது போலவும். ஆகாயந்தனில் பிறந்த மின்னலானது திரும்பவும் ஆகாயத்துள்ளேயே கலந்து விடுவது போலவும், மழை நீரில் பிறந்த பனிக்கட்டியானது அதனுள்ளேயே ஐக்கியமாகி விடுவது போலவும். பசவண்ணாவானவர் அவர்தம் குருவினது அன்பினால் பிறந்து, ஆதரவினால் வளர்ந்து, அவரது இதயத்தில் நிறைந்து, அவருடைய அருட்கடாட்சத்தால் சிவனுள் ஐக்கியமானார். குருவினுடைய திருவடிகளை யாரொருவர் உண்மையுடன் பணிகின்றார்களோ. அந்தப் பக்தர்களின் இதயத்தில் பசவண்ணா எப்பொழுதும் நிலையாக வீற்றிருப்பார். ஈஸ்வரனுடைய அவதாரமாக அவதரித்த அவர், உண்மையில் பக்தர்களின் நலனுக்காகவேப் பிறந்தார் என்று பக்தர்கள் அனைவரும் பசவண்ணாவைப் புகழ்ந்தனர்.

சிறந்த சிவபக்தரான பசவண்ணாவுடைய கதையைச் சிவபக்தர்களின் வாயிலாகவேக் கேட்டு, என்னால் இயன்ற அளவிற்கு கூறியுள்ளேன். சிவனாலேயே கண்டுகொள்ள முடியாத மகா பக்தரான, பசவண்ணாவுடைய அதிசயம் நிறையப் பெற்றக் கதையை, வர்ணித்துக் கூறுவதற்கு நான் எந்தளவிற்குத் தகுதி உடையேன்!

பசவ புராணத்தை யாரொருவர் கேட்டாலும் படித்தாலும் எழுதினாலும் அவர்களுக்குச் சிவனானவன் தம் கருணைக் கடாட்சத்தை அருளுவான்.

மேன்மை பொருந்திய சங்கனா மாத்தியார் அவர்களே! சிவபக்தர்களுடைய பாதத்தாமரைகளில் உள்ள மகரந்தங்களைப் பெற்றிடும் பொருட்டு, அதனையேச் சுற்றிச் சுற்றி வருபவரும், எப்பொழுதும் சங்கமர்களுடைய சன்னதியிலேயே இருப்பவரும், கரஸ்தலி விஸ்வநாதருடைய சீடருமான 'பால குறிக்கி' சோமநாதர்' எழுதிய 'பசவ புராணத்தின் ஏழாவது அத்தியாயம்' இத்துடன் இனிதே நிறைவுற்றது.



# BASAVA PURANAM

By Palakuriki Somanathudu

12th Century Telugu Veera Saiva Poet

பாலகுறிக்கி சோமநாதரின் நூல்களில் முதலிடம் பெறுவது பசவ புராணமாகும். நந்தி தேவனுடைய அவதாரம் என்று வீரசைவ சமயத்தாரால் போற்றப்படும் பசவண்ணாவின் வாழ்க்கையை விளக்குவதே 'பசவ புராணம்'. இத்துடன் சைவ அடியார்கள் எழுபத்தைந்து பேர்களுடைய வரலாறும் கதையாகக் கூறப்பட்டுள்ளது. கண்ணப்பன் கதை, சிறுத்தொண்ட நம்பி கதை போன்ற கதைகளை பக்திச் சுவை ததும்பப் படைத்துள்ளார். மக்களின் வழக்கில் உள்ள கதைகளை எடுத்துக்கொண்டு அவற்றிற்கு இலக்கிய வடிவம் கொடுத்துள்ளார்.